# வசந்தம் மலர்ந்தது

(நாவல்)

வல்லிக்கண்ணன்

காலம் வேகமாக ஓடுகிறது. அது ஓடுகிற வேகத்தில் எங்கும் எவ்வளவோ மாறுதல்களை விதைத்துக்கொண்டே போகிறது.

காலவேகத்தில் நாடுகளிலும், மனித சமூகங்களிலும் மாற்றங்கள் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன. அரசியல் ரீதியில் புதுமைகளும் புரட்சிகளும், ஆட்சி மாறுதல்களும் ஏற்படுவது பளிச்செனப் புலனாகும். அதே சமயத்தில், மக்களின் வாழ்க்கை முறைகளில், நம்பிக்கைகளில், பழக்க வழக்கங்களில் மெதுமெதுவாக நிகழ்ந்து வருகிற மாற்றங்கள் போதிய கவனிப்பைப் பெறாமலும் போகின்றன.

ஒவ்வொரு நாட்டிலும் தலைமுறைக்குத் தலைமுறை, பல விதமான புறக்காரணங்களினாலும் அக உந்துதல்களாலும், மக்களின் நோக்கில், கருத்தில், எண்ணங்களில், செயல்களில் எல்லாம் எவ்வளவோ பாதிப்புகள் ஏற்பட்டு மாற்றங்கள் மலர்ந்துள்ளன; மலர்ந்தும் வருகின்றன. விஞ்ஞான கண்டு பிடிப்புகளும், நாகரிக சாதனங்களும், கல்வியும் சட்ட திட்டங்களும் அலை அலையாய் பரவி வருகிறபோது, மனித சமூக வாழ்வும் தனி மனித வாழ்க்கையும் பலவிதமான மாறுதல்களையும் அனுபவிக்க நேர்வது 'வழுவல; கால வகையினானே!'

இவ்வாறு காலம் நிகழ்த்தி வருகிற சமூக, தனி மனித, நாட்டு ரீதியான மாற்றங்களை, புதுமைகளை, தேய்வுகளை,

தாழ்ச்சிகளை, வளர்ச்சிகளை எல்லாம் பற்றி ஆராய்ச்சிகளும், சிந்தனை நூல்களும் வெளிவருகின்றன. சமூக ஆய்வாளர்களும், மனிதகுலப் பிரச்னைகள் பற்றி சிந்திக்கிறவர்களும் வரலாற்று ஆர்வம் உடையவர்களும், தங்கள் தங்கள் நோக்கில் அணுகி அலசி, எழுதிவைக்கிறார்கள். அரை நூற்றாண்டு முடிந்ததும், 'நூற்றாண்டில் திருப்பம்' என்றும், பத்துப்பத்து வருஷங்கள் நிறைந்தவுடன் அக் காலகட்ட நிகழ்ச்சிகளை மக்கள் மனோபாவ வளர்ச்சிகளைக் கணித்தும் பலப்பல நூல்கள் வெளியிடப்படுகின்றன. இதர நாடுகளில் தான்.

இந்தியாவில் இந்த ரகமான முயற்சிகள் நடைபெற்றுள்ளதாக—நடைபெற்று வருவதாக—எனக்குத் தெரியவில்லை. தமிழில் இவ்வித நூல்கள் தலைகாட்டவே இல்லை என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும்.

தமிழ்நாட்டில் மக்கள் வாழ்விலும், பண்பாட்டிலும், மனோபாவத்திலும் காலம் நிகழ்த்தி வந்துள்ள மாற்றங்கள் குறைவானது அல்ல. சமூகங்களின் உயர்வு தாழ்ச்சிகளிலும் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் எத்தனை எத்தனையோ.

பொருளாதார பலத்தினால் செழிப்புற்று வசதியாகக் காலம் ஓட்டி வந்த சில சமூகங்கள் மதிப்பிழந்து போயின. தொழில், வியாபாரத் துறைகளில் வெற்றி கண்டு, பணபலம் பெற்று சில சமூகங்கள் முன்னுக்கு வந்துவிட்டன. பிறப்பினால் உயர்வு பேசி, சகல வழிகளிலும் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்துவதில் ஆர்வம் காட்டிய சில சமூகங்கள், கால வேகத்தில் மக்கள் மத்தியில் மலர்ச்சி பெற்ற அரசியல் விழிப்பு, அறிவு விழிப்பு காரணமாக, வலு குறைந்து செல்வாக்கு குறைந்து, செயலிழந்து காணப்படுகின்றன. தொழில் வாய்ப்புகளும், உத்தியோகவசதிகளும் செய்துதருகிற தாராளப் பணப்புழக்கம் காரணமாக பலரது குடும்ப வாழ்விலும், தனி மனித மனோபாவத்திலும் விரும்பத்தக்கனவும் வேண்டத் தகாதனவுமான பலப்பல மாற்றங்கள் தலையெடுத்துள்ளன.

சமூக வாழ்வில், குடும்பநிலையில், தனி நபர் நோக்கில் உள்ளூறப் பரவிவந்துள்ள இந்தவிதமான மாறுதல்கள் போக, மேலோட்டமாகப் பார்க்கிறவர்களுக்குக்கூடப் பளிச் செனப் புலனாகும் மாறுதல்கள் எவ்வளவோ பிறந்துள்ளன. ஒரு தலைமுறை காலத்திற்குள்ளாக நிகழ்ந்தவை மிகப்பல. 1947-ம் வருஷத்துக்குப் பிறகு பரவியுள்ள மாறுதல்கள்கூட அதிகமானவைதான்.

இன்று சகஜமாகவும் சர்வசாதாரணமாகவும் காணப்படுகிற பல விஷயங்கள் அபூர்வ அதிசயங்களாக மக்களுக்குக் காட்சி அளித்த காலமும் உண்டு; அவை அடியோடு இல்லாமலே இருந்த காலமும் உண்டு. இது 'பன்னெடுங்காலத்துக்கு முந்திய வரலாறு' அல்ல; முப்பது முப்பத்தைந்து வருஷங்களுக்கு முந்திய சம்பவம்தான் என்பது இன்றையத் தலைமுறையினருக்கு நம்புவதற்குச் சிரமமான விஷயமாகக்கூடத் தோன்றலாம்.

உதாரணத்துக்கு, எலெக்ட்ரிக் விளக்குகளையே குறிப்பிடலாமே. இப்போது, பிறக்கிற குழந்தைகள்கூட எலெக்ட்ரிக் வெளிச்சத்திலே தான் கண்விழிக்கின்றன! ஆனால், முப்பத்தைந்து நாற்பது வருஷங்களுக்கு முன்பு தமிழ்நாட்டின் பல பெரிய நகரங்களில்கூட எலெக்ட்ரிக் லைட் எட்டிப் பார்த்ததில்லை. முனிசிபல் நகரங்களில் 'கியாஸ் லைட்டுகள்' குறைவாகவும், லாந்தர் கம்பங்களின் மீது ஏற்றி வைக்கும் மண்ணெண்ணெய் விளக்குகள் மிகுதியாகவும் தெருவிளக்குகளாகக் காட்சி தந்தன.

சிற்றூர்களிலும் கிராமங்களிலும் வெறும் கல்தூண்கள் மட்டும் நின்ற காலமே அதிகம். சந்திகளில் நின்ற கம்பங்கள் மீது, வெளியூர் வண்டிக்காரர்கள் தங்கள் சோற்றுச் சட்டியையும் 'நோக்கால் குச்சி'களையும் பாதுகாப்பாக வைப்பார்கள். அப்படி அவர்கள் வைப்பதற்கு வசதியாக அக்கம்பங்கள் நிறுத்தப்பட்டுள்ளனபோலும் என்று 'வருங்கால ஆராச்சியாளர்'களும், உண்மை விஷயம் அறியாத சிறு பிள்ளைகளும்

எண்ணக்கூடும் என்று ரசிகமணி டி. கே. ஸி. வேடிக்கையாக ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறார்.

காலப் போக்கில், வழக்கொழிந்து போகிற சில பழக்கங்கள், நிகழ்ச்சிகள், விஷயங்கள் வகையரா பிறகு புரியாதவையாகவும் வேடிக்கையாகவும் தோன்றுவது இயல்புதானே!

இப்போது, எலெக்ட்ரிக் விளக்குகள் இல்லாத கிராமங்கள் தமிழ்நாட்டில் மிகக்குறைவாகத்தான் இருக்கும். சினிமாவைப் பற்றி அறியாதவர்கள் இரார் என்றே சொல்லிவிடலாம். பஸ் போக்குவரத்து நாட்டின் மூலைக்கு மூலை நெடுகிலும் கிளை கிளையாய் படர்ந்து பரவியுள்ளது.

இதனுல் எல்லாம் மக்களின் நோக்கிலும் போக்கிலும் எவ்வளவோ பாதிப்புகள் ஏற்பட்டுள்ளன. கல்வி, தொழில், பொருளாதாரம் ஆகியவற்றின் வளர்ச்சிகள் சமூக நோக்கிலும் மனித மனப்பண்பிலும் புதுமைக் கருத்துகளுக்கு இடம் செய்து தருகின்றன.

இருபத்தைந்து முப்பது வருஷங்களுக்கு முன்பு நாடக நடிகர்களுக்கு இந்நாட்டில் கௌரவமும் சமூக அந்தஸ்தும் இருந்ததில்லை. நடிகர்கள் 'கூத்தாடிகள்' என்றே கருதப்பட்டனர். அவர்களுக்கு 'கலைஞர்கள்' என்ற கௌரவமும், விசேஷ மதிப்பும் பிற்காலத்தில்தான் ஏற்பட்டன.

முன்பு நாடகங்களில் ஈடுபட்டவர்கள் பெரும்பாலும் தனிப்பட்ட ஒரு குலத்தில் தோன்றியவர்களாகவே இருந்தார்கள். அக்குலத்தில் வந்தவர்களோ ஆடலையும் அபிநயத்தையும் தங்கள் 'குலத்தொழில்' வளர்ச்சிக்குப் பயன்படக்கூடிய சாதனங்களாகவே கருதிஞர்கள். ஆண்களின் உடல் பசிக்கு திருப்தி தரும் தொழிலைக் குலதர்மமாகக் கொண்டிருந்த இனம் சட்டம், சமூக சீர்திருத்தம் ஆகியவற்றின் துணையிஞல் அகற்றப்பட்டுவிட்டது. இதுவும் சமீபகாலத்தில் ஏற்பட்ட மாறுதல்தான்.

இப்படி சட்டபூர்வமான, சமூக ரீதியான, மாறுதல் வருவதற்கு முன்னரே—அல்லது, அதற்கான சூழ்நிலை உருவாகிக் கொண்டிருக்கிறபோது—தனிநபர்கள் சிந்தனையிலும் மனப்பண்பிலும் ஒருவித மாற்றம் படிப்படியாய் தலைகாட்டி வந்தது. அது இயல்பு. மனித சுபாவம்.

அதே சமயத்தில், தனிநபர்களின் மாறுதலை—சமூகரீதியில் படிந்துபோன சுவட்டிலிருந்து வழிவிலகிப் புதியபோக்கில் அடி எடுத்துவைக்க முயலும் புதுமையை, துணிச்சலை விரும்பாதவர்களும் வரவேற்காதவர்களும், ஆதரிக்காதவர்களும் இருப்பதும் இயல்பேயாகும். இவர்கள் எதிர்ப்பு காட்டியும், மாறும் முயற்சிகளை முறியடிக்க ஆவன செய்தும், தங்கள் சுயநலத்துக்கு லாபம்தேட முயலுவதும் எக் காலத்திலும், எந்நாட்டிலும் காணக்கூடிய உண்மைகள் தான்.

இவ் விதமான சமூக விவகாரங்கள், காலம் செய்கிற மாறுதல்கள், குடும்பச் சித்திரங்கள், தனி மனித உணர்ச்சிப் போராட்டங்களை எல்லாம் சுவாரஸ்யமான நாவல்களில் பிரதிபலித்துக் காட்டவேண்டும் என்ற ஆசை, நான் எழுத்தாளன் ஆகத் துணிந்த காலம்முதலே, என்னைப் பற்றிக் கொண்டுள்ளது. அத்துடிப்பினுல் நான் பல நாவல்கள் எழுதினேன். என்ருலும், நாடு, சமூகம், குடும்பம், தனிநபர் மத்தியில், நம்மிடையே, காலம் நிகழ்த்தியுள்ள மாறுதல்களை, பாதிப்புகளை, விசித்திரங்களை, வேடிக்கைகளை பெரும் அளவுக்குப் பிரதிபலித்துக் காட்டுகிற மகத்தான நாவலை நான் இன்னும் எழுதி முடிக்கவில்லை. என்ருவது ஒருநாள் உருவாக்கிவிடுவேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

'வசந்தம் மலர்ந்தது' எனும் இந்நாவல் 'மூடுபனி' என்ற பெயரில் 'சிவாஜி' வார இதழில் பிரசுரமாயிற்று.

சிறு ஊர்களில், பணபலமும் 'வாயடியும் கையடியும்' பெற்று சமூக அந்தஸ்தோடு மேல் தட்டில் இருப்பவர்கள், தங்கள் சுயநலத்துக்காக, தன்னல வெறியோடு எதையும் செய்வார்கள்; யாருக்கும் எந்தவிதமான தீமையையும் செய்

யத் தயங்கமாட்டார்கள். அவர்களுடைய சிறுமைப் புத்தியை, கயமைக் குணத்தை, கொடிய செயல்களை திரையிட்டு மறைக்கும் மூடுபனியாக அவர்களது அந்தஸ்து, குலப் பெருமை, பணபலம், பெரிய மனிதப்பட்டம் எல்லாம் துணை நிற்கின்றன என்பதை பண்ணையாரின் செயல்கள் மூலம் சித்திரிக்க முயன்றுள்ளேன்.

ராஜத்தின் புதுவாழ்வை உணர்த்தும் முறையில் அது 'வசந்தம் மலர்ந்தது' என்ற புதுப்பெயர் பெற்றிருக்கிறது இப்போது.

இந் நாவலுக்கு புதுப்பெயரும் புத்தகவடிவமும் தந்துள்ள 'கலைஞன் பதிப்பகம்' அதிபர் மாசிலாமணி அவர்களுக்கு என் நன்றி உரியது.

வல்லிக்கண்ணன்

## 1. சிரித்தது செந் தீ

இரவு 11 மணி இருக்கும்.

எங்கும் இருள். இருளிடையே பழுத்த ஒளிக் கனி போல எலெக்ட்ரிக் லைட்டுகள் சிரிக்காத செங்குளம் ஊரில் கனத்து கவிந்திருந்தது இருட்டு. தெரு மூலைக்கு மூலை பகட்டாக வெளிச்சம் போடுகிற 'கேஸ் லைட்டுகள்' கூட அங்கு இல்லை.

பொதுவாக பெரிய பெரிய நகரங்களிலேகூட தாராளமாக எலெக்ட்ரிக் லைட் கால் பாவாத காலம் அது. சினிமாக்கள் மக்களுக்கு இரவிலே வேலை கொடுக்காத காலம். சில நகரங்களில் எப்போதாவது 'பயாஸ்கோப்' என்று துணியிலே நிழலாடும் அற்புதத்தை மலர வைத்துக் காட்டிய பருவம்.

நாகரிகம் வளர்ந்துகொண்டிருந்தது. போது ஆகிப் பூவாகவேண்டிய அரும்பு நிலையில்தானிருந்தது நாகரிகம்.

ரயிலும் காரும் நாகரிக இறக்குமதி செய்துகொண்டிருந்த நகரங்களிலேயே அப்படியென்றால், ரயில் நிலையத்துக்குப் பத்து மைல் தள்ளியிருந்த — ஒரு நகரத்துக்கும் மற்றொரு முக்கிய நகருக்கும் காரோடும் பாதை நடுவிலிருந்த—செங்குளம் ஊரில் நாகரிகம் முளைவிட்டுச் சிறிது தலைகாட்டிய ஆரம்பநிலையில் இருந்தது என்றால் அதில் வியப்பேதுமில்லை.

செங்குளம் பட்டிக்காடு அல்ல. 'பட்டிக்காடு மில்லை; பட்டணக் கரையுமில்லை' என்று சொல்வார்களே அதுமாதிரி 'இரண்டுங் கெட்டான்' நிலையிலிருந்த ஊரும் இல்லை. சாதா

ரண ஊர். சப்ரிஜிஸ்ட்ரார் ஆபீஸும், போலீஸ் ஸ்டேஷனும், ஏழாவது வகுப்புவரை உள்ள பள்ளிக்கூடம் ஒன்றும், சின்னப் பள்ளிக்கூடங்கள் இரண்டும், பெரிய பெருமாள் கோயில், பெரிய சிவன் கோயில், இன்னும் பல சில்லரைக் கோயில் களும், பெரிய குளமும், நீண்டு நெளியும் வாய்க்காலும் இருந் தன. அமைதியும் குடியிருந்தது அந்த ஊரிலே.

பகலிலும் அமைதி கொலுவிருக்கும் அவ்வூரில், இரவு ஏழு மணிக்கே நடுநிசி வாடை சூழும். தெருவுக்குத் தெரு இருளின் சிவப்புச் சிறு கண்கள்போல அந்தரத்திலே மினுக் கும் ஒளிச்சுடர்கள் உண்மையில் பஞ்சாயத்து போர்டார் தயவால் விழித்து நிற்கிற லாந்தக் கம்பங்களின் 'விளக்குச் சுடர்கள்தாம்! பஞ்சாயத்து போர்டாரின் சிக்கன மனே பாவத்தின் விளைவாக சிலசமயங்களில் விளக்குகள் எட்டு, எட்டரை மணிக்கே அவிந்து போவதும் உண்டு. 'விளக்கு இருந்து யாருக்கு என்ன பிரயோசனம்; நமக்காவது சீட்டாட் டத்துக்கு உபயோகப்படட்டுமே!' என்று, கண்ணுடி மூடி களுக்குள் அமர்ந்து கண் சிமிட்டி ஒளித்தவம் புரியும் சிறு விளக்கை தாராளமாக எடுத்துக்கொள்ளும் 'மைனர்ப் பிள்ளை'களும் உண்டு அந்த ஊரிலே.

மணி பதினென்று. அதனுல் இருள் ஆட்சி புரிந்துகொண் டிருந்தது அமைதியரங்கில்.

ஆனல், அன்று வழக்கத்திற்கு விரோதமாக—அந்த ஊர்ச் சரித்திரத்தில் சிவப்பு எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய சம்பவங்களில் ஒன்றுக—திடீர் திடீரென ஒளி சிரித்து மேலே பாயும். வானத்து நட்சத்திரங்களை பழிப்புக் காட்டுவதுபோல் பல வண்ணப் பொறிகள் தெறித்து அற்புத மாகக் கீழிறங்கும். வால் நட்சத்திரம் போலக் கிளம்பி 'புஸ்ஸ்' என்று மேலேறி நீந்தும் ஒளிக்கோடு ஒன்று. வாண வேடிக்கைகள் அழகுக்கோலம் ஒளிரச் செய்துகொண்டிருந் தது அடிக்கடி. அமைதியோடு உறங்கி அசைந்த காற்றில் நாதஸ்வர அலைகள் மிதந்து வந்தன; ஊரின் மூலைக்கு மூலை

பரவிக்கொண்டிருந்தன. ஊரின் பல பகுதிகளில் முடங்கிக் கிடந்தவர்களும் 'ஊர்வலம் தெற்குத் தெரு மூலைக்கு வந்து விட்டது' என்று அறிவித்தபடி.

தெற்குத் தெரு ஒரே ஒளிமயமாய் பகட்டும் ஆடைகள், படாடோபக்காரர்கள், கேஸ் லைட்டுகள்; ஆடும் ஆலிப் பொம்மைகள் (பூதங்கள்) பெண்ணையும் மாப்பிள்ளையையும் சுமந்த பிளஷர் கார், பூ மணம், பன்னீர் வாசனை, மத்தாப்பு நாற்றம் எல்லாம் குழம்பிய நாடக மேடையாக மிளிர்ந்து கொண்டிருந்தது. ஊர்வலம் நின்று நின்று, அவசரம் எதுவு மற்ற கதியிலே ஊர்ந்தது.

சிறப்பான கல்யாணம் அது. 'பணத்தை பணம் என்று பாராமல் அள்ளி வீசியல்லவா கல்யாணத்தை முடிக்கிறுள் நீலாவதி!' என்று பேச்சு பிறந்திருந்தது.

'செய்யமாட்டாளா பின்னே! ராஜம் அவளது ஒரே பெண்தானே' என்றார்கள் சிலர் 'அவள் சேர்த்த பணத்தை எல்லாம் மகள் கல்யாணத்திலேயே கரைத்துவிடுவாள் போலி ருக்கு!'...'நீலாவதி தன் மகளுக்கு ஏது கல்யாணம் செய்யத் துணிஞ்சிட்டா? தன் குலமுறையையே மாற்றிவிட்டாளே'.. 'கல்யாணம் என்ன! பெயருக்குத்தான் இருக்கும் அப்புறம் தாயைப்போலவே...'-இப்படிப் பலவிதமான பேச்சுகளுக்கும் அஸ்திவாரமாக அமைந்த அந்தக் கல்யாணத்தின் ஊர்வலம் 'ஜாம் ஜாம்' என்று நகர்ந்து கொண்டிருந்தது.

பகட்டான விளம்பரச் சரக்குகளும் பளபளப்பு ஆடை களும் அணிந்து குலுக்கி மினுக்கி, சாதாரணப் பெண்களைப் பார்த்துச் சிரிக்கிற மத்தாப்பு சுந்தரிகளைப்போல, வானத்து வெள்ளிகளைக் கண்டு கண்ணடித்தன மேலேறி வெடித்துத் தெறித்த 'அவுட்டு'ப் பொறிகள், சிவப்பு, பச்சை, நீலம், என்று ஒளிகாட்டி வீழ்ந்தன. கறுகிச் சிதறி மறைந்தன.

ஊர்வலம் தெற்குத் தெரு மூலையைத் தாண்டியது.

ஊரின் ஒரு மூலையிலே ஒளி வீச்சு தெரிந்தது திடீரென்று. அந்தப் பக்கம் பூராவும் ஒளிப்பிரவாகம். வானை அளாவும் ஒளிப் பாய்ச்சல்.

'சிவன் கோயில் தெருவிலே எங்கோ தீப்பிடித்துவிட்டது போல் தெரியுது' என்றார் ஒருவர்.

அவர் குறி தவறவில்லை.

ஊர் மூலையிலே ஒளி வீச்சும் ஒலிக் கும்பலும் எழுந்து கலந்தன. 'தீ...தீ' என்ற சப்தம் பெருங்கூச்சலிடையே தெளிவாகக் கேட்டது.

ஊர்வலம் நின்றுவிட்டது. நாதஸ்வரம் ஒடுங்கியது. திடீர்ச் சக்தி எதுவோ கட்டுப்படுத்தி விட்டதுபோல அந்த அலங்கார, படாடோப அசைவு அப்படியே ஸ்தம்பித்து விட்டது.

ஊர்வலத்திலிருந்து சிலர் ஓடினர். பலர் வேக நடை நடந்தனர்!

தீ பிரமாதமாகக் கிளம்பி எழுந்து தாவுவதாகத்தான் தெரிந்தது. எங்கே? யார் வீட்டில் தீ?—இதே கேள்வி, வாய் திறந்து கேளாதவர் நெஞ்சத்தில் இதே உதைப்பு.

எல்லோரையும் 'ஆங்' என்று அலர வைத்தது ஓடிவந்த ஒருவனின் பேச்சு: 'கல்யாண வீட்டுப் பந்தல் தீப்பற்றிக் கொண்டது. பெரிய தீ!'

அவ்வளவுதான். எல்லோரும் விழுந்தடித்து ஓடினார்கள் சிவன் கோயில் தெரு நோக்கி. ஆமைபோல் ஊர்ந்த கார் வெறிகொண்ட மாடு மாதிரிப் பாய்ந்து திரும்பியது. வாண வெடிக்காரர்கள் போன இடம் தெரியவில்லை, பொய்க் குதிரையையும், ஆலி பொம்மையையும் ஒருவீட்டுத்திண்ணை யிலே போட்டுவிட்டு விழுந்தடித்து விரைந்தார்கள் ஆட்டக் காரர்கள். லைட்டுக்காரர்களும் திரும்பினர்.

உயரமாகப் போட்டிருந்த கொட்டகைப் பந்தல் நின்று எரிந்தது மூங்கில் 'சட்-சடார்' என்று வெடித்து எரிந்தது.

தீ நாக்குகள் அகோரப் பசியுடன் நீண்டு நக்கின. வெறியோடு தாவின. ஒளிமயப் பாம்புக் குட்டிபோல ஆயிரமாயிரம் தீக்கொழுந்துகள்! மின் மாதின் கர்வ நாட்டியம்போல ஒளிப் பிழம்பின் நடனம்! பந்தலுள் கிடந்த லஸ்தர்கள், குளோபுகள், சர விளக்குகள் எல்லாம் நொறுங்கி விழுந்து வெடித்தன.

'பிரப்பம் பாயில்லா! நின்று எரியும் சவம். லேசிலே தீப் பிடியாது. பிடிச்சா பேயால்லா எரியும்'

'எப்படித் தீப் பிடிச்சுது?'

'சர விளக்கிலே பிசகு ஏற்பட்டுப் பிடித்திருக்குமோ?'

'இல்லை. அவுட்டுப் பொறி வந்து விழுந்திருக்கும். இந்தப் பக்கமாக ஒரு வாணக் குழாய் பாய்ந்து வந்ததே.'

'ஆமா. அப்படித்தான் இருக்கும்.'

'இருக்குமென்ன! அதுதான் விஷயம்!'

'முடிவு கட்டிப்போடாதே ஐயா இப்படி லேசிலே. எவனுவது தீ வச்சிருந்தா?'

'கல்யாண வீட்டுப் பந்தலிலே போயி எவனுவது தீ வைப்பானு? நீ என்னடா...!'

'திடீர்னு தீ பிடிப்பானேன்?'

இவ்விதம் வீண் பேச்சுப் பேசிக் கொண்டிருந்தார்கள் பலர். வேடிக்கை பார்ப்பதிலும் வம்பளப்பதிலும் எல்லாருக்கும் உற்சாகம்தானே!

'தண்ணி...தண்ணி எடுத்து வா...ஏய், வீட்டிலே பற்றிக்கிடாமே பாருங்கோ...அணை சீக்கிரம்'—இப்படிப் பல கூச்சல்கள்.

செயலைவிட கூச்சல்தான் பலமாக இருந்தது. மற்றத் தெருக்களிலிருந்தும் 'திமு திமு' வென்று ஓடிவந்தார்கள் மனிதர்கள். தூங்கிக்கொண்டிருந்தவர்கள்கூட எழுந்து ஓடிவந்தார்கள்,

தாஸி நீலாவதி வீட்டிலே தீ' 'கல்யாணப் பந்தலிலே தீ வச்சிட்டான்' 'இல்லே. வாணப்பொறி பட்டு தீப்பிடித்துக் கொண்டதாம்.'—செங்குளம் ஊர் முழுலதும் கலகலத்தது.

தீ வெகுண்டு சீறிப்பாய்ந்து நெளிந்து தாவிக்கொண்டிருந்தது. பக்கத்திலுள்ள மரங்கள், கோயில் கோபுரம், வெறும் வெளி எல்லாவற்றையும் எடுத்துக்காட்டும் செவ்விய பகைப்புலஞகச் சிரித்தது செந்தீ!

'அம்மா!...அம்மா!' இதயம் அறுக்கும் அலறல்.

'கண்ணு! எனக்கு ஒண்ணும் நேரலியடீயம்மா!' என்று பாய்ந்து பற்றிஞள் மயங்கி விழ விழுந்த மணமகளே. நீலாவதிதான் பிடித்துக்கொண்டாள். 'ராஜம்...பயப்படாதே ராஜம்' என்று தேற்றிஞள்.

அந்த ஒளி வெள்ளச் சூழ்நிலேயிலே, பகட்டான ஆடையணிந்த விருந்தினர்கள் நின்றது தெரிந்தது. தகதகக்கும் ஜரிகைபட்டும், வைர நகைகளும் அணிந்து புதிய சித்திரம் போல் மினிர்ந்த மணமகளும், அவள் தாயும் மற்றவர்களும் கலவரமடைந்து நின்றது தெரிந்தது. வேடிக்கை பார்த்து நின்ற கும்பலின் விதவிதத் தோற்றங்களும் தெரிந்தது.

பரபரப்பு...சிரிப்பு...அனுதாபம்...கலக்கம்...பயம் எல்லாம் தெரிந்தன.

அடுத்த வீட்டுக்காரர்கள் தங்கள் வீட்டுக் கூரையில் தீ தாவிவிடக் கூடாதே என்று அவசரம் அவசரமாக ஓலேகளேப் பிரித்துப் போடுகிற 'வருமுன் காக்கும்' பண்பை வெளிச்சம் போட்டுக் காட்டியது செந்தீ.

குடம் குடமாக, வாளி வாளியாகத் தண்ணீர் வீசப்பட்டது. புகையும், ஒளி நாக்குமாக தீ குதித்தது. பலர் வெகுவாகக் கஷ்டப்பட்டு, நீண்ட மூங்கில்களேயும், தடிகளேயும் கொண்டு பந்தலே கால்களினுள் தள்ளினர். வீட்டில் தீ பாய்ந்துவிடாதபடி ஜாக்கிரயதையாக, அவசரம் அவசரமாகத் தண்ணீர் ஊற்றி அணேப்பதில் ஈடுபட்டனர்.

'இனிமேல் பயமில்லையம்மா! பெண்ணை வீட்டுக்குள்ளே கொண்டு போங்க' என்றது ஒரு குரல்.

ஆனால் யாரும் அசையவில்லை.

'நீலாவதி!' என்றொரு முரட்டுக் குரல் அதிகாரமாக வெடித்தது. முறுக்கு மீசையும், பட்டு லேஞ்சியும் பனியனும், வெள்ளிப்பிடிப் பிரம்புமாக நின்ற பெரிய மனிதரைக் கண்டு மற்றவர்கள் விலகினார்கள்.

'ராஜத்தை அழைத்துக்கொண்டு உள்ளே வா. மாப்பிள்ளை எங்கே? எல்லாரும் உள்ளே போங்க...வீண் கூட்டம் ஏன்? வீடு தேடிப் போய் படுத்துத் தூங்குங்க' என்று உத்திர விட்டு, நீலாவதிக்கு வழி காட்டிச் சென்று, வீட்டின் பின் வாசல் வழியாக உள்ளே புகுந்தார் அந்தச் 'சவடால்'

'யாரு இவரு' என்று முனங்கிய குரல் கொஞ்சம்தான். 'நம்ம பண்ணையாரா! ஸேர்த்தான். இனிமே அவரு கவலை தானே!' என்றார்கள் விஷயம் அறிந்தவர்கள்.

எல்லையினுள் முடக்கப்பட்ட தீ நின்றுஎரிந்து, ஒடுங்கியது. மேலும் மேலும் தண்ணீர் கொட்டினார்கள். தடியாலும் கழிகளினாலும் அடித்து, பேய்கூத்து புரிந்த தீயைக் கட்டுப் படுத்தினார்கள். அணைத்துவிட்டார்கள்.

என்றாலும் அங்கு பரபரப்பு குறையவில்லை.

செங்குளம் ஊரில் அமைதி—தூக்கம் கலந்த அமைதி— மறுபடி தனது நிலையை அடையவேயில்லை!

## 2. ஒளியும் இருளும்

பற்றியெரிந்து சீறிச் சிரித்த செந்தீயின் ஒளிமயக்கத்தில் புரண்டுவிட்டு, வீட்டினுள் புகுந்ததும் மனிதக் கண்கள் பார்வை மங்கித் தவித்தன கொஞ்சம் நேரம்.

மணமகள் ராஜத்தை அன்பாக அணைத்து மெது மெதுவாக அழைத்து வந்த நீலாவதிக்கு இந்தத் தற்காலிகக் குருடுதான் காரணம் என்றில்லை, அவள் தடுக்கி விழத் தெரிந்ததற்கு! அவள் உள்ளம் அதிர்ச்சியுற்றிருந்தது. சிந்தனை சிதறுண்டிருந்தது. பேயறைந்ததும் ஒரு மாதிரிப் பிரமையும் கலக்கமும் ஏற்படும் என்று சொல்வார்களே, அந்த நிலைமைதான் கவிந்திருந்தது நீலாவதிமேல்!

வாசல்படி தடுக்கி மகளோடு குப்புற விழவேண்டியவள், நல்ல வேளை, 'நீலா, பதனம்...பதனம்' என்று பதறிப் பாய்ந்து பிடித்துக்கொண்டார் பண்ணையார். 'பார்த்து நட. மெதுவாகக் கூட்டிப் போ' என்று 'டைரக்ட்' செய்து அழைத்துச் சென்றார். ராஜம் மயக்க நிலையில்தான் இருந்தாள். தூக்கத்தில் எழுந்து நடக்கிற வியாதிக்காரி மாதிரி நடந்தாள். அன்னையின் அணைப்பு இருந்ததனால்தான் நடக்க முடிந்தது. இல்லையெனில் விழுந்து கிடக்க வேண்டியவள் அவள்.

அவளை 'பூப்போல' எடுத்துச் சென்று ஒரு கட்டிலில் படுக்க வைத்தார் பண்ணையார். 'நீலாவதி, நீகூடப் படுத்துக் கொள்ளலாமே. உனக்கு ஓய்வு தேவை. விடிகிறவரை நிம்மதியாகப் படுத்துத் தூங்கு. காலையிலே மனம் சரியாப்

போயிடும்' என்று யோசனை சொன்னார். 'சூடா ஏதாவது சாப்பிடுறியோ? பால் குடியேன்' என்று உபசரித்தார்.

'வெள்ளிக் கூஜாவிலே பாலு காய்ச்சி வச்சது இருக்கு.'

அவள் பேச்சு அவரது ஞாபக சக்திக்கு 'ஸ்விட்ச்' போட்டது போலும்! 'அடடா!' என்றார் பதட்டமாக.

மேலும் ஏதோ ஆபத்தை எதிர்பார்த்தவளாய் திடுக்கிட்டு நோக்கினாள் நீலாவதி.

'கல்யாணத்துக்கு வந்த பரிசுச் சாமான்கள்—வெள்ளிப் பாத்திரங்கள் தாம்பாளம், கூஜாக்கள், பன்னீர்ச் செம்பு, டம்ளர்கள் இப்படி என்னெல்லாமோ வந்துதே—அவையெல்லாம் பந்தலிலேதானே இருந்தன. எல்லாம் தீயிலே உருகிப் போயிருக்குமே!' என்று அங்கலாய்த்தார்.

'இல்லை இல்லை. தீ கவிஞ்சு வரத்துக்குள்ளேயே அவற்றை அவசரம் அவசரமாக அள்ளி எடுத்து இரண்டாங் கட்டிலே போட்டிருக்கோம்' என்று ஒரு குரல் எழுந்தது. தீப் பிடித்தபோது அந்த வீட்டிலேயே இருந்தவர்களில் யாரோ பதில் கொடுத்தார்கள்.

'நல்லவேளை! இல்லைனா வீணாப் பொருள் நஷ்டமல்லவா ஆகியிருக்கும். இப்போ உயிர்ச் சேதமுமில்லை. பிரமாதமான பொருள் நஷ்டமும் இல்லை. எல்லாம் தெய்வத்தின் கிருபைதான்' என்று வேதாந்தம் பேசத் தொடங்கினார் பண்ணையார்.

'தெய்வ சோதனைன்னுதான் சொல்லணும்' என்று பெருமூச்செறிந்தாள் நீலாவதி, 'தீ எப்படிப் பிடித்தது?'

'என்னைக் கேளு நீ! நானா இங்கே இருந்தேன்! நான்தான் பட்டணப் பிரவேசத்து கூடவே போயிட்டேனே' என்றார் பண்ணையார்.

'எனக்கும் தெரியாது தான். பட்டணப் பிரவேசம் புறப்பட்டுப் போனதும் எனக்குத் தூக்கக் கிரக்கம். பகலெல்

லாம் வேலை செய்து, ஓடியாடி அலைஞ்ச அலுப்பு. தூங்கினுல் நல்லாருக்கும் போல் தோணிச்சு. பால் குடிக்கலியான்னு கேட்டத்துக்குக்கூட அப்பறம் பாத்துக்கிடலாம்னு சொல் லிப் போட்டு, தலையணை எடுத்து வைச்சுத் தலையைச் சாய்த் தேன். அவ்வளவுதான் தெரியும். நல்ல தூக்கம். எவ்வளவு நேரம் தூங்கியிருப்பேனே எனக்கே தெரியாது. அடிச்சுப் போட்ட மாதிரிக் கிடந்திருக்கேன். அவ்வளவு அசந்த தூக்கம்...'

'தூக்கம் சண்டாளன்லா சனியன். பக்கத்திலே என்ன நடக்கு, எது நடக்குன்னுகூடத் தெரியவிடாதே பிடிச்சுக் கிட்டு தூன்னு சொன்னு!' என்று பொன்மொழி உதிர்த்தது அருகில் இருந்த 'அனுபவம்' ஒன்று!

நீலாவதி கொட்டாவி விட்டுக் கொண்டு தொடர்ந்து சொன்னுள்: 'திடீர்ன்னு பாதாளத்திலிருந்து யாரோ கூப் பிடுற மாதிரிக் குரல் கேட்டுது. கனவிலே பேசுற மாதிரி, ஓடியாடுறது போல இருந்தது. யாரோ பலமாக உலுப்பி எழுப்பவும், திடுக்கிட்டுப் போயி எழுந்தேன். மேலெல்லாம் பதறுச்சு, பயங்கரமான சொப்பனம் கண்டு பதறி எழுந்தா எப்படி உடல் பூரா உதறி நடுங்குமோ, மனசு எப்படித் திக்கு திக்குன்னு அடிக்குமோ அப்படியிருந்தது. எங்கே பார்த் தாலும் ஒரே வெளிச்சம். சொக்கப்பனை கொளுத்தினு பக்கத் திலே எல்லாம் பளீர்னு தெரியுமே அது போல வெளிச்சம், கூச்சல், எனக்கு ஒண்ணுமே புரியலே. என்ன, பட்டணப் பிரவேசம் திரும்பிவிட்டதான்னு கேட்டேன். தீ, பந்தல்லே தீ என்று பதறிக் கூவினுங்க எல்லோரும். விழித்தேன். அப் புறம் என்ன? என்ன செய்றதுன்னே தெரியலே. அங்கேயும் இங்கேயும் அலைஞ்சோம். எல்லாரும் வெளியே போங்க... வெளியே வாங்க...என்று புடிச்சுத் தள்ளியும், இழுத்ததும் தான்...பிறகு தான் எல்லாம் உங்களுக்குத் தெரியுமே!'

நீலாவதி தனக்குத் தெரிந்ததைச் சொன்னுள். தீப் பிடித்தபோது வீட்டுள் இருந்த நாலைந்து பேரும் இதுபோல் எதையாவது சொல்லிக் கொண்டிருந்தார்கள். 'தீ எப்படிப்

பிடித்தது என்று தான் தெரியலே' என்று தான் ஒவ்வொரு வரும் சொன்னார்கள்.

'இதிலே என்ன தெரிய வேண்டியிருக்கு! அவிட்டு வாணக் குழாய் வந்து விழுந்து அணையாமலே கனிஞ்சிருக்கு. புகைஞ்சு புகைஞ்சு பளீர்னு பத்திக்கிடுச்சு...' என்று கூட யிருந்து கவனித்தவர் போல் விளங்கச் செய்தார் பண்ணை யார்.

ஒருத்தி கேட்டாள்: 'ஆமா, அப்படிப் புகைஞ்சுக்கிட் டிருந்தா தெரியாமலா போயிரும்!'

பண்ணையார் அவளது அசட்டுத்தனத்தால் கோபமுற்ற வர் போல் முறைத்தார்: 'ஹெ, என்ன பேச்சுப் பேசுதே நீ! வீட்டுள்ளே இருந்தவங்களும் விழுந்தடிச்சுப் படுத்துத்தூங் கினீங்க. பந்தல் உள்ளே யாராவது ஒன்றிரண்டு பேர் இருந்திருக்கலாம். அவங்ககூடத் தூங்கிக்கிட்டுத்தான் இருந் திருப்பாங்க, சத்தம் கேட்டதும் தான் எழுந்திருந்து மிரள மிரள முழிச்சிக்கிட்டு நின்றிருப்பாங்க. தெரியாதா! இந்த லெட்சனத்திலே யாரு பந்தல் உயரே பார்த்திருக்கப் போறுங்க? என்ன நான் சொல்றது?'

பண்ணையார் சொன்னது ரொம்பத் தெளிவாகப்பட்டது அங்கிருந்தவர்களுக்கு.

'இதைப் பத்தி போலீஸ்லே எழுதி வைக்கலாமா?' என்று யாரோ கேட்டார்கள்.

'எழுதி வச்சு என்ன செய்ய! யாராவது தீ வச்சிருந்தால் அல்லது தீ வைத்துவிட்டான் என்று யார் மேலாவது சந் தேகம் இருந்தால் எழுதி வைக்கலாம். இப்பதான் ஊர்க் காரங்க எல்லோருக்கும் தெளிவாத் தெரியுது, நம்ம ஏட் டய்யா கூடச் சொன்னுரு, வாணக் குழாய் வந்து விழுந்து தான் புடிச்சிருக்கு தீ அப்டீன்னு. தற்செயலான விபத்து. அதை யாரு தடுக்க முடியும்? தெய்வமாப் பார்த்து...'

பண்ணையார் பழைய கதியிலேயே பேச்சைத் திருப்பியது நீலாவதிக்குப் பிடிக்கவில்லை போலும்! பெருமூச்செறிந்து

'ஊம். நடந்ததோ நடந்து போச்சு, அதுக்கு என்ன செய்றது? ராஜம் கல்யாணம் இப்படி முடியும்னு யாரு கண்டா?' என்று முனங்கினுள்.

அவள் தன் மகள் கல்யாணம் தடபுடலாக ஆரம்பித்த வைபவத்தை எண்ணிப் பார்த்து மறுபடியும் பெருமூச்செறிந்தாள்! தனது ஒரே மகள் ராஜத்துக்கு கல்யாணம் செய்து பார்த்து விடுவது என்ற ஆசை எழுந்தது, மற்றவர்கள் தடை செய்தது, கேலிபேசியது எல்லாம் போகட்டும். அவற்றை அவள் பொருட்படுத்தியவள் அல்ல. கல்யாண ஏற்பாடுகள் ரொம்பப்பிரமாதம். கொட்டகைப் பந்தலில் அன்றுகாலையில் பெரிய மனிதர்களும், பணக்காரர்களும், உறவினர்களும்கூடி மிளிர்ந்த காட்சிதான் என்ன! அந்தி வானத்து வண்ண ஜாலங்கள்போல் டாலடிக்கும் விதவிதமான வர்ணப்பட்டுகள் மினுக்குதல்கள்! வாத்திய கோஷங்கள்! 'மணவறை' யிலே ராஜமும் அவளுக்கு ஏற்ற மணமகனும் ஜோடியாக இருந்த கண் கொள்ளாக் காட்சி! ஆகா...

எப்படி மனம் பூரித்துப் போயிருந்தாள் அவள். எவ்வளவு சந்தோஷம், எவ்வளவு பெருமை பொங்கி வந்தது அவளுக்கு! 'நீலாவதி மகளுக்கா கல்யாணம். அவ தாசி தானே!' என்று அலட்சியம் செய்யாமல் ஊர்ப்பிரமுகர்களும், பக்கத்து ஊரிலிருந்து பணக்காரர்களும், பெரிய மனிதர்களும் விஜயம் செய்து சிறப்புவித்த பெருமையை எண்ணி எண்ணி ஆயுள் பூராவும் மகிழ்ந்து போகலாமே என்று நினைத்திருந்தாள் அவள்.

மத்தியானம் நடந்த நலங்கு! ஊமத்தம்பூக் குழாய் நிமிர்ந்து நின்ற 'பூனைக் கிராப் பெட்டி' (என்ன இருந்தாலும் அவளுக்கு இன்னும் அந்தப் பெட்டி பெயரைச் சரியாகச் சொல்ல வரலியே என்ற எண்ணம் எழவும் அசட்டுச் சிரிப்பு நெளிந்தது உதட்டில்!) அந்தப்பெட்டி சுப்புத்தாயியும் சண்முகவடிவும் பாடிய பிளேட்டுகளை ஒலிபரப்பிக் கொண்டிருந்தது...

'திருச்செந்தூர் சண்முகவடிவு மாதிரி பிளேட் கொடுத்துப் புகழ்பெற வேண்டாமா உன் மகள்?' என்று பண்ணையார் கேட்ட கேள்வியும் அவள் மனதை உறுத்தாமல் இல்லை...

அந்த நலங்கு! வாண்டுக் குட்டிகளின் கூத்தாட்டம்... வந்து குவிந்த அன்பளிப்புகள்...பந்தலில் 'கியாஸ் லைட்டுகள்' ஏற்றியதும் முன்னால் வரிசை வரிசையாக அடுக்கி வைத்திருந்த வெள்ளிப் பாத்திரங்களின் மினுமினுப்பு...

எல்லாம் இனிய கனவு மாதிரித் தோன்றியது இப்போது. பிரத்தியட்ச உண்மையாக அவளை உலுக்கியது எகிறிப் பாய்ந்து ஒளி நாட்டியமாடி ஒடுங்கி இருந்த தீதான். அவள் கண்களைக் கூசச்செய்த தீயின் நினைவு உள்ளத்தைக் கறுக்கியது. அவள் பார்வை கட்டிலில் படுத்திருந்த ராஜத்தின்மேல் புரண்டது.

அவள் நெளிந்து புரண்டாள். தெளிவில்லாத, புரியாத, ஆனால் பக்கத்திலிருக்கிறவர்கள் உணர்வைக் கிளறி, உள்ளத்தை அறுக்கிற பயங்கரமான, கூச்சல் ஒன்றைக் கத்தினாள். வேதனையில் திண்டாடி, வேதனையின் தன்மையை வாய்விட்டுக் கதறிச் சொல்ல முடியாமல் ஊமையலறலாக ஒலிபரப்புகிற மிருகம் போல் கூச்சலிட்டாள்.

எல்லோரும் 'என்னது? என்ன?' என்று பதறிப்போய் கட்டிலருகில் ஓடினர்.

'புள்ளெ பயந்திட்டுது, பாவம், ஏதாவது துர்ச்சொப்பனம் கண்டிருக்கும்!' என்றார் பண்ணையார். எல்லோரும் 'ராஜம், ராஜம்' என்று கூவினர்.

அவள் திகைத்துப் போய் எழுந்து உட்கார்ந்தாள். அவள் தேகம் உதறலில் நடுங்கியது. அவள் பார்வை அர்த்தமற்று, தெளிவற்று, கலவரமும் தூக்கக் கிரக்கமும் கலந்து நெளிந்தது. அவள் தொண்டை அடைத்துக் கொண்டது போல் திணறினாள். பிறகு 'எங்...எங்...எங்கேருக்கேன் நான்?' என்று கேட்டாள்.

'வீட்டிலே தாம்மா இருக்கே, பயப்படாதே' என்று அவளை அணைத்துக் கொண்டாள் நீலாவதி. கட்டிலில் அவளருகில் அமர்ந்து, அவளைத் தன்மீது சாய்த்துக் கொண்டு அன்பாக வருடினாள். 'ஏ லக்ஷ்மி, அந்த வெள்ளிக் கூஜாவிலே பாலு காய்ச்சி வச்சது இருக்கும். அதை எடு. குழந்தை என்னமாப் பயந்திட்டுது! இன்னும் மேலெல்லாம் பதறி நடுங்குது பாரு' என்றாள். 'என்ன ராஜம், சொப்பனம் ஏதாவது கண்டியாம்மா?' என்று அன்பாக விசாரித்தாள்.

'ஊம்' என்று தலையசைத்தாள் ராஜம்.

'என்ன சொப்பனம்?'

பண்ணையார் குறுக்கிட்டார். 'இப்ப என்ன கேள்வி இது! புள்ளெ பதறி எழுந்திருச்சிருக்கு. இன்னும் நடுக்கம் திரலே. அதுக்குள்ளே அந்தப் பயங்கரத்தைத் திரும்ப நினைச்சுப் பார்க்கனுமா என்ன!'

வேலைக்காரி லக்ஷ்மி ஒரு டம்ளரில் பால் கொண்டு வந்து கொடுத்தாள். 'குடி கண்ணு. பயப்படாதே, நாங்கள் எல்லாம் தானிருக்கோமே' என்று தேற்றினாள் தாய். ராஜம் மெதுவாக டம்ளரைப் பிடித்து சாப்பிட்டாள். அவள் கைகள் இன்னும் நடுங்கின.

'ரொம்பப் பயந்து போனா, பாவம்! மங்கள நாளுமா அதுவுமா! ஊம். கல்யாணத் தன்னைக்கா இப்படியெல்லாம் வரணும்' என்று எண்ணிப் பெருமூச்செறிந்தாள் நீலாவதி.

சட்டென்று கடிகாரத்தைப் பார்த்த பண்ணையார் 'மணி ரெண்டரையாச்சா! சரி. எல்லாரும் படுத்துத் தூங்குங்க. தூக்கம் வராட்டாலும் கண்ணை மூடிக்கிட்டாவது படுத்துக் கிடந்தால்தான் நல்லது. நேரமாச்சு' என்றார். பிறகு 'ஆமா. மாப்பிள்ளை எங்கே? இவ்வளவு கலவரத்துக்கும் அவர் தலையே காட்டலியே என்ன! அசந்து மறந்து தூங்கறாரா என்ன! எங்கே படுத்தாரு அவரு?' என்று விசாரித்தார்.

'இங்கே தான்...அங்கே...அடுத்த அறையிலே!' இப்படி விளக்க மற்ற பதில்கள் வந்தன. ஆனால் ஆளைக் காணவில்லை. பண்ணையார் அறை அறையாகத் தேடிப் பார்த்தார். காணோம்.

'மாப்பிள்ளையைக் காணோம்!' என்றார் அவர். நீலாவதி யின் மனம் மீண்டும் துணுக்குற்றது. 'கோயில்லே கண்டாப் போய் படுத்திருக்காரோ என்னவோ' என்று யாரோ சொல்ல, சிலர் அங்குப் போய் பார்த்துவிட்டு 'ஊஹூம்!' என்று தலையாட்டியபடி திரும்பினார்கள்.

'என்ன எழவாப் போச்சுடா இது இன்னைக்கு!' என்று முனங்கினார் பண்ணையார். 'மாப்பிள்ளை எங்கேயாவது வெளியே போயிருப்பாரு. காலையிலே பார்த்துக் கொள்ள லாம். நான் வர்றேன். எனக்கும் ரொம்பக் களைப்பும் அசதியும் மேல்வலியுமா இருக்கு!' என்று சொல்லிவிட்டுத் தம் வீடு நோக்கிக் கிளம்பினார்.

நீலாவதிக்கு மன அமைதியில்லை. ராஜத்துக்கும் மற்ற வர்களுக்கும் மட்டும் அமைதி வந்து ஆனந்தமா அளித்து விடப் போகிறது! எல்லோரும் 'குறுகுறுன்னு' உட்கார்ந்து விட்டார்கள். எல்லோர் மனதிலும் ஒரே கதியில்தான் எண்ண அலை நெளித்து கொடுத்தது—

'சே! கல்யாண நாளுமா அதுவுமா இப்படியெல்லாமா வரும்!'

தெருவிலே குளிர்காற்று நீந்திக் கொண்டிருந்தது. பனி கனமாகப் பெய்தது. 'எழவு இந்த வருஷம் பனி ரொம்ப ஜாஸ்திதான்!' என்று தோளில் கிடந்த லேஞ்சியை எடுத்து தலையைச் சுற்றிப் போட்டுக்கொண்டு நடந்தார் பண்ணை யார்.

செங்குளம் கிராமம்—திடீரென்று பேரொளியிலே குளித் துத் தகதகத்த சிவன் கோவில் தெருவும் அதன் வட்டாரமும் பிறவும்—மயானம் போல் கிடந்தது. வானத்தில் வெளிறிய ஒளி பரவிக் கிடந்தது. விழித்து விழித்துப் பூத்துப்போன

கண்கள் போல் நட்சத்திரங்கள். அவற்றிடையே ஜாஜ்வல்ய ஒளி சிதறும் பெரிய வெள்ளி ஒன்று.

'விடி வெள்ளியா அது! இராதே! விடிய இன்னும் நேரம் கிடக்குதே' என்றது பண்ணையார் மனம். 'கெட்டி வெள்ளியாகத்தான் இருக்கும்!' என்று அனுபந்தம் இணைத்தது பிறகு.

கால் செருப்பு 'டப், டிப்' என ஒலிக்க வீடு நோக்கி நடந்தார் பண்ணையார். 'நீலாவதி நல்ல நல்ல கல்யாணம் நடத்தத் துணிஞ்சாளே மகளுக்கு?' என்று நினைத்தார். சிரித்தார். லேசாக வாய்விட்டுச் சிரித்தார்.

அவர் சிரிப்பை ரசிக்க அங்கு ஆள் தானில்லை!

## 3. கறுகிப் போனவை

கல்யாண அமர்க்களங்களில் ஆழ்ந்து, எதிர்பாராத விபத்துக்குட்பட்டு, சமாதி நிலை யடைந்த அந்த வீட்டில் புகையும் உள்ளத்தினராய்ப் புழுங்கியவர்கள் யாருமே தூங்க வில்லை. எப்படி உறங்க முடியும்?

அவர்களுக்காகக் காலம் காத்திருக்கவா போகிறது! அதன் வேகத்திலே ஓடிக்கொண்டிருந்தது அது. செங்குளம் ஊரைக் கறுந்திரைகொண்டு போர்த்தியதுபோல் மூடியிருந்த இருள் விலக விலக, ஆயிரமாயிரம் ஒளிமீன்கள் போல் நீந்திய வெள்ளிகள் வானக்கயத்தின் ஆழத்திலே அமிழவும், பக லொளி வெள்ளம் பாய்ந்து பரவ, ஊரிலே உயிர் சிலிர்த்துக் கொடுத்தது. மனிதர்கள் நடமாட்டம் ஏற்பட்டது.

இரவிலே எரிந்த வீட்டைப்பார்க்க வந்தவர்களும் வராத வர்களும் விடியற்காலம் அதன் நிலைமையை ஆராய வந்தார் கள். குளத்திற்கும் வாய்க்காலுக்கும் போகிற பாதையில் சிவன் கோவில் தெருவும், அதன் மூலை வீடான நீலாவதி அக மும் இருந்ததால் வேடிக்கை பார்க்க விரும்பியவர்களுக்கு வசதியாக இருந்தது. பார்த்தவர்களில் பலருக்கு ஏமாற்றம் தான்! 'வீடு புடிச்சு எரியலையா? பந்தல்தானு எரிஞ்சுது!' என்று புலம்பி விட்டுப் போனார்கள்.

பகலில் அழகும் மகிழ்வும் ஆடம்பரமும் கலந்து குழம்பிக் கலகலத்து, இரவில் பேரொளியிலும் பெரும் ஆராவாரத்தி லும் அடிபட்டுத்தவித்த வீட்டு முகப்பு—பந்தல் நின்ற, பிறகு எரிந்த இடம்—இப்போது கறுகிய கட்டைகளும் சாம்பலும்

கிடந்த குப்பைத் தொட்டியாகக் காட்சி அளித்தது. தீ நாக்கு வீட்டு முன் வாசல் நிலையையும் கொஞ்சம் பதம் பார்த்திருந்தது. ஆனால் சேதம் ஒன்றுமில்லை.

வந்து பார்த்தவர்கள் வழியோடு போனார்கள். சிலர் வீட்டுக்குள் போய் நீலாவதியிடம் அனுதாபம் அறிவித்து விட்டுப் போனார்கள். ராஜம் படுத்துக்கிடந்தாள். தூங்குவது போல் தான் தோன்றியது. உண்மையில் தூங்கினாளோ; தூங்குவது போல் கண்களை மூடிக்கொண்டு கிடந்தாளோ!

நீலாவதி துயரம் தேங்கிய முகத்தோடு உட்கார்ந்து விட்டாள். யார் யாரெல்லாமோ வந்தார்கள்; போனார்கள். மாப்பிள்ளை வந்த பாட்டைக் காணோம். இரவு இரண்டரை மணிக்கே 'மாப்பிள்ளையைக் காணவில்லை' என்ற உண்மை புலனானதும் எல்லோருக்கும் 'பக்கு' என்றடித்தது மனம். விடிந்து வெகு நேரமாகியும் வரவில்லை என்றவுடனேயே 'சரி தான். பையன் எங்கோ போய்விட்டான்' என்று பட்டது பலருக்கு. 'ஏனப்படி சொல்லாமற் கொள்ளாமல் ஓடிப் போனான்?' என்ற சந்தேகம் எழுந்தது.

நீலாவதி கையிலே தலைவைத்து, கண்களைத் துவண்டு கிடந்த மகள் மீது பதித்து சோகமே உருவாகிவிட்டாள். தான் வளர்த்த கனவுக்கொடி நன்கு வளர்ந்து உருப்பெற்று வரும்போதே, மலரவேண்டியதருணத்தில் கறுகிப்பாழாகிப் போயிற்றே என்று தவித்தது அவள் உள்ளம்.

அவள் கண்ட கனவுகளின் ஆரம்பம் என்றோ,கனவுகளின் ஜீவநாடி என்றோ சொல்லவேண்டியது மகளுக்குக் கல்யாணம் செய்து அவளைக் குடியும் குடித்தனமுமாய், குலவிளக்காய் கண்டு மகிழ வேண்டும் என்ற ஆசைதான். அதற்காக எவ்வளவு உழைப்பானாலும் சரி, பணச் செலவாயினும் சரி தன் னாலியன்றளவு பூரணமாக ஈடுபடுத்தத் திட்டமிட்டு அப்படிச் செய்யவும் முனைந்தாள். ஆனால் சந்தர்ப்பங்கள் சதி செய்து விட்டன. அவள் என்ன செய்ய முடியும்!

கல்யாணம் சிறப்பாக முடிந்தது. அதைப் பொறுத வயிற்றெரிச்சல்காரர்களின் பொறுமலே கொதிப்புற்று வந்தது போல தீ பிடித்துக் கறுக்கிவிட்டது. போதும் போதாததற்கு மாப்பிள்ளை இப்படிப் பண்ணிவிட்டான்!

ரத்தினம் இப்படிச் செய்வான் என்று அவள் எதிர்பார்க்கவேயில்லை. அவன் அவளுக்கு உறவினன்தான். அவனுக்கு சொந்தக்காரர்கள் வேறு யாருமில்லை. சிறு வயசில் அவனைப் போஷித்துப் பாதுகாத்தாள் நீலாவதி. திடீரென்று ஒருநாள் அவன் ஓடிப்போய் விட்டான். அப்போது அவனுக்கு வயது சுமார் பத்துதான் இருக்கும். பல மாதங்கள் அவனைப்பற்றிய தகவலே இல்லாமலிருந்தது. ஒரு நாடகக் கம்பெனியில் சேர்ந்திருப்பதாக விஷயமறிந்தவர்கள் சொன்னார்கள். தமிழ் நாடெங்கும் திக் விஜயம் செய்து வெற்றிக்கொடி நாட்டிய, அந்த பால கான விநோத சங்கீத சபா இலங்கைக்குப் படையெடுத்தபோது மாஸ்டர் ரத்தினமும் கப்பலேறினான். அங்கு ஒரு வருஷம் டேராப் போட்டு விட்டு, தமிழ்நாடு திரும்பிய போது 'இலங்கை,யாழ்ப்பாணமெல்லாம் புகழ் தீரன் நானே' என்று பாடக்கூடிய தெம்பு ஏற்பட்டிருந்ததுடன், சிலிர்த்துச் சுருண்டு படியாமலே நிமிர்ந்து நின்ற ராஜபார்ட் கிராப்புமிருந்தது. மாஸ்டர் ரத்தினவேலு அயன்ராஜபார்ட் மாஸ்டர் ரத்தினப்பா என்று மாறியிருந்ததும் முக்கிய விஷயம்.

கம்பெனி திவாலாகி, கம்பெனி முதலாளிகளே சீன்களை விற்றுச் சாப்பிட வேண்டிய நிலைமை ஏற்பட்டபோது, மாஸ்டர் ரத்தினப்பா செங்குளம் கிராமத்தைத் தேடி வரவேண்டிய அவசியம் ஏற்பட்டது. காலில் ஸ்லிப்பரும், மூக்கிலே கண்ணாடியும், முறைத்து நின்ற கிராப்பும், டிரங்குப் பெட்டியும் கையுமாக செங்குளத்தில் இறக்குமதியான அயன் ராஜ பார்ட் நீலாவதி வீட்டில் காலடி வைத்ததும் அவளே ஒரு கணம் திகைத்துப் போனாள். 'என்ன அத்தை, சௌக்கியமா?' என்று பிள்ளையாண்டான் திருவாயைத் திறந்ததும்தான் அவளுக்குப் புரிந்தது. 'அட நம்ம ரத்தினமா, வா ஐயா வா!

இப்பவாவது உனக்கு ஞாபகம் வந்துதே!' என்று 'வாயெல்லாம் பல்லாகி' ரொம்ப அன்புடன் வரவேற்ருள்.

அது இரண்டு வருஷங்களுக்கு முன்பு நடந்தது. அப்போது அவனுக்கு வயது பதினேழு. 'அழகு சொரூபமாகத் திகழ்கிருனே பையன்' என்று மகிழ்ந்து போன நீலாவதிக்கு, அவன் வந்து சேர்ந்ததும் நல்லதுதான், தனது ஆசை நிறைவேற வழியாச்சு, மகள் ராஜத்தை அவனுக்கு மணம் செய்வித்து இருவரையும் வீட்டோடு வைத்து, சாகப் போகிற காலத்திலாவது சந்தோஷமாக இருக்கலாம் என்று தோன்றியது.

பன்னிரெண்டு வயது ராஜத்துக்கு,'ஜெய ஜெய கோகுல பாலா' என்று அபாரமாகப் பாடித் திரிந்த அயன்ராஜபார்ட் மாஸ்டர் ரத்தினப்பா ஏதோ தேவலோகத்துப் பிறவி போலத் தான் காட்சியளித்தான். அவனது பொக்கிஷமான டிரங்குப் பெட்டியைத் திறந்து அவன் நீள நீளமான நோட்டீஸ்களை எடுத்து அவள் முன்பு பரப்பியபோது அவள் அடைந்தது திகைப்பா, பெருமையா, சந்தோஷமா—அது அவளுக்கே தெரியாது. பச்சைத் தாள், சிவப்புத்தாள், நீலம், ஆரஞ்சு, மஞ்சள் இப்படி வண்ண வண்ணத் தாள்கள், அவற்றிலே மாஸ்டர் ரத்தினப்பாவின் அற்புதமான தோற்றங்கள். மற்ருெரு மூலையிலே நாடக மேடை இளவரசி சங்கீத ரத்ன கோகிலத்வனி மிஸ், கோமளாங்கியின் அழுது வடியும்அற்புத அலங்காரப்படம். இந்தப் புரவோலங்களை யெல்லாம் மாஸ்டர் பெருமையாக எடுத்துப் பரப்பி, தனது அனுபவங்களை, எண்பது சத விகிதம் அளப்புகளோடு கலந்து, அள்ளி வீசும் போது ராஜம் மட்டும்தாஞ பிரமித்துப் போவாள்! நீலாவதி கூட சொக்கிப் போய் உட்கார்ந்துவிடுவாள்.

மாஸ்டர் ரத்தினப்பாவிடம் ஒரு கெட்ட குணம் இருந்தது. திடீர் திடீரென்று மறைந்துவிடுகிற பண்புதான். ஆனால் திரும்பி வராமல் இருந்ததில்லை அப்படி 'போன மச்சான் திரும்பி வந்தான்' என்ற மாதிரி அசட்டுச் சிரிப்போடு

அவன் திரும்புகிறபோது 'அந்த ஊரிலே ஒரு ஸ்பெஷல் நாடகம், அதுக்காகப் போயிருந்தேன்—நம்ம பழைய முதலாளி வரச்சொல்லி எழுதியிருந்தாரு. போனேன். கம்பெனி ஆரம்பிச்சாலும் ஆரம்பிக்கலாம்னு சொன்னாரு' என்று ஏதாவது சமாதானமும் சொல்லிக்கொண்டு நுழைவான். நீலாவதி சரிதான் என்று தலையாட்டி வைப்பாள். வேறு என்ன செய்வது!

அவளுக்கு தானாகவே ஒரு சந்தேகம் எழுந்தது. அதை ஊர்ஜிதம் செய்வது போல அவ்வப்போது ஒன்றிரண்டு பேர் சொல்வார்கள்: 'ரத்னம் இருக்கானே அவன் பழைய நாடகக்காரி கோமளம் கூட சுற்றித் திரிகிறானாமே... மிஸ் கோமளம்கூட அவனைப் பார்த்தேனே' என்று

திடீரென்று ரத்னப்பா வெளியூர் விஜயங்களை நிறுத்திவிட்டான். சரிதான், அந்த மிஸ்ஸும் இந்த மாஸ்டரை கவனிக்கலே போலிருக்கு, பையனிடம் பணமில்லை என்று தெரிஞ்சிருக்கும் என்று செங்குளம் துப்பறியும் புலிகள் யூகம் செய்து கொண்டார்கள்.

மாதங்கள் ஓடின. மாஸ்டர் ரத்னப்பா சாதாரண ரத்னமாகி நல்ல பையனாக மாறிவிட்டது நீலாவதிக்குத் திருப்தியைத் தந்தது. 'ராஜத்துக்கும் பதினாலு வயசாச்சு. இவளுக்கும் அவனுக்கும் கல்யாணத்தைப் பண்ணிடலாம். அப்புறம் எல்லாம் சரியாகிவிடும்' என்று நம்பி ஏற்பாடு செய்தாள்.

ஆனால், அவள் ஆசையே தீய்ந்துவிட்டது. நம்பிக்கை கருகி மண்ணோடு மண்ணாகிவிட்டது.

இதை எண்ணி நெடுமூச்செறிந்தாள் நீலாவதி. நேரம் ஓடிக்கொண்டிருந்தது. சாப்பிடவில்லையா என்று விசாரித்தவர்களிடமெல்லாம் 'ப்சு, என்ன சாப்பாடு வேண்டியிருக்கு' என்று விரக்தியோடு கூறினாள். 'கொஞ்சம் காப்பித்தண்ணி இருந்தால் கொடு' என்று இரண்டு மூன்று டம்ளர் காப்பி குடித்துத் தீர்த்தாள்.

'பண்ணையாரு சொன்னதும் சரிதான் போலிருக்கு. இது தெய்வ சோதனையாகத் தானிருக்கு. நான் என் மகளுக்குக் கல்யாணம் செய்துவைப்பது யாருக்குமே பிடிக்கவில்லைதான். மனிதருக்குத்தான் பிடிக்கலேன்னு, தெய்வத்துக்குக்கூடச் சம்மதம் இல்லாமல் போச்சு?' என்று புழுங்கினாள்.

## 4. மாதவி அவதாரம்

இப்போது நீலாவதியைப் பற்றி, அவளது குணாதிசயங்கள், கனவுகள் திட்டங்கள் பற்றிக் கொஞ்சம் அளக்க வேண்டியது அவசியமாகிறது.

செங்குளம் ஊரில் செல்வாக்குப் பெற்றவர்கள் தலைமுறை என்றொரு பட்டியல் தயாரிப்பதானால், பெரிய வீடு, பணக்காரத்துவம், பரம்பரைப் பெருமை, பெரிய மனுஷத்தனம் முதலிய கண் துடைப்பு வியாபாரங்களுக்கு முக்யத்துவம் கொடாமல் உண்மையாகவே கணக்கெடுப்பதானால், அந்தப் பட்டியலில் முதலில் குறிப்பிடப்பட வேண்டிய பெயர் அலமேலு அம்மாளுடையதே. அவள் சிவன் கோயில் தாசிதான். என்றாலும் அவளுக்கு அந்த ஊரில் செல்வாக்கு அதிகமிருந்தது. பணக்காரர்கள் முதல் அந்த ஊர் தனிப்பெரும் மடத்தின் சுவாமிகள் வரை அலமேலு அம்மாளை கௌரவித்தார்கள். அவளைப்பற்றி இழிவாக யாரும் பேசியதில்லை. அவளிடம் சொத்து தானாகச் சேர்ந்தது.

அவள் தனது சொத்துக்கும் பெயருக்கும் குலமுறைக்கும் வாரிசாகத் தயாரித்து விட்ட அழகுப்பதிப்பு தான் நீலாவதி.

நீலாவதி சதிர் என்றால் அப்போது ரொம்பப்பிரா பல்யம். பத்துப் பனிரண்டு மைல் தூரத்தில் உள்ள ஊர்களில் இருந்தெல்லாம் ஜனங்கள் கும்பல் கும்பலாக வருவார்கள். புதிய தலைமுறையில் செங்குளத்துச் செல்வாக்குடையவர்கள் லிஸ்டில் அம்மாளுக்கும் அதிகமான மதிப்பு அடைந்தவள் மகள்

நீலாவதி என்று குறிக்கவேண்டும். சிவன் கோயில் திரு விழாக்களில் அதிலும் 'நாலாம் திருநாள் ரிஷபவாகன எழுந் திருந்து', தெப்பத் திருவிழா, திருக்கல்யாணம் முதலிய விசேஷங்களில் செங்குளம் ஊரின் ஜனத்தொகை பத்து மடங்கு பெருகியிருக்கும். அவ்வளவு பேரும் சுவாமி தரிசனம் செய்து புண்ணியம் சம்பாதிக்க வேணும் என்கிற எண்ணத் தோடுதான் வந்து குவிந்தார்கள் என்று சொல்ல முடியாது நீலாவதி சதிரைப் பார்க்க வந்தவர் கணக்கிலர் என்று கூறி ஞல் அது முழு உண்மை.

நீலாவதிக்கு நாடகமேடையில் புகழ் பெற்ற 'இளவரசி கள், ராணிகள், மிஸ்ஸுகள்,' போல தானும் பெயர் பெற வேண்டும் என்ற ஆசை உண்டு. தகதகக்கும் ஜிகிஞ ஆடை களும், பித்தளே வாளும், வெல்வட் உடை, ஜோரான தலைப்பா எல்லாம் தரித்து ஆண்வேடமிட்டு மேடையிலே தோன்றி ஜமாய்த்த ஒரு 'மிஸ்' அவள் மனதில் ரொம்ப காலம் உறுத்திக்கொண்டிருந்தாள். அவளைப்போல தானும் ஏன் ஜொலிக்கக்கூடாது என்ற ஆசை எழும். கண்ணுடிமுன் நின்று ஆயிரம் வலிப்புகள் வலித்துப் பார்க்கும்போது அவ ளுக்கு பைத்தியம் பிடித்துவிட்டது என்று மற்றவர்கள் நினைத் திருக்கலாம். ஆனல் நீலாவதி 'நாடகமேடை இளவரசி மிஸ் நீலாவதி' என்று விளம்பரம் செய்து தன்னுலும் நடிக்க முடியும் என்று விளக்குவதற்காக, தனக்கு நம்பிக்கை யூட் டிக்கொள்வதற்காக ஆடிப்பார்த்த வைபவங்கள் அவை!

ஆனல் அவள் ஆசையிலே மண்ணைப் போட்டவள் அவ ளது தாய் அலமேலுதான். 'நமக்கு என்னத்துக்கு அந்தக் கூத்தாடிப்பிழைப்பு! நம்ம குலப்பெருமை என்ன! நாம் இந்த ஊரிலே இருக்கிற கௌரவமென்ன! நீ என் மானத்தையே வாங்கிடணும்னு பார்க்கியே' என்று லெக்சரடித்து, பரம் பரைச் சுவட்டிலேயே சதிராடி முன்னேறும்படி வழிவகுத் தாள் அன்னை.

நீலாவதி சதிருக்கும் அழகுக்கும் அன்புக்கும் நல்லமதிப்பு. அருமையான புகழ். செல்வமான வரவேற்பு. ஊர்ப் பெரிய மனிதர்கள், கனவான்கள், பண்ணையார்கள் எல்லோரும் நீலாவதியை பூஜித்தார்கள். அவள் வீட்டில் வந்து காத்துக் கிடந்தார்கள்.

சொத்தும் பணமும் நகைகளும் சேரச் சேர நீலாவதி தனது 'சின்னப்புத்தி'யை எண்ணிச் சிரித்துக் கொண்டது உண்டு. 'போயும் போயும் நாடகக்காரியாகணும்னு நினைச்சேனே! என்ன பிழைப்பு அது!'

சீரும் சிறப்பும் செழித்த வாழ்விலே திளைத்த நீலாவதி தனக்கொரு செல்வபதிப்பாக ராஜம் பிறந்தவுடன் வாழ்வின் பயனை அடைந்ததாக மகிழ்வுற்றதில் வியப்பில்லை. அந்தப் பெருமையில் மூழ்கிய பாட்டி அலமேலுவும் 'பரலோக பிராப்தி' அடைந்தாள்.

மனித மனம் எப்படி எப்படி யெல்லாம் மாறும் என்று யாரும் கணக்கிட முடியாது. சந்தர்ப்பங்களும் சூழ்நிலையும் மட்டுமல்ல, காலமும் மனித உள்ளத்திலே, எவ்வளவோ விளையாடல்கள் பண்ணுகிறது. அதனால் யார் எந்தச் சமயத்தில் எப்படி நடப்பார்கள், அவர்கள் நடத்தைக்குக் காரண காரியத் தொடர்புகள் ஏதேனும் உண்டா என்று அறுதியிட முடிவதில்லை.

நீலாவதி விஷயமும் அந்த மாதிரித்தான் இளமைப் பருவத்தில் நாடக ராணியாக வேண்டுமென்று கனவு கண்டு, சதிராட்டப் புகழாகத் திகழ்ந்து, பணத்தோடு பணமும் சேர்த்து உல்லாசமாக வாழ்ந்த நீலாவதிக்கு முப்பத்தைந்து வயதானதும் அவள் மனோபாவம் முற்றிலும் மாறுதலடைந்தது. 'பணம், பேரு இதில் எல்லாம என்ன இருக்கு!' என்று அலுப்படையத் தொடங்கினாள். 'இப்போ இருக்கிறதை வைத்துக்கொண்டே இன்னும் ரெண்டு தலைமுறைக்குச் சாப்பிடலாம். இந்தப் பிழைப்பு பிழைத்துதான் ராஜம் சாப்பிட

ணும்னு இல்லே. அவளை நல்ல அந்தஸ்திலே வீடுவாசலோடு வைக்கணும்கிறதுதான் என் ஆசை. அவளுக்குக் கல்யாண மாகி, பிள்ளை குட்டிகள் எல்லாம் வளர்ந்து சமர்த்தாவதைப் பார்த்துவிட்டு நான் ராமேசுரம், காசி, கங்கைன்னு போயி புண்ணியம் சம்பாதிக்கலாம்னு எண்ணியிருக்கேன்' என்று சொல்லி வந்தாள்.

அந்த ஊர்ப் பெரிய மனிதர்கள் தயவு அவளுக்கு அதிக மிருந்ததனால், பெரிய வீட்டு விசேஷங்களுக்கெல்லாம் அவள் போய் வந்ததால் மற்ற வீட்டுக் குழந்தைகளையும், அவர்கள் வீட்டுப் பெண்களுக்கு நடக்கிற 'கல்யாணம், கார்த்திகை' களையும் பார்த்துப் பார்த்து தன் தனி மகளையும் அந்த மாதிரி நிலையில் ஸ்தாபித்து விடவேணும் என்று ஆசை கொண்டி ருக்கலாம் அவள். அவள் மனம் பண்புற்று தனது—தான் வாழ்ந்த வாழ்வு—பிழைப்புமீது அவளுக்கே வெறுப்பு ஏற் பட்டிருக்கலாம். தன் செல்வ மகளாவது நல்லபடியாக வாழட்டுமே என்ற நினைவு எழுந்திருக்கும்.

அதனால் ராஜத்துக்கு அவள் சதிர்கூடக் கற்றுக் கொடுக்க வில்லை. சங்கீதப் பயிற்சிக்கு மட்டும் ஏற்பாடு செய்திருந் தாள். அந்த ஊர்ப் பெண்கள் பள்ளிக்கூடத்தில் ஆறுவது வரை படிக்கவைத்தாள். அதற்குமேல் படிக்கவேண்டிய தில்லை என்று கட்டுப்படுத்தி பெரிய இடத்துப் பெண்கள் மாதிரி வீட்டோடு இருக்கச் செய்தாள்.

அவள் வீட்டுக்கு வந்துபோகிற பெரிய மனிதர்கள் ராஜத்தைப் பற்றி அவளிடம் விசாரிப்பார்கள். 'அவளுக் குப் பொட்டுக்கட்ட வேண்டாமா? வயசாச்சே!' என்பார் கள். 'அதுக்கு எனக்கு இஷ்டமில்லை. அவளுக்கு நல்ல மாப் பிள்ளையாகப் பார்த்து மணம் முடிச்சு வைக்கப் போறேன்' என்று தனது ஆசையை வெளிப்படையாகச் சொல்ல ஆரம் பித்ததும், மற்றவர்கள் சிரித்தார்கள். இவளுக்கு ஏன் இப் படிப் புத்தி போகிறதென்று அனுதாபம் உகுத்தார்கள்.

'வயதாக ஆக மூளை கொழுந்து விடுகிறது போலிருக்கு இவ மகளுக்காவது கல்யாணமாவது! எங்கேயும் கேட்டிராத அதிசயமா இருக்குதே இவ ஆசை!' என்று கெண்டை பண்ணினார்கள்.

பருவம் மெருகு தீட்டித் தீட்டி அருமையான பொம்மை போல் அழகு ஊட்டி அற்புதமாக வளரச் செய்தது ராஜத்தை. அந்த இளங்கொடியை, மோவாத அரும்பை, பற்றி அணைத்து நுகரத் துடித்த பெரிய மனிதர்களுக்கு நீலாவதியின் ஆசை விபரீத புத்தியாகவும், சித்தக் கோளாறாகவும் தான் தோன்றியது.

பண்ணையார் சிவகுருநாத பிள்ளைக்கு அது முட்டாள் தனமாக, அசட்டுத்தனமாக, பைத்தியக்காரத்தனமாகப் பட்டது!

'நல்லாருக்கு உன் புத்தி போற போக்கு! எங்கேயாவது கேள்விப்பட்டது உண்டா! மக முரண்டினாலும் தாய் தன் குல முறை ஆசாரம் கெடாமல் கோயிலுக்குத் தொண்டு செய்து ஊராருக்கு நல்லவளாகப் பேரெடுக்க வற்புறுத்துவதைக் கண்டிருக்கோம். கேட்டிருக்கோம். இவ என்னடான்னா தன் மகளுக்குக் கல்யாணம் செய்து குடித்தனம் பண்ணப் போறாளாமே, ஹோ!' என்று சிரித்தார்.

'அப்படிச் சொல்லாதீங்க. தாயைப் போலவே மகளும் ஆகணும்னு எல்லாரும் மனசாறவா நினைக்கப் போறாங்க. அப்படி என்ன உயர்ந்த வாழ்வு இது...பணமும் பவிசும் வருதுண்ணு சொல்லலாம். எல்லாம் சேர்ந்தப்புறம் வழி வழி வாறு வம்மிச விருத்தியா. இதே மாதிரி இருக்கணும்னு சொன்னா அது சரின்னு எனக்குப் படலே, கேட்டதில்லேங்கிறீகளே. கோவலன் ஆசை நாயகியாகி வாழ்ந்த தாசி மாதவி தன் மக மணிமேகலையை தாசித் தொழில் நடத்தவா தூண்டினா? இல்லே கேட்கிறேன்!' என்று ஒரு போடு போட்டாள் நீலாவதி.

'அட மாதவி அவதாரமே!' என்று முனங்கினார் பண்ணையார். அவள் அதே உதாரணத்தைப் பலரிடமும் சொல்ல ஆரம்பித்ததும் அவளுக்கு மாதவி என்று பெயர் வந்தது!

ராஜம் ஊரார் கண்முன்னாலே எழில் சிரிக்கும் இன்பக் கொடியாக வளர்ந்து வந்தாள். அந்த மலரை நுகர முடிய வில்லையே என்ற தவிப்பு எத்தனையோ பேர்களுக்கு. பண்ணையாருக்கு அதிக தாகம்! நீலாவதியிடம் எவ்வளவோ ஆசை காட்டினார். நயமாகக் கேட்டார். கெஞ்சாத குறையாகக் கெஞ்சினார்.

'நீலாவதி, அவ தொழில் செய்ய வேண்டாம். பொட்டுக் கட்டிப் பொது மகளாக வேண்டாம். நானே அவளை ராணி மாதிரி...'

'அந்தப் பேச்செல்லாம் பேசுவதானா நீங்க இங்கே வரவே வேண்டாம்' என்று கண்டிப்பாகச் சொன்னாள். அவள்.

மாதம் தோறும் வனப்பேறி மின் கொடியாய் மிளிர்ந்த ராஜம் அவரது ஆசையைத் தூண்டும் தோற்றமானாள். முடிவில் 'ராஜத்தை நானே கல்யாணம் செய்து கொள் கிறேன். அவளுக்கு தனி பங்களா கட்டிக் கொடுத்து, நிலம் எழுதி வைத்து...' என்று தொடங்கினார் ஒரு நாள்.

'அந்தப் பேச்சு எதுவுமே வேண்டாம் என்றுதான் அன்னைக்கே சொல்லிவிட்டேனே' என்று தெளிவாகக் கூறிவிட்டாள் நீலாவதி.

என்றாலும் அடிக்கடி அவர் தூண்டில் வீசிக்கொண்டு தானிருந்தார். ஆனால் மீன்தான் சிக்கவில்லை.

'நீலாவதி, நீ வீணாக் கெட்டுப் போறே. குலதர்மத்துக்கு விரோதமா, தெய்வம் வகுத்த வழிக்கு மாறுதலா, மதம் காட்டித் தந்த அனுஷ்டானத்துக்கு எதிரா, நீ தனிப் பாதை வகுக்கணும்னு பார்க்கிறே. அது கடவுளுக்கே பொறுக்காது. யாருக்கும் இஷ்டமில்லே' என்று சொன்னார் பண்ணையார்.

நீலாவதி தனது எண்ணத்தை மாற்றுவதாயில்லை. தன் மகளுக்கு எப்படியும் கல்யாணம் செய்து பார்த்து விடுவது என்ற திட்டத்தை அவள் அழிக்கவில்லை. 'வேறு எங்காவது மாப்பிள்ளை தேடிப் போனால்தானே வீண் கஷ்ட நஷ்டங்கள், மனஸ்தாபங்கள் வரும்! நம்ம ரத்தினம் இருக்கிறான்' என்று களிப்புற்றாள்.

அப்படிக் கனவிலும் நினைவிலும் வளர்ந்து மலர்ந்த திருமணம் தான் வாடி வதங்கிக் கருகல் மணம் பரப்பியது.

## 5. பண்ணைப் பிள்ளைவாள்

வாழ்வில் ஒருமனிதனை வந்தடைவன எவ்வளவோ இருக்கலாம். அவற்றில் எல்லாம் தனிச் சிறப்புடையது ஒரு மனிதனுக்குக் கிடைக்கிற பெயர் விநோதம்தான் என்று எனக்குப் படுகிறது. அவன் நல்லவன், இவன் கெட்டவன் என்று பெயரெடுப்பதைப் பற்றிச் சொல்வதாக நினைத்துவிடப்போகிறீர்கள்! அதில்லை. பிள்ளை பிறந்து வளரு முன்பே பெற்றோர்கள் 'காப்பிட்டு'ச் சூட்டுகிற பெயர் இருக்கிறதே அதன் கிளைகளைத்தான் குறிப்பிடுகிறேன்.

பண்ணையார், பண்ணையார் என்று நான் சொல்லிவந்த சிவகுருநாத பிள்ளையின் பெயரை விளக்கினாலே போதும். குழந்தை பிறந்து நல்ல நாள் பார்த்து, ஊரார் உறவினர்களை அழைத்து காப்பிட்டு, வெல்லப் பாகிலே விரவி எடுத்த 'காப்பிடு விசேஷ அரிசி'யை வழங்கி, இனிக்கும் வாயால் இட்ட பெயர் சிவகுருநாதன் என்பதுதான். இருந்தாலும்கூட, தாத்தாவினால் 'டேலே சின்னப் பயலே' என்றும், தந்தையால் 'அடே குரு' எனவும், பள்ளிக்கூடத்தில் 'சிவகுரு' என்றும், தாயினால் 'செல்லையா' என்று செல்லமாகவும், ஊராரினால் 'பெரிய வீட்டுத் தம்பி' என்றும்—இன்னும் எப்படி எப்படியெல்லாமோ!—அழைக்கப்பட்டு பண்ணையார் என்று சிறப்புப் பெயருமேற்ற பிள்ளைவாளுக்குத் தனிப் பெயர் வேறு வந்து சேர்ந்தது.

'நம்ம பண்ணைப் பிள்ளைவாளா!' என்று பொதுவாக ஆண்கள் பேசிக்கொண்டாலும், ஊர்ப் பெண்களிடையே

அவருக்குப் பதிவாகியிருந்த பெயர் 'பொன்னம்மா புருஷன்' என்பதுதான். கணவனுல் ஒளிபெறும் மனைவியும், மனைவியினுல் சிறப்புறும் கணவனும் உலகத்திலே மிகுந்து போயிருக்கிருர்கள். அதனுல், செங்குளம் ஊரில் 'பொன்னம்மா புருஷன்' என்ற பட்டப் பெயர் கிடைத்திருப்பது பிரமாத விஷயமாகத் தோன்ருமலிருக்கலாம் முதலில். ஆனுல் செங்குளம் வாசிகள் அப்படி நினைக்கவில்லை. பண்ணையாருக்கு எவ்வளவு கவனிப்பு அளித்தார்களோ அதைவிட அதிகமான முக்கியத்துவம் கொடுத்துக் கவனித்து வந்தார்கள் பொன்னம்மாளை.

ஸ்ரீமதி சிவகுருநாத பிள்ளை என்று அழைக்கப்படவேண்டிய—ஆனுல் அதற்குமாருக பிள்ளைவாளுக்கே 'பொன்னம்மா புருஷன்' என்று சிறப்பு வரும்படியாகத் திகழ்ந்த—பொன்னம்மாள் அப்போதுதான் அந்தப் பக்கம் அடித்துக்கொண்டிருந்த நாகரிக வாடை தொட்டுச் சிலிர்ப்புறுத்திய புஷ்பம்.

தமிழ்நாட்டின் நரம்பு முடிச்சுகளாக மிளிரும் நகரங்களில் — இன்று எலெக்ட்ரிக் விளக்குகளும் இரண்டு மூன்று சினிமாத் தியேட்டர்களும், டவுன் பஸ்களும், அவசர நாகரிகமும், கலாசாலைகளும் உயிர் சின்னங்களாகக் கலகலக்கிற நகரங்கள் பலவற்றிலேகூட—நாகரிகம் அரும்பி மலர்ந்து கொண்டிருந்தது. அத்தகைய நகரம் ஒன்றிலே பிறந்து வளர்ந்து எட்டாவதுவரை படித்துப் பெருமையோடு வந்தவள் பொன்னம்மா பண்ணையாரின் இரண்டாந்தாரம். முதல் மனைவி இறந்து போனுள். இளைய மனைவி என்பதனுல் பொன்னம்மாள் அந்த வீட்டில்—அதாவது பண்ணையார் வாழ்வில்! தான்—தனி அந்தஸ்து பெற்றிருந்தாள்.

'ரொம்ப ராங்கிக்காரிடீ யம்மா அவ...அவதான் அந்தப் பொன்னம்மா' என்னும் மதிப்பை செங்குளத்தில் சம்பாதிக்க அவளுக்கு ரொம்ப காலமாகவில்லை! கல்யாணமாகி வந்த புதிதில் 'புதுப் பெண்' என்ற சலுகை காரணமாக கவனிக்கப் படாமலிருந்த பண்புகள் எல்லாம் நாளோட்டத்திலே பெரிய

தவறுகளாகவும் கோளாறுகளாகவும் விசித்திரங்களாகவும் காட்சியளித்தன ஊரார் கண்களுக்கு. முக்கியமாக செங்குளம் மக்களுக்குத்தான்.

'என்னடி யம்மா அதிசயமாயிருக்கு இந்தப் பொன்னு வாற வரத்து!' என்று மூக்கில் விரல் வைக்காத அக்காள்களும் அம்மாள்களும் கிடையாது என்ருல் பாட்டிகளைப் பற்றித் தனியாகவா சொல்லவேண்டும்!

பொன்னம்மா அப்படி என்ன அதிசயமாக விளங்கிவிட்டாள் என்று ஆராயப்போனல் — ஆயிரத்து தொள்ளாயிரத்து நாற்பத்தெட்டாம் வருஷத்து மனோபாவத்தையும் நோக்கையும் மூலையிலே ஒதுக்கிவிட்டு, அந்தக்காலத்து நோக்கில், அதுவும் செங்குளம்காரர்கள் பார்வையோடு பார்த்தால்—பொன்னம்மா இடம் பொருள் ஏவல், கால சந்தர்ப்ப சூழ்நிலை விஷயங்கள் இத்தியாதிகளை கவனிக்காமல் தனது போக்கில் வளர்ந்ததுதான் பெரிய தவறு என்று தீர்ப்பளிக்க வேண்டும். அவள் என்னதான் செய்துவந்தாள் என்று கேட்கலாம்.

'குடும்ப ஸ்திரியா லெட்சணமா ஒண்ணுமில்லையே இந்தப் பொண்ணு! அவ மூஞ்சிக்கு மாவு ஒத்திக்கிடுறதும், மணிக்கொருதரம் கண்ணாடி முன்ஞல் நின்று அழகு பாக்கிறதும், இத்தனை வயசுக்குப் பிறகும்கூட தலையைப் பின்னி எஸ்ஸுக் கொண்டை போட்டு, தூக்கிக்கட்டி, கலர்த்துணி முடிச்சு, பூ வேறே வச்சுக்கிட்டு அவ சதுருத் தாஸிமாதிரி குலிக்கி மினுக்குறதும் சுத்தமா நல்லால்லேடியம்மா' என்பது செங்குளம் நடுத்தர வகுப்புக் குடும்பங்கள், பணக்காரக் குடும்பங்கள் ஆகியவற்றின் அந்தப்புரங்கள் நிறைவேற்றிய ஏகமனத் தீர்மானம் ஆகும்.

அதிலும் 'பொன்னம்மா மதினியைப் போய்ப் பார்த்துட்டு வாறேன்' என்று சொல்லிச்சென்ற ஒரு பெண், ஸ்ரீமதி பொன்னம்மாள்—பண்ணையார் சிவகுருநாத பிள்ளைக்கு இரண்டாந்தாரமாக வாழ்க்கைப் பட்டவள், ஏழு வருஷங்

களாகக் கல்யாணமாகாமல் வீட்டோடிருந்து தனது இரு பத்தோராவது வயசில்தான் மணக்கோலமேற்ற மங்கை- 'சின்னப்புள்ளெ மாதிரிப் பாவாடையும் தாவணியுமா அலங் காரஞ் செஞ்சு சிரிச்சு மயக்கிப் பேசுதாள்' என்ற உண் மையை அம்பலப்படுத்தியதும், செங்குளத்தின் பெண்வர்க் கமே திடுக்கிட்டு விட்டது என்றால் மிகையல்ல.

'அவ நடத்தியே அப்படி அப்படித்தான்னு போன வருஷமே எங்க திருநவேலி மச்சினி சொன்னாளே' என்றும், 'பொம்பிளேயாக் குடுத்தனக்காரியா இல்லாமே இப்படி அலே வாளா மனுஷி! சீ, என்ன வேண்டிக் கிடக்கு' என்றும் சுதந் திர விமர்சனப் பிரகடனங்கள் பிறந்து புரண்டன அந்த ஊரிலே.

'அவ என்ன செய்வா! பொம்பிளேக வாழ்றதும் கெடுற தும் புருசனேப் பொறுத்து இருக்கு. அவன் அடிக்க வேண் டாம், உதைக்க வேண்டாம். அவன் கண்ணே உருட்டி முழிக் கிற முழியிலேயே, ஒரு பொம்பளேயாப் பொறந்தவ அஞ்சி ஒடுங்கிப் போகவேண்டாம்? எவனொருத்தன் அதட்டல்லேயே அவளே நில்லுன்னு நின்னும், இருன்னு இருக்கவும் ஆட்டி வைக்கானோ அவன்தான் நல்லமுறையா குடும்பம் நடத்த முடியும். அதில்லாம, இந்தப் பொன்னம்மா புருசன் மாதிரி வெறும் பொன்னஞ் செட்டி மட்டையா இருந்தா பொம்பிளே இப்படித்தான் கூத்தடிப்பா. ஆமா' இது செங்குளத்துப் பெண்ணுலகம் செய்த முடிவு.

பண்ணேயார் சிவகுருநாதபிள்ளே அர்ஜுன ரசனேப் பேர் வழி. அதனால் அவர் தனது இளம் மனேவிக்கு சகல சுதந்திர மும் கொடுத்து, அவளது ஆசைகளுக்குத் தடங்கல் செய் யாது அவளே மகிழ்வுறுத்தி வந்தார்.

'விசயம் என்னன்னு கேட்கணும்!' என்று சுவையாக ஏதோ சொல்ல வந்து, திறமையான கதாசிரியன் மாதிரி ('ஸஸ்பென்ஸ்') அந்தரத்திலே அலக்காக நிறுத்தி ஆவலேக்

கிளப்புகிற உத்தியைக் கையாள்வதற்காக, வெற்றிலையைப் போட்டுக்கொண்டு சுவைத்திருக்க, 'என்னவேய், சொல் லுமே' என்று இரண்டொருவர் கேட்ட பிறகு, 'புளிச்' செனச் சாறைத் துப்பிவிட்டு, சக்கையை ஒருகன்னத்து உப்பு தலுக்கு அண்டை கொடுத்து 'என்ன கேட்டேளா' என்று விளக்குகிற ஸ்ரீமான் அக்கப்போர் அளித்த தீர்ப்பு இந்த-விதமாகத்தானிருந்தது.

'நம்ம பண்ணைப் பிள்ளைவாள் இருக்காகளே, அவாள் நீலாவதியை ஆதரிக்கிற விசயம் பொன்னம்மாளுக்குத் தெரிஞ்சிருக்கு அவ அதைப்பத்தி விசாரிக்கவே, பிள்ளைவாள் சொல்லிட்டாகளாம்,—ஏ பொன்னு, இந்தா பாரு, என் விசயங்களிலே நீ தலையிடப்படாது, ஆமா. சொல்லிப் போட் டேன். உன்விசயங்களிலே நானும் தலையிடறது இல்லே. தெரியுமா?—அப்படீன்னு லைசென்சு கொடுத்திருக்காகளாம்!'

'உங்களுக்கு யாரய்யா சொன்னது இதை?' என்கிற கேள்விக்கு அவர்கள் சொல்லக்கூடிய பதில் 'தெரியாதா! இதெல்லாம் யாரும் சொல்லியா தெரியணும்!' என்பது தான். வருஷங்கள் ஓடினாலும், ஊரார் பேச்சின் கதி மாற வில்லை.

பொன்னம்மாள் பிள்ளையவர்களின் லீலைகளைப்பற்றி உண்மையிலேயே என்ன கருத்து கொண்டிருந்தாள் என்பது யாருக்கும் தெரியாது. இருந்தாலுமென்ன. ஆளுக்குள் ஆள் இஷ்டம்போல் பேசி மகிழ்வதுதானே மனித உரிமை!

நீலாவதி வீட்டுக் கல்யாணப் பந்தல் தீப்பிடித்து எரிந்து அணைந்ததைப் பார்த்துவிட்டுத் திரும்பிய சிவகுருநாதப் பிள்ளை 'பொன்னு...ஏய்...ஏ பொன்னு!' என்று வீட்டுக் கதவைத் தட்டும்போது மணி மூன்றேகால். பல தடவைகள் கூப்பிட்டு, அதைவிட அதிகமான முறைகள் பலமாகக் கதவைத் தட்டிய பிறகு 'சடார்' என்று ஒலித்தது தாழ்ப்பாள். கதவு லேசாகத் திறந்தது.

'கோழிமுட்டைச் சிமினி விளக்கு'—பால் வண்ணச் சிமினியுள்ள பெட்ரூம் லைட்—ஏந்தி, தூக்கக் கிரக்கத்தோடு காட்சியளித்து நின்ற பொன்னம்மாள் 'பட்டணப் பிரவேசம் வீடு வந்து சேர இவ்வளவு நேரமாச்சா!' என்று கேட்டு விட்டுக் கொட்டாவிவிட்டாள்.

'பட்டணப் பிரவேசமா! அது திரும்பி எவ்வளவோ நேரமாச்சே!' என்றார் பிள்ளை.

'பின்னே ஏன் இவ்வளவு நேரமாம்?' என்று அலுத்துக் கொண்டாள் அம்மாள்.

'இவ்வளவு நேரம் தூங்கிக்கிட்டுதானு இருந்தே! அட ராவணன் தங்கச்சி...இல்லையில்லை, கும்பகர்ணன் தங்கச்சியே'' என்று வியந்தார் பண்ணையார்.

'தூங்கினதினுலே என்னவாம்? நீங்க பாட்டிலே உங்க நீலாவதி யிருக்காளே நீலாவதி—அவகூடக் கூடக் கொஞ்சிக் கிட்டிருப்பீங்க. ராசா வருவாரு, வருவான்னு நான் இஞ்சி தின்ன குரங்காட்டம் முழிச்சுக்கிட்டிருக்கணுமாக்கும்!' என்று சிணுங்கினுள் சிங்காரி.

'அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம் ராணியம்மா! கல்யாணப் பந்தல் தீப்பற்றி யெரிஞ்சு, ஊர்பூராக் கலகலத்துப் போச்சு. நீ என்னடான்னு தூங்கினேன்கிறியே, அதுதான் எனக்கு ஆச்சர்யமாப் போச்சு!' என்று விளக்கினுர்.

'என்னது! தீயா! கல்யாண வீட்டுக் கொட்டகைப் பந்தலா! எப்படிப் புடிச்சுதாம்? தீயை அணைச்சாச்சுதா?'

இன்னும் அவள் ஆயிரம் கேள்விகளை அடுக்கக்கூடாது என்று கருணையினுல் நடந்ததைப் பூராவும் சொல்லி வைத்தார் பண்ணையார்.

'அட எழவே! இப்படியா நடக்கணும் கல்யாணம்' என்று அதிசயித்தாள் ஸ்ரீமதி.

பண்ணையார் அவசரம் அவசரமாகப் படுத்து, அலுப்பு தாலாட்டியதால் அயர்ந்து தூங்கிவிட்டார். அவர் விழித்தெழுவதற்கு ரொம்ப நேரம் பிடித்தது.

அவர் எழுந்து, குளித்து, காப்பி சாப்பிட்டுவிட்டு வெற்றிலைச் செல்லத்தோடு ஈஸிச்சேரில் அமர்ந்தபோது பொன்னம்மாளும் வந்து நின்றாள் தூணருகில்.

'உங்க நீலாவதிக்கு ஆறுதல் சொல்லப் போகலியா! ஏது இவ்வளவு நேரம் தூங்கிட்டீங்க?' என்று கேலியாகக் கேட்டாள்.

'போகணும். பாவம் மாப்பிள்ளையாண்டான்கூட இப்படிப் பண்ணிவிட்டானே, நீலா பாடு...நீலா இருக்கட்டும், பாவம், அந்த ராசம்...' என்று பெருமூச்செறிந்தார் பிள்ளை.

பொன்னம்மாள் முகத்தில் சிரிப்பின் ரேகை படர்ந்தது.

'ஏன் சிரிக்கே?' என்று வினவினார், அவள் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்த பண்ணையார்.

'ஏன் சிரிக்கப்படாதா! சிரிப்பு வந்தது சிரிச்சேன். அதிலே என்ன தப்பு?' என்று கண் கோணல்கள், தலை அசைப்புக் கோணல்கள் எல்லாம் செய்து கேட்டாள் பொன்னம்மாள்.

'இல்லே. நான் சொன்னதும் வேறே ஒண்ணும் சொல்லாமல் சிரிச்சதனாலே, விசயம் என்னவோ இருக்குதுன்னு...'

'என்ன இருக்கு! திடீர்னு நெனப்பு வந்தது! எத்தனையோ குடும்பங்களிலே உள்ளூரப் புகைஞ்சுக் கிட்டிருந்த தீ—நீலாவதி வச்ச தீ—இப்படி இந்தச் சமயத்திலா வந்து பிடிக்கணும் என்று நினைச்சேன். சிரிச்சேன்.'

'ஊம்,' என்று கனைத்து ஒருமாதிரியாக அவளைப் பார்த்தார் பண்ணையார்.

'எத்தனையோ பெண்கள் வயிறு எரியாமலா இருந்திருப் பாங்க! பணம் போச்சு என்று தெரிஞ்சு எத்தனை பெண்கள் வயிறு எரிஞ்சு...'

'மடத்தனமாப் பேசாதே. நிறுத்து' என்று சீறி விழுந் தார் அவர்.

'இராதா மடத்தனமா! உங்க நீலாவதி பேசினால்தான் புத்திசாலித்தனமாக இருக்கும்!' என்று கிண்டல் செய்தாள் மனைவி.

பண்ணையார் எரிந்து விழலாமா, வேண்டாமா என்று யோசிப்பவர்போல் உட்கார்ந்திருந்தார். பிறகு வெற்றிலைச் செல்லத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, பட்டு லேஞ்சியை எடுத்துக் கழுத்தில் மாட்டியபடி கிளம்பிவிட்டார். 'வீணு இந்தக் கழுதைகிட்டே வாய் கொடுப்பானேன். சுத்த மண்டு கம்!' என்று நினைப்பவர்போல், செருப்பை மாட்டிக்கொண்டு 'டக்டக்'கென்று நடந்து வெளியேறினார் பண்ணையார்.

இவ்விதம் 'விட்டுக்கொடுக்கும் சுபாவம்' தான் அவரது குடும்ப வாழ்க்கையைச் சுலபமாக ஓட வைத்தது என்பது அவருக்கே தெரியும்.

'நம்ம இஷ்டம்போல் காரியங்கள் நடக்கா இல்லையா! பின்னே எதுக்கு கால் துட்டுக்குப் பிரயோ ஜனமில்லாததுக் கெல்லாம் மூச்சைக் கொடுக்கணும்' என்பது அவரது சித்தாந் தம்!

அவருக்கு வழியனுப்புதலாக ஒலித்தது பொன்னம் மாளின் பேச்சு: 'நீலாவதியைப் பார்க்காமே, நீலாவதிக்கு ஆறுதல் கூறுமத்தான் உங்களாலே இருக்க முடியாதே. போங்க! அவ காத்துக்கிட்டு இருக்கப்போறா!'

அவளது கிண்டலை அவர் உணராமல் இல்லை. 'சந்திர னைப் பார்த்து நாய் குலைக்கு!' என்று நெஞ்சோடு புலம்பிய படி நேராக நடந்தார் பண்ணைப் பிள்ளைவாள்,

## 6. தாயும் மகளும்

பண்ணையார் சிவகுருநாத பிள்ளை நீலாவதி வீட்டில் புகுந்தபோது, நீலாவதி மகள் ராஜத்துடன் பேசிக் கொண்டிருந்தாள். மணப்பெண் ஒரே நாளில் ஆறு மாதப் பஞ்சத்தில் அடிப்பட்டுப் பட்டினி கிடந்தவள்போல மாறிப் போயிருந்தாள். அவள் முகத்தில் களையே இல்லை. எழுந்து உட்காரக்கூடச் சீவனற்றவள் மாதிரி கட்டிலில் துவண்டு கிடந்தாள். தாய் அவள் அருகில் உட்கார்ந்து அவள் தலையைச் சரிசெய்து, அவள் சொல்வதையும் கேட்டுக்கொண்டிருந்தாள்.

'ராஜத்துக்கு என்ன செய்யுது?' என்று விசாரித்தபடி வந்த பண்ணையாரை 'வாங்க' எனச்சொல்லி எழுந்து உபசரித்தாள் நீலாவதி. 'குழந்தை உடம்புக்கு என்ன? ஏன் இப்படிப் படுத்திருக்கு?' என்று பிரியமாக வினவினார். அங்கு தொங்கிய ஊஞ்சலில் வசதியாக உட்கார்ந்து வெற்றிலை போடுவதில் முனைந்தார் அவர்.

'அம்மா' என்ற மெல்லொலி ராஜத்திடமிருந்து பிறந்தது.

'ஏனம்மா கண்ணு, என்ன வேணும்?' என்று குழைந்த வண்ணம் அருகமர்ந்தாள் தாய். மகள் எதுவும் சொல்லவில்லை. 'என்னடியம்மா வேணும். உனக்கு' என்று கொஞ்சினாள் நீலாவதி. ராஜம் கண்களை மூடிக்கொண்டு கிடந்தாள்.

'பாவம். புள்ளெ ரொம்பப் பயந்து போயிருக்கு. சதா மயங்கி மயங்கி வருது...ஊம், சின்ன வயசிலேயே இப்படியெல்லாம் அனுபவிக்கணும்னு அது தலையிலே எழுதியிருக்கும் போது யாரு என்ன செய்ய முடியும்!' என்று புலம்பினாள் அன்னை.

வெற்றிலைச் சாற்றை வாயில் தேக்கியபடி கண்களை வெறும் வெளியில் நிறுத்தி, ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் லயித்துவிட்டவர் போலிருந்தார் பண்ணையார். வெற்றிலை எச்சிலை ஊஞ்சலருகில் இருந்த படிகத்தில் துப்பிவிட்டு, 'வாறது வந்துதானே தீரும்' என்றார். 'என்னதான் வராமல் தடுத்துவிடலாம்னு தானாக முயற்சிகள் செய்யட்டும்; இல்லே, பக்கத்திலே இருக்கப்பட்டவங்கதான் நல்ல வழி காட்டட்டும், பிரயோசனப்படாது. அந்த வேளைக்கு என்ன நடக்கணுமோ, எப்படி எப்படி ஆகணுமோ அந்த விதமா நடக்கிறதுக்குத்தான் இசைந்து வருது மனுசாளுடைய எண்ணங்களும் காரியங்களும். கேடுகாலம் வரணும்னு இருந்தால், முன்னாலேயே புத்தி கெட்டுத்தான் போகுது. சும்மாவா சொல்லி வச்சாங்க பெரியவங்க—கேடுவரும் பின்னே, மதிகெட்டு வரும் முன்னேன்னு ஊம்ம்...எல்லாம் இப்படி நடக்கணும்கிறதுக்கு ஏற்றபடி தான் உன் மனசு இருந்தது. நீ ஒரே பிடிவாதமா இந்தக் கல்யாணத்தை நடத்தியே தீர்ப்பதுன்னு...'

அவரது ஞானப் பிரசங்கம் நீலாவதிக்குப் பிடிக்கவில்லை. மகளுக்கும் ஒத்துக்கொள்ளவில்லையோ என்னவோ! அவள் திடீரென அலறினாள்; 'ஐயோ...அம்ம்...அம்...அம்மாவ்' என்று.

'புள்ளெ கண்ணைப் பாரு. என்ன இப்படிச் சொருகிக்கிட்டுப் போகுது' என்று பதறி எழுந்து பக்கத்தில் வந்தார் பண்ணையார்.

நீலாவதி மேலெல்லாம் பதறி நடுங்க, குனிந்து 'ராசம்.. என்னம்மா ராசம்' என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தாளே தவிர, அவளுக்கு வேறெதுவுமே ஓட வில்லை.

பண்ணையார் அடுப்பங்கரைப் பக்கம் பார்த்து 'யாரங்கே...லக்ஷ்மியா?...கொஞ்சம் தண்ணி கொண்டா சீக்கிரம்' என்று உத்திரவு பிறப்பித்தார். தனது கையால் ராஜத்தின் நெற்றியைத் தொட்டுப் பார்த்தார்.

'காய்ச்சல் கீச்சல் ஒண்ணுமில்லையே. என்னவோ புள்ளே பயந்திருக்கு. அது தான்' என்று சொன்னாள் நீலாவதி.

பண்ணையார் சொல்லி வைத்தார்; 'ரெண்டு மூன்று நாட்களாக நல்லாச் சாப்பிடாம இருந்திருக்கும். நேற்று ராத்திரி வேறே முழுப்பட்டினி. அதோடு திடீர்னு ஏற்பட்ட விபரீதங்கள் உண்டாக்கிய கலவரம் எல்லாமாச் சேர்ந் திருக்கு அவ்வளவுதான். பால், பழம், சாப்பாடு எல்லாம் நிறையக் கொடுத்தால், தானாக சரியாயிடும்'

அவர் பேச்சு நீலாவதிக்கு திருப்தி தரவில்லை. 'நீங்க லேசாச் சொல்லிட்டீக, இது பட்டினி, பசியினாலே வந்த கோளாறு இல்லை. வேறே என்னவோ குத்தம் தான், திடீர் திடீர்னு பதறிக் கூப்பாடு போடறது என்ன பின்னே?' என்றாள்.

ஒரு செம்பில் தண்ணீரும், தனியாக டம்ளரும் எடுத்து வந்தாள் வேலைக்காரி லக்ஷ்மி. 'ராசம் பயந்து தானிருக்கு. அதுக்கு மந்திரிச்சுப் பார்க்கணும்' என்று தனது கருத்தை அறிவித்தாள்.

சிவகுருநாத பிள்ளை கட்டிலில் கிடந்த ராஜத்தையே கவனித்தார். கண்கள் மூடிக்கிடந்த அழகு வதனத்தைக் கூர்ந்து கவனித்தார். நீலாவதி அம்முகத்தில் சிறிது தண்ணீர் தெளித்தாள். சில நிமிஷங்கள் கழிந்தன. ராஜம் கண் திறந்

தாள். பூத்த பனி மலர்மீது ஏறி வழுக்கி விழும் கரு வண்டுகள் போல அவள் விழிகள் அம்முகத்தில் தள்ளாடிச் சுழன்றன. பிறகு லக்ஷ்மிமீது பாய்ந்து, நீலாவதி மேல் தாவி, பண்ணையார் முகத்தில் படிந்தது பார்வை.

'என்னம்மா ராசாத்தி, உனக்கு என்ன செய்யுது?' என்று அன்புகனிந்த குரலில் விசாரித்தாரவர்.

'ஊம்' என்ற சிறு குரலும், தலையசைப்பும்தான் கிடைத்த எதிரொலி. மறுபடியும் கண்களை மூடிக்கொண்டாள் ராஜம்.

'கொஞ்சம் காப்பி கொடுத்துப் பாரேன். லக்ஷ்மி, காப்பி எடுத்து வா' என்று உத்திரவிட்டார் பண்ணையார்.

லக்ஷ்மி காப்பி எடுத்து வந்தாள். 'இந்தா கண்ணு, இதைக் குடி. குடிச்சிட்டுப் படுத்துக்கொள்.' என்று சொல்லி, தாய் மகளைத் தூக்கி தன்மீது சாயும்படி இருக்க வைத்து காப்பி கொடுத்தாள். அதைக் குடித்து விட்டுக் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருந்தாள் ராஜம்.

'என்னம்மா செய்யுது உனக்கு?'

'ஒன்னுமில்லை. மயக்கமா வந்துது' என்று மெல்லிய குரலில் சொன்னாள் ராஜம்.

'நான் தான் சொல்லுதேனே—இது வியாதியே இல்லே. வேறே குத்தம் தான்...லச்சுமி, பிறகு போயி நீ இவளைக் கூட்டிட்டு வா...விபூதில்லாம் மந்திரிச்சுப் போடுவாளே நம்ம காயங்குளத்தா...'

'பிச்சியா?' என்று கேட்டாள் லக்ஷ்மி.

'ஆமா மா. பிச்சியைத்தான் கூட்டிட்டு வா. சாயங்காலத்திலே...ராசம், நீ படுத்துக்க' என்று அவளை மெதுவாகப் பிடித்து படுக்கச் செய்தாள்.

பண்ணையாருக்கு அங்கு அப்போது நிலவிய வாடை மனதுக்கு உகந்ததாக இல்லை. 'சரி, காயங்குளத்தானைக் கூப்பிட்டுப் பார்க்கட்டும். அல்லது வேறு எந்தக் காட்டானை வேண்டுமானாலும் பார்க்கட்டும்' என்று மனம் புலம்பியது. நீலாவதியிடம் கேட்டார்: 'ஊம், வேறே விசேஷமாத் தகவல் எதுவுமில்லையே? நான் டவுனுக்கு ஆள் அனுப்பியிருக்கிறேன். மாப்பிள்ளையைப்பற்றி ஏதாவது தகவல் கிடைத்தால் வந்து சொல்லுதேன். வேறே என்ன! அப்பொ நான் வரட்டுமா?'

அவர் வெற்றிலைச் செல்லத்தை எடுத்துக்கொண்டு வெளியேறினார். அவரது கால் செருப்பின் 'சரட், சர்ரட்' சப்தம் தேய்ந்து மங்கும்வரை அங்கு மௌனமே நிலவியது.

மோனத்தைப் பொறுத லக்ஷ்மி ஆரம்பித்தாள் 'நல்லாத் தெரியுதே. பிள்ளை பயந்துதானிருக்கு' என்று.

'பின்னே! எவ்வளவு வேணும்? மூத்தாருக்கு மூணு சந்தி, இளையாருக்கு ஏழு சந்தின்னுகூடச் சொல்வாகளே. நேத்து ராத்திரி பன்னிரண்டு மணிக்கு தெக்குத் தெரு மூலையிலேருந்து மோட்டாரை வேகமா ஓட்டிவந்த போது, பயந்திருப்பா' என்று விவரித்தாள். 'அம்மா' என்று ராஜம் அழைத்ததும், அவள் மேலே கைவைத்து அன்பாக வருடிய படி 'என்னம்மா, என்னவேணும்?' என்று கேட்டாள்.

'நான் படுக்கலே. உட்காந்திருக்கப் போறேன்' என்றாள் மகள் கம்மிய குரலில்.

உடனே அதற்கு வேண்டிய வசதிகள் செய்யப்பட்டன. சுவரோரத்தில் தலையணைகளை வைத்து, அவளை அதில் சாய்ந்து கொள்ளச் செய்தார்கள். சௌகர்யமாக உட்கார்ந்ததும் ராஜம் சொன்னாள்: 'திடீர்னு ராத்திரிப் பார்த்ததே மாதிரிச் சொப்பனம். இப்போ எனக்கு தெளிவா ஞாபகமில்லே.'

'இல்லாட்டாப் போகுது அதை நினைச்சு சங்கடப் படாதே' என்றாள் நீலாவதி.

'இல்லேம்மா, கேளேன். எப்படி ஆரம்பிச்சுது, என்னமா முடிஞ்சுதுன்னுல்லாம் நெனவில்லே. பெரிய திருவிழாக் கூட்டம் மாதிரி கலகலப்பா, நிறைய விளக்குகள் எல்லாம்—எங்கும் ஜோதி மயமாக இருந்தது. நானும் அத்தானும் வேடிக்கை பார்த்து நின்றோம். திடீர்னு மின்னல் மாதிரி பளிச்சிட்டுது. என் கண்ணே குருடாயிட்டுது போலே இருந்தது. பக்கத்தில் நின்ன அத்தான் கையைப் பிடிக்கலாம்னு நினைச்சு கைநீட்டினால், பக்கத்திலே யாருமில்லே...அப்புறமென்ன? நினைவு இல்லையே' என்று புருவங்களைச் சுளித்தாள் ராஜம்.

'போகுது போ. நீ சும்மாயிரு' என்றாள் தாய்.

ஆனால் ராஜம் மீண்டும்சொன்னாள்: 'பிறகு எனக்கு ஞாபகத்துக்கு வாறது இதுதான். எனக்கு கண் நல்லாத் தெரியுது. நான் தனியா நிற்கிறேன். நம்ம வீடு இடிஞ்சு விழுந்து சுவரெல்லாம் பாளம்பாளமாப் பெயர்ந்து விழுது. தானாக விழுந்துதா; யாராவது இடிச்சுத்தள்ளினாங்களா? நீ எங்கேருந்தே? மற்றவங்கள் எங்கே? எனக்கு எதுவுமே புரியலே. எனக்கானா ஒரே பயம். திடீர்னு யாரோ என் கையைப் பிடிச்சு இழுத்தாங்க. அத்தானாக்கும்னு பார்த்தா, இல்லே. கரடி மாதிரிஇருந்தது. நான் ஓடப்பார்த்தேன். அது—இல்லே அதுகூட ஆளுதான், ஆனா பார்க்கப் பயமாயிருந்தது. நான் தப்ப முடியாதபடி பலமாப் பிடித்து இழுக்கவே நான் கூப்பாடுபோட்டேன். இடிந்து விழுந்த சுவர் பக்கத்தில் நீ நின்னது தெரிஞ்சுது. பெரிய சுவர் இடிஞ்சு விழுந்து கொண்டிருந்தது. உன் மேலே...எவ்வளவு பயமாயிருந்தது தெரியுமா?...'

'சவத்தை இப்ப ஏன் நினைக்கிறே. விட்டுத்தள்ளு. அது சொப்பனந்தானே' என்று தாய் சொன்னதைக் கேளாதவள் போல்,மேலும் பேசிக்கொண்டுபோனாள் ராஜம்.

'கேட்டையா. உன்னை இழுக்கத் தாவணும்னு துடித்தேன். ஆனா அந்த ஆளு விடாமல் என்கூட வந்திரு, என்கூட வந்திருன்னு பயமுறுத்துச்சு. முடியாதுன்னு கத்தினேன். அப்போ அந்த ஆளு முகத்தைப் பார்த்தா—பயமா இருந்துது. எங்கோ பார்த்த மாதிரி; இல்லே, ரொம்ப நல்லாத் தெரிஞ்ச முகமாக, ஆனா கொடூரம் படிந்து மிருகம் மாதிரி, தோணிச்சு. அது யாரு முகம்? எனக்குத் தெரியலே; கேளம்மா. அந்த ஆளு கடைசியில் என்னைத் தூக்கி, இடிந்து விழும் சுவர்களின் கீழே, உன் பக்கத்தில் எறிந்தது. எனக்கு எப்படியிருக்கும் சொல்லு. பயத்தால் செத்தே போனேன்னு தான் சொல்லனும்! அம்மான்னு அலறினேன்—முழிச்சிட்டேன். பிறகு கொஞ்ச நேரம் எனக்கு எதுவுமே புரியவில்லை.'

நீலாவதி அருகில் நின்ற லக்ஷ்மியைப் பார்த்தாள். 'பார்த்தியா, நான் என்ன சொன்னேன்?' என்று கேட்கிற தோரணையில் லக்ஷ்மியும் தலையசைத்தாள் 'ஆமா. ராசம் நல்லாப் பயந்து போயிருக்கு' என்று அங்கீகரிப்பது போல.

'சொப்பனம் பலிக்குமா அம்மா?' என்று வினவினாள் மகள்.

'பலிக்கும். எல்லாச் சொப்பனமும் பலிக்கும்னு சொல்ல முடியாது. நீ கண்டது பயந்துபோனதினாலே ஏற்பட்ட கனா தான். நேத்து நடந்த விஷயங்கள்ளாம் உனக்கு அதிர்ச்சியை உண்டாக்கியிருக்கு. அதுதான் எல்லாம் சரியாய்ப் போயிரும். கவலைப்படாதே!' என்று தேற்றினாள் தாய்.

'அத்தான் இன்னும் வரலையாம்மா? எங்கே போயிருப்பாக?'

நீலாவதிக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. தரையைப் பார்த்தபடி இருந்தாள். என்னவாவது சொல்ல வேண்டுமே 'வந்திருவான். வராமலா போவான். கல்யாணத்தன்னைக்கி எதிர்பாராம திடீர்னு இப்படி ஆயிட்டு

தேன்னு வருத்தம் ஏற்பட்டிருக்கும். மனசுக்கு ரொம்பக் கஷ்டமாயிருந்திருக்கும். நமக்கு இல்லையா—அது மாதிரித் தானே ரத்னத்துக்கும். அதனாலே சொல்லாமலே எங்கே யாவது போயிருக்கும் தம்பி. இன்னும் ரெண்டு மூணு நாளிலே வந்திரும்' என்றாள். அவள் சொன்னதில், அவ ளுக்கே நம்பிக்கை இல்லை. 'வர வேண்டும். ரத்னம் வரா மலா போவான். வருவான்' என்று திரும்பத் திரும்ப உருப் போட்டுக் கொண்டிருந்தது அவள் மனம்.

'அம்மா, பந்தல்லே தீ யாராவது வச்சிருக்கணும்னு தான் எனக்குத் தோணுது. வாணப்பொறி பட்டா புடிச் சிருக்கப் போவுது?' என்று தன் கருத்தை வெளியிட்டாள் மகள்.

நீலாவதி லேசாகச் சிரித்தாள். வறண்ட சிரிப்பு அது. 'யாரம்மா தீ வைக்கப்போறா. நமக்கு வேண்டாதவங்க யாரும் இருக்கறதா எனக்குத் தெரியலே. அப்படியிருந் தாலும், கல்யாணப் பந்தலிலே தீ வைக்கக் கூடிய அள வுக்கு...'

'சொந்த லாபம் எதையாவது உத்தேசித்து அப்படி வச் சிருக்கலாமில்லியா?' என்று தாயின் முகத்தைப் பார்த்தபடி கேட்டாள். நீலாவதி அவளை நோக்கினாள். 'ஏன் கண்ணு உனக்கு இந்தச் சந்தேகம்?' என்று விசாரித்தாள்.

'விசேஷமா ஒண்ணுமில்லே, என் மனசிலே என்னவோ பட்டுது கேட்டேன். அதிலும் அந்தச் சொப்பனம் திரும்பத் திரும்ப வந்து பயமுறுத்தினதினாலே, என்னவோ அர்த்த மிருக்குன்னு எனக்குப் படுது.'

தாய், மகளையே அவள் முகபாவத்தையே, கவனித்தபடி திகைத்திருந்தாள். ராஜம் மேலும் சொன்னாள். 'எனக்கு நம்பிக்கை இருக்கு. சில சமயம் பின்னாலே நடக்கிறதை முன்னாடியே நான் சொப்பனமாக கண்டிருக்கேன். சில சமயம் புரியாத கனவுன்னு நான் நினைச்சதெல்லாம், போகப்

போக நடைமுறையிலே நடக்கும். இதை அப்போ சொப்ப னத்திலே கண்டேன் பாத்தியான்னு நெனப்பு வரும்.

'எனக்குக்கூட அப்படி எப்பவாவது நடந்திருக்கு. ஆனால் உன் ஆச்சிக்கு—என் அம்மாவுக்கு—இதிலே ரொம்ப நம்பிக்கை. அவ சில இதுகளைச் சொல்லுவா. அப்படியே பலிச்சுமிருக்கு. நீ கூட ஆச்சியைக் கொண்டிருக்கே சில விஷயங்களிலேன்னு எனக்குப்படும். இருந்தாலும் இந்தத் தீ...' என்று இழுத்தாள் நீலாவதி.

'யாராவது வச்சிருக்கணும்கிற சந்தேகம்தான் எனக்கு. கனவிலே அப்படி அப்படியே காட்டும்னு சொல்ல முடியாது. சில இது அப்படியே தோணும். சில இதுக இடம் மாறி, ஆள் மாறித்தான் தெரியும். வீட்டை யாரோ இடிக்கச் சொல்லி இடித்த மாதிரி, அதைப் பார்த்துச் சிரித்துக்கிட்டிருந்த அந்தக் கரடி மனுசன்—அந்த ஆளு முகம்தான் சரியாக இனம் பிடிபடலே எனக்கு...ஊம். அதனாலே தீயையாரோ தூண்டி விட்டுத்தான் எவனாவது வச்சிருக்கணும்னு...

'அப்படி யிருந்தால் அந்தப் பாபத்தை அவங்களே அனு பவிக்கட்டும். நாம் செய்த புண்ணியம், நல்ல வேளையா உயிர்ச் சேதம் எதுவும் ஏற்படலே. ராஜம் நீ இதைப்பற்றி எண்ணிஎண்ணி ஏங்கப்படாது. சந்தோஷமாகஇரு. எல்லாம் நடக்கிறபடி நடக்கட்டும்' என்று சொன்னாள் நீலாவதி.

ராஜம் ஏதோ யோசனையில் ஆழ்ந்தவள்போல் இருந் தாள். பிறகு 'அம்மா, நான் சாப்பிடலாமா? பசிக்குது. குளிக்கணும் போலிருக்கு உடம்புக்கு ஒண்ணுமில்லேம்மா. மனசுக்குத் தான் என்னவோ போலிருந்தது...' என்றாள்.

'வெந்நீர் போடட்டுமா?' என்று கேட்டாள் லக்ஷ்மி.

'பச்சத் தண்ணிலேயே குளிச்சாத்தான் நல்லதுன்னு படுது' என்றாள் ராஜம்.

'அப்படியே செய்யேன். இன்னும் கொஞ்சம் காப்பி சாப்பிடு. அப்புறம் குளிச்சிட்டுச் சாப்பிடலாம்' என்றாள் நீலாவதி. 'கொஞ்ச நேரம் படுத்திரு. தண்ணி கிண்ணியில்லாம் எடுத்து வச்சிட்டு, உன்னைக் கூட்டிக்கிட்டுப் போறேன்" என்று பின்கட்டுக்குப் போனாள் அவள். லக்ஷ்மியும் பின் தொடர்ந்தாள்.

'இருக்கும். இந்தக் காலத்திலே எது நடக்கும் நடக்காதுன்னு ஒண்ணுமே நிச்சயமாச் சொல்றதுக்கில்லே. என்ன லச்சுமி?' என்று கேட்டாள்.

'இருக்கும் அம்மா. எனக்கும்கூடச் சந்தேகம்தான். பண்ணையாரய்யா திட்டமாகச் சொன்னாக. இன்னும் பல பேரு பேசினாக. அர்த்தமில்லாமச் சந்தேகிச்சு என்ன பண்ணுன்னுதான்...'

லட்சுமி முடிக்கவில்லை. 'அப்படி நாமல்லாம் நினைக்கப் போய்த்தான் நமக்கு எதுவும் தெரியிறதில்லே. பாரு, எங்க அம்மை திட்டவட்டமா எதையாது சொல்லுவா; உறுதியாச் சொல்லுவா. கேட்கிறவங்களுக்கு உளறலாப்படும். ஆனால் அதுதான் கடைசியிலே உண்மையா நடக்கும். ராசம்கூட அவ ஆச்சி மாதிரி...' என்று தலையிட்டாள் நீலாவதி.

'ஆள் நேரடியாகத் தீ வைக்காமலே தூர இருந்து ஏவி விட்டுட்டா, குப்புன்னு புடிச்சிக்கிடுமாமில்லா?' என்று கேட்டாள் லக்ஷ்மி.

'ஆமா ஏவல்னு சொல்லுவாங்க அதை. நல்ல மந்திரவாதி ஏவி விட்டுவிட்டால், தீ பிடிக்கும், கல்லு வந்து விழும். இன்னும் என்னென்ன வெல்லாமோ நடக்கும். எவ்வளவோ நமக்குப் புரியாத சக்திகள் இருக்கு. எங்க அம்மா கதை கதையாய் சொல்லுவா...சரி, இந்தச் செப்புப் பானையைப் பிடி. அங்கணத்துப் பக்கத்திலே வைப்போம். சோப்பு டப்பாவை எடுத்திட்டு வா'' என்றாள்.

'லச்சுமி, நீ சாயங்காலம் காயங்குளத்தாளைக் கூட்டி வர வேண்டாம். இன்னைக்கு வெள்ளிக்கிழமைதானே. செல்லம் பண்டிதரைக் கையோடு கூட்டி வா. மை போட்டுப் பார்த்துச் சொல்லிருவாரு பண்டிதரு. நமக்கும் விஷயம் தெரியனும் பாரு' என்ருள் பிறகு

'சரி. ராசத்தை அழைத்து வரட்டுமா?' என்று கிளம்பினுள் லக்ஷ்மி. 'நானும் வாறேன்' என்று போனுள் நீலாவதி.

## 7. தீயின் சிறு பொறி

பண்ணையார் சிவகுருநாத பிள்ளைக்கு மனசு ஒரு மாதிரி யாக இருந்தது. ஏதோ ஒரு குழப்பம், அர்த்தமற்ற கலவரம். சாதாரணமாக எல்லோரையும் பற்றி எப்போதாவது தெளி வற்ற அரிப்பை உள்ளத்திலே உண்டாக்குவது போல, அவ ருக்கும் ஏற்பட்டிருந்தது. அந்தச் சமயத்தில் அவருக்கு எல்லோர் மீதும் வெறுப்பும் காரணமற்ற கோபமும் எழுந் தன.

'தூங்கி எழுந்திருக்கும் போதே ஆக்கங்கெட்ட மூதேவி பொன்னம்மா எழவெடுத்தாளே அதுதான் இப்பகூட ஒரு மாதிரி இருக்கு. ஒண்ணுமே ஓடலே ...ஊம்' என்று தனது குழப்பத்துக்கு சமாதானம் தேடிக்கொண்டார் பிள்ளை.

நீலாவதி வீட்டிலிருந்து கிளம்பி மந்த கதியில் நடத்து கொண்டிருந்தார் அவர். அப்போது மணி பத்தரை இருக் கும். வெயில் சூடேறி வந்தது. சிவன் கோயில் தெருவிலே அதிக ஆள் நடமாட்டமில்லை. வட்ட ஓலைப்பெட்டி ஒன்றை இடுப்பிலே வைத்துக்கொண்டு காய்கறிகள் விற்கும் ஒருத்தி தெருமூலையைத் திரும்பிக் கடந்தாள். பள்ளிக்கூடத்துக்குப் போகும் வழக்கமில்லாத வாண்டுப்பயல் ஒருவன் சும்மா மெது நடை நடந்துகொண்டிருந்த நாய் ஒன்றின் மீது கல்லை எறிந்து அதன் நடை வேகத்தை அதிகரிப்பதில் ஈடுபட்டிருந் தான்.

பண்ணையார் மெதுவாக நடந்தார். 'நீலாவதி தன் மக ளுக்கு பேய் பிடிச்சிருக்குன்னு நினைக்கா போலிருக்கு. பொம்

பிளைகளே இப்படித்தான். எதை யெடுத்தாலும் பேய்க் குத்தம், தெய்வம் கொடுத்தது, கருப்பண்ணசாமி பார்த்துட்டான், கொள்ளமாட்டான் கிழிச்சிட்டான்னு புலம்பி அந்தக் கோயிலுக்குச் செய்யனும், இந்தச் சாமிக்குப் படைக்கனும், மந்திரிக்கனும் அது இதுன்னு பிராணனை வாங்கி, பணச்சிலவு வைக்கிறது முண்டங்க!' என்று நெஞ்சொடு புலம்பினுர் அவர்.

'ராசத்துக்குப் பேயாவது, சீக்காவது! வயசு காலமில்லையா? புருஷன் பக்கத்திலே இருக்கனும். அவள் அதிர்ஷ்டம் கல்யாணமான அன்னைக்கே அந்தப்பயல் ஓடிப்போயிட்டான். அவனுக்காக அந்தத் தேவடியா — நாடகக்காரி தான்— காத்திருப்பா போலிருக்கு, திடீர்னு அவநெனப்பு வந்திருக்கும் பையனுக்கு!'—இப்படி நினைக்கவும் அவருக்குச் சிரிப்பு வந்தது.

'மாப்பிளை வராமலே போயிட்டான்னு, நீலாவதி என்ன செய்வா?...ராசம்? புத்தி கெட்ட ராட்டுக! ராணிகள் மாதிரி பெருமையா வாழ்ந்ததை விட்டுட்டு கூத்தாடிப் பயலுக்கு மகளைப் பொண்டாட்டியாக்க நினைச்சாளே நீலாவதி. அவன் என்ன செய்வான்? கூத்தாடிப் புத்தியைக் காட்டிப்போட்டான். இனிமே...? குலத்தொழில் ஆரம்பவிழா பண்ண வேண்டியது தானே!'

இப்போது அவருக்கு அதிகச் சிரிப்பு எழுந்தது. உள்ளத்தில் குமிழிட்ட திருப்தி முகத்திலே மலர்ந்தது. தெரு வழியே தானுகவே சிரித்துக்கொண்டு நடக்கிறுேமே என்று தன்னினை வற்று நடந்தார் அவர்.

'என்ன பண்ணையார்வாள்! ஏது பிரமாத ஆனந்தம் போலிருக்கே! ஹெஹஹ!' என்ற சத்தம் அவருக்கு விழிப்பு உண்டாக்கியது. திடுக்கிட்டுப் பார்த்தார்.

சிவன்கோயில் தெரு இடது பக்க வரிசையிலே நடுநாயகமாகத் திகழ்ந்த பெரிய வீட்டின் திண்ணையில் நின்ற பெரிய மனிதர்தான் பேசினுர். தெருவில் வீட்டையொட்டி வில்

வண்டி நின்றது. 'நோக்காலில்' மாடுகள் கட்டப்பட்டிருந் தன. நன்கு வளர்ந்து மினுமினுப்போடு விளங்கிய கருஞ் செவலை மாடுகளும், அங்கங்கே பித்தளைப் பிடிப்புகள் நெளிவு கள், வட்டங்கள், கம்பிகள் முதலிய 'நகாஸ்க'ளுமாக மின் னிய ஜோரான வில்வண்டியும் சொந்தக்காரரான பெரிய மனிதருக்கு மட்டுமல்ல, செங்குளம் ஊருக்கே தனிப்பெருமை தருவன. தாண்டவராயபிள்ளைகூட அந்த ஊரின் சிறப்பு களிலே ஒரு புள்ளிதான்!

'என்ன அண்ணுச்சி, நீங்களாச் சிரிச்சுக்கிட்டுப் போறீ களே. அந்தத் தமாஷை என் கிட்டேயும் கொஞ்சம் சொல் லுங்களேன். நானும் சேர்ந்து சிரிக்கேன்!' என்று மீண்டும் சொல்லுதிர்த்தார் தாண்டவராயபிள்ளை.

தனது தவற்றை உணர்ந்து 'என் புத்தியைச் செருப்பா லடிக்கணும். இப்படிக் கோட்டிக்காரன் மாதிரி நடுத்தெரு விலே சிரிச்சுக்கிட்டுப் போனு, மத்தவங்க ஏன் கேட்கமாட் டாங்க?' என்று தன்னையே கடிந்துகொண்டு நின்றார் பண்ணை யார். 'ஹிஹி, என்னவோ சிரிச்சேன்! நீங்க என்ன சர்க்கியூட் கிளம்பியாச்சாக்கும்?' என்று பேச்சை மாற்றினர்.

'பின்னே, டூட்டி யாரை விட்டுது? இப்படிப் பக்கத்திலே சில ஊர்களைச் சுற்றிப் போட்டு, டவுனுக்கும் போயிட்டு வரணும்.'

'ஊம் அப்படின்ன இந்தத்தடவை கியாம்பு பலந்தான்னு சொல்லுங்க!' என்று கனைத்தார் பண்ணையார்.

'என்ன பிரமாத கேம்ப்! ஏதோ கடமைக்கு ரெண்டு மூணு நாள் சுத்திட்டு வரணும்...வாங்களேன், உட்கார்ந்து பேசலாம்' என்று தாண்டவராயர் அழைத்தார்.

'இல்லே யில்லே, வேலே நிறையக் கிடக்கு. நீங்ககூடக் கிளம்ப வேண்டியதுதானே. வண்டி, மாடு எல்லாம் ரெடியா நிக்குதே நான் வரட்டுமா?' என்று கிளம்பினர் பண்ணை யார்.

'ஆமா, நீ வச்சவன் யாருன்னு இன்னம் தெரியலேயா? நீலாவதிக்கு யார் மேலேயும் சந்தேகமில்லேயாமா? என்று தாண்டவராயர் திடீரென்று கேட்டதும் சிவகுருநாதபிள்ளை திகைத்துப் போனார் ஒரு கணம். பிறகு 'என்ன தம்பியா பிள்ளே! நீங்களே இப்படிக் கேட்டால் சீமையிலே இருந்தா வந்திட்டான் கல்யாணப் பந்தலிலே தீ வைக்கிறதுக்குன்னு! என்ன ஐயா நீங்க, தெரியாதது 'மாதிரிப் பேசறேளே! வர்ணக்குழாய் வந்து விழுந்து பந்தல் தீப்பிடிச்சு...'

தாண்டவராய பிள்ளை அலட்சியச் சிரிப்பு சிதறினார். 'அண்ணாச்சி, இந்தக் கதையை பொட்டச்சிகளிடம் சொல்லுங்க. நம்பிக்கிட்டு கிடப்பாங்க. தென்னை மரத் தேளு எங்கேயோ கொட்டி வைக்க, பனைமரத்துலே விஷமேறுச் சுன்னு சொல்ற கதையை நானு நம்ப! ஹஹ'

தாண்டவராய பிள்ளையின் பேச்சுத் திறமையே அலாதி· எந்தப் பழமொழியையும் எப்படி வேண்டுமானாலும் சிதைத்துத்தான் பேசுவார் அவர். அதில் அவருக்கு அளவற்ற பெருமை.

பண்ணையார் தலையைச் சொரிந்து கொண்டு நின்றார். பிறகு 'என்ன பேச்சையா இது! ஊரிலே எல்லோரும் சொல்லுறாக. உங்களுக்கு மட்டும்...' என்று ஆரம்பித்தார்.

'ஊர்க்காரங்க என்ன பேசினாலும் அதை அப்படியே நம்பணும்னு கணக்கா! எஹ், என்ன நான் சொல்வது?'

'நீங்க என்ன வேணாலும் சொல்லுங்க? யாருக்கென்ன? அது சரி, நீலாவதிக்கு இந்த ஊரிலே யாரு விரோதம்? யாரு கல்யாணப் பந்தல்லே தீ வைக்கத் துணிவாங்க?' என்று சவால் விடுத்தார் பண்ணையார்.

'அதுதானே எனக்கும் புரியலே?' என்று தாண்டவராய பிள்ளை சொன்னதும், பண்ணையார் அட்டகாசமாகச் சிரித்தார். 'பின்னப் பிரயாதமாப் பேசுதேளே போட்டுக்கிட்டு! என்ன தம்பியாப்பிள்ளே நம்மகிட்டியே...'

தாண்டவராயபிள்ளையின் உள்ளத்தில் கொதிப்பு ஏற்பட்டது என்பது நன்றாகத் தெரிந்தது. அவர் கண்கள் சிவந்தன. நன்றாக முறுக்கித் திருகிவிடப்பட்டிருந்த மறத் தமிழ் மீசையை மீண்டும் முறுக்கிவிட்டுக்கொண்டார். உறுதியாகச் சொன்னார், 'அண்ணாச்சி, நான் நிச்சயமாச் சொல்றேன். இது தானாகப்பற்றிக்கொண்ட தீயேயல்ல. எவனோ கொளுத்தி விட்டதுதான்.'

'எவன்? எவனய்யா தீ வைக்க வந்தது?' என்று எக்களித்தார் பண்ணையார். 'நீலாவதிக்கே தெரியும் ..'

'ஆமா. நீங்க ஏன் இப்படி வரிந்து கட்டிக்கொண்டு பிரசாரம் பண்ணணும்? தீ தானாத்தான் பிடிச்சுது வாணக்குழாய் வெடித்துப் பற்றியது—என்கிறதை எல்லோரும் நம்பணும்னு பிரமாத அக்கறை எடுத்துக்கிடுதேளே, ஏன்?'

பண்ணையார் இக்கேள்வியை எதிர்பார்க்கவில்லை. அதனால் மறுபடியும் திகைத்துவிட்டார் அவர்.

'பலபேருக்குப் பல மாதிரித் தோணும். நாலுவிதமாகப் பேச்சு அடிப்பட்டா, பல பேச்சையும் உருட்டிப் பிரட்டி எடுத்தா, தானா உண்மை கிடைக்கும். நீங்க என்னடான்னா அப்படிப் பேசதுக்கே விடமாட்டீக போலிருக்கே, ஏன்?' என்று கேட்டார்.

'இல்லே, திட்டமாத் தெரிஞ்சிருக்றபோது...'

தாண்டவராயர் ஆத்திரமாகக் கேட்டார்: 'என்ன திட்டமாத் தெரிஞ்சிட்டுது? இல்லே கேட்டேன். என்னய்யா தெரிஞ்சுட்டுது? தெக்குத்தெரு மூலையிலே கிளம்பிய அவுட்டுக்குழாய் மற்ற ஓலைப்பறை வீடுகளையேல்லாம் விட்டுட்டு ரொம்பக் கணக்காவந்து கல்யாண வீட்டுப் பந்தலிலே விழுந்து தீ உண்டாக்கி விட்டதாகும்! என்ன அப்படித்தானா? அதை நீங்க கண்ணாலே கண்டீர்களாக்கும்! அஹ்ஹா. என்ன பண்ணையார்வாள்?'

'இப்படிப் பேசினால் என்ன பதில் சொல்லதுக்கிருக்கு!' என்று சலித்துக் கொண்டார் பண்ணையார்.

'நீங்க ஒண்ணுமே சொல்ல வேண்டாமே! எதுக்காக வாணக்குழாய் விழுந்துதான் தீப்பிடிச்சுதுன்னு அழுத்திப் பேசுதீசன்னுதானே நான் கேட்டேன்! நான் சொல்லுதேன் அப்படியில்லே. எவனோதான் தீ வச்சிட்டான் ஆமா அப் படித்தான் எனக்குத் தோணுது.'

'நல்லாத்தோணிச்சு போங்க!' என்று மழுப்பினார் பண்ணையார். 'நீங்களா நினைச்சுக்கிட வேண்டியதுதான்.'

தாண்டவராயபிள்ளை அவரை ஏற இறங்கப் பார்த்தார். 'பண்ணையார்வாள், எவன் பந்தலுக்குத் தீ வச்சான்னு நான் கண்டுபிடிச்சுச் சொல்லலேன்னுப் பாரும்! இன்னும் பதினைஞ்சு நாட்களுக்குள்ளே சொல்லுறேன். அப்புறம் கேளுங்க' என்று சூளுரைத்தார்.

'செய்யுங்க. நானு வேண்டாம்கேன்?' என்று சொல்லி நடந்தார்.

'இவனுக்கென்ன இவ்வளவு அக்கறை! பெரிய நீதிமான்! தருமன் வீட்டுக்காரன்! நியாயத்தை நிலைநாட்ட வந்த அவ தாரம் மாதிரித்தான் மடையன்!' என்று சீறியது அவர் உள்ளம். அவர் மனம் மீண்டும் கலவரச் சுழலிலே நீந்தியது.

தாண்டவராயபிள்ளை சிரித்தபடி வீட்டினுள் புகுந்தார், ,அப்பா, சாப்பிட வரலையா?' என்று கூப்பிட்டுவந்த பையனை யும் அழைத்துக்கொண்டு.

'அப்பா, நேற்று ராத்திரி தீ பிடிக்கும் போது எனக்குத் தெரியுமே' என்று பெருமையாகச் சொன்னான் மகன். விளை யாட்டாக மொழிந்தார் தந்தை 'பொய்!சும்மாசொல்லுதே' என்று.

எட்டு வயதுப் பையனுக்கு ரோஷம் பொத்துக்கொண்டு வந்தது: 'ஏ பொய்யாம்! நிசம்மாச் சொல்லுதேனப்பா. நாம் தெருவிலே கட்டில் போட்டுப் படுத்திருந்தோமா? நல்ல தூக் கம். திடீர்னு எனக்குப் பயமா இருந்துது. யாரோ என் பக்

கத்திலே வந்து நின்ன மாதிரித் தோணுச்சு. முகத்தை தலையணையிலே அழுத்திப் படுத்துக்கிடந்தேன் கொஞ்ச நேரம். கல்யாண வீட்டுப் பக்கம் ஒருத்தன் வேகமாப் போனது மாதிரித் தெரிஞ்சுது. பிறகு தீ, தீன்னு கத்திட்டு ஒடிஞன். ஆனு அவன் கல்யாணவீட்டிலேருந்து கத்திக்கிட்டு வந்து. தெரு மூலையைத் திரும்பிப் போயிட்டான். பிறகு நம்மதெரு பண்டாரத்தய்யா அடிச்சுப்புரண்டு கத்திக்கிட்டு ஓடிஞரு, தீ தீன்னு. எனக்கு ரொம்பப் பயம். படுக்கையைச் சுருட்டிக்கிட்டு வேகமாத் திண்ணையிலேறி அம்மா! அம்மான்னு கத்தினேன்.'

அவன் தாய் சொன்னுள். 'அப்பதான் தீ, தீங்கிற கூப்பாடுகூட என் காதிலே விழுந்தது. இவன் அலறி அடிச்சு கூப்பிடவே, நான் என்னவோ ஏதோன்னு வந்து பார்த்தேன். அதுக்குள்ளே கும்பல் ஓடிச் சேர்ந்துட்டுது கல்யாண வீட்டுப் பந்தல் கிட்டே.'

'ஊம்' என்று தலையசைத்தார் அவர். 'நான் நல்ல தூக்கம் தூங்கியிருக்கிறேன் அப்போ. எனக்கு இதெல்லாம் தெரியாது. நீ எழுப்பினபோது தான் தெரியும் அப்போதான் தீ பாதிக்கு மேலே எழுந்து பிடிச்சுப் பெரிசாயிட்டுதே!' என்ருர். 'சந்தேகமேயில்லே. எவனுேதான் தீ வச்சிருக்கான்?' என்ருர். தனக்கே உறுதியாகச் சொல்லிக்கொள்வது போல, 'முதல்லே தீன்னு கத்திட்டு எதிர்பக்கமா ஓடினவன் எப்படியிருந்தான் தெரியுமா, சுந்தரம்' என்று மகனிடம் கேட்டார்.

'அவனுக்கு என்ன தெரியும்! அவன்தான் பயந்து போய் கிடந்திருக்கானே' என்ருள் தாய்.

'ஆனு அவன் ஓடும்போது பார்த்தேனே. அதுக்குப்பிறகு தானே நான் எழுந்திருச்சு திண்ணைக்கு ஓடியாந்தேன்!' என்று பெருமைப்பட்டுக் கொண்டான் பையன்.

'அவன் யாரு மாதிரி இருந்தான்?'

'கறுப்பா, கொஞ்சம் தடியா தலைப்பா கட்டி யிருந்தான்'

'எத்தனையோ பேரு அப்படியிருக்காங்க!' என்று சிரித்தார் தந்தை.

'அவன் தெருவிளக்குக் கிட்டே போனபோது தானே அவனைப் பார்த்தேன் அவன் நம்ம ஊரு பந்தல்காரத் தேவரு மாதிரி—'

தாண்டவராயபிள்ளை சிரித்தார் மகன் சொன்னதெல்லாவற்றிலும் இது தான் பிரமாதமான ஹாஸ்யம் என்று நினைத்தவர் போல் அபாரமாகச் சிரித்தார். 'போடா முட்டாள்! போயும் போயும் ஆளைக் கண்டு பிடிச்சையே, பந்தல்காரத் தேவனு! பந்தல்காரன் தன் சொந்தச் சாமான்களுக்கே தீ வைக்க, அவனுக்கென்ன பைத்தியமா!' என்று நினைத்தார்.

'அவன் தீ வச்சான்னு சொல்லுதான் சுந்தரம்! ஓடிப் போனது அவன் மாதிரி யிருந்துதுன்னு சொல்லுதான். ஏன் இருக்கப்படாது? பந்தல் பக்கத்திலே படுத்திருந்தவன், தீப் பிடிச்சதும் பயந்து கூப்பாடு போட்டுக்கிட்டு ஓடி வந்திருக்கலாமில்லையா?' என்று மகனுக்காக வக்காலத்து வாங்கிப் பேசினாள் அன்னை.

'இருக்கலாம்' என்றார் அவர். ஏதோ யோசனையில் ஆழ்ந்துவிட்டார் உடனே.

'எந்தக் கோட்டையைப் பிடிக்க இப்படிப் பிரமாத யோசனையாம்! சாப்பிட வாங்க. இலை போட்டாச்சு' என்றாள் ஸ்ரீமதி.

'பிடிக்க ரொம்பச் சிரமப்படும் போலிருக்கே' என்று உரக்கச் சிந்தித்து விட்டார் அவர்.

அவள் சிரித்தாள்: 'எந்தக் கோட்டையைப் பிடிக்க?'

'கோட்டையா! தீ வச்சவனைப் பிடிக்க....'

'சரிதான் போங்க. நீலாவதி கூட இவ்வளவு கவலைப்பட மாட்டா போலிருக்கு. நீங்க செய்ற பிரமாத யோசனையைப் பார்த்தால், உங்களுக்கு எதுக்கு ஊர்க்கவலை!'

'முழிச்சுக்கிட்டிருக்கும் போதே கண்ணிலே மிளகாப் பொடியைத் தூவின அந்தக் கைகாரன் யாருன்னு, பார்க்க வேணுமா?'

'முதல்லே சாப்பிடுங்க. வண்டிக்காரன் வந்துட்டான். சாப்பிட்ட உடனேயே புறப்படணும்னு சொன்னேளே' என்று கடமையை நினைவுறுத்தினாள் ஸ்ரீமதி.

'சரி, பார்க்கலாம்' என்று மனசுக்கு உபதேசித்தார் அந்தப் பெரிய மனிதர்.

## 8. எண்ணக் குழப்பம்

வெள்ளிக்கிழமை இரவு எட்டு மணி இருக்கும். செங் குளம் ஊரில் இருளும் அமைதியும் கவிந்து விட்டன. சில வீடுகளில் படுத்து 'ஒரு கண்ணுக்குத் தூங்கிப் போய்'க்கூட இருப்பார்கள் பலர்.

நீலாவதி தலையிலே கைவைத்தவளாய் சுவரோரத்தில் உட்கார்ந்து விட்டாள், ராஜம் ஊஞ்சலில் சும்மா படுத்துக் கிடந்தாள். தூங்கவில்லை.

குத்துவிளக்கு குளுமையாக எரிந்து கொண்டிருந்தது. விளக்கைப் 'பள பளவென மின்னும்படி' விளக்கி, அழகாகப் பொட்டிட்டு, செவ்வரளிப் பூச்சரம் அணிந்து எழிலுறுத்தி யிருந்தாள் நீலாவதி. விளக்கு முன்பு மெழுகிக் கோலமிட்டு சுத்தமாக வைத்திருந்தாள். சாயங்காலத்திலிருந்தே அவள் செல்வம் பண்டிதரை எதிர்பார்த்திருந்தாள். ஆனல் அந்த மந்திரவாதி வரவில்லை. 'முன்னதாகவே சொல்லி வைக்க வில்லை; அன்று வேலை அதிகம்; அதனால் வருவதற்கில்லை' என்று சொல்லி அனுப்பிவிட்டார் பண்டிதர். அந்த ஊரில் அவர் 'தனியரசு' செலுத்தி வந்ததால் அந்தப் பதில் சகஜ மானதே. என்றாலும் நீலாவதிக்கு அது ஏமாற்றத்தையே அளித்தது.

செல்லம் பண்டிதர் வரமுடியாது என்று சொல்லி அனுப் பியதும், வேலைக்காரி லக்ஷ்மி 'பண்டுவரய்யா வராட்டா

போகட்டும். அதுக்காகச் சும்மா இருந்திரப்படுமா? காயங் குளத்தாளைக் கூட்டிக்கிட்டு வந்து திருநூறு போட்டுப் பாத்தி ரலாம். அவ கொள்ளிக்கட்டை வச்சு மந்திரிச்சு விபூதி பூசிஞலே எல்லாக் குத்தமும் பறந்திராதா, பறந்து!' என்று அறிவித்து, அவளேயே கூட்டியே வந்து விட்டாள்.

செங்குளத்துப் பெண்களின் துணையாய், அவர்கள் கும்பிடும் அம்மன்கள், சாமிகளின் பிரதிநிதியாய், இன்னும் பேசாத சக்திகள் பலவற்றின் பேசும் பிம்பமாய் வரங் கொடுத்து—சாபமும் அளித்து—ஊர்ப் பெண்களின் அன் பையோ, பய பக்தியையோ பெற்று, எப்படியோ வெற்றி கரமாகக் காலம் ஓட்டிவந்த காயங்குளத்தாள் வந்தாள். திருநீறு மந்திரித்தாள்! இரண்டு மணி நேரம் வம்பளந்தாள். போனுள்.

'எப்படி ஆச்சி வருவான் அந்தச் செல்லம் பண்டுவன்? அவன் தான் பண்ணை வீட்டுக் கையாளு ஆச்சுதே! பண்ணை யாரு வீட்டிலே வந்திருக்காளே அந்த ராங்கிக்காரி—அவ தான் கொஞ்சம்னுலும் வெக்கம் கிக்கம் இல்லாமல் குலுக்கி மினுக்கிக்கிட்டுத் திரியிதா பொன்னம்மா—அவ கூப்பிட் டனுப்பினு ஓடி வருவான். அவ காசு பணம் பட்டு சட்டைன்னு எவ்வளவோ கொடுப்பா. ஊரிலே இன்னும் என்னென்ன வெல்லாமோ சொல்லிக்கிடுதோ. அதுல்லாம் நமக்கென்னத்துக்கு—பெரிய இடத்துப் பொல்லாப்பு!' என்று தனது பண்பாட்டின்படி ஏசித் தீர்த்தாள். அவள் வழக்கமே அது தான். 'இங்குள்ளதை அங்கு போய்ச் சொல்லி, அங்கே நடப்பதை இங்கு வந்து சொல்லி, எல்லோ ரையும் ஆகாமல் அடிச்சு' வேடிக்கை பார்த்துக் களிக்கும் சுபாவமுள்ள எத்தனையோ பிரகிருதிகளில் அவளும் ஒருத்தி. அவளது திறமையைக் கண்டு—அப்படி எதுவும் அவளிடம் இருந்ததில்லை!—அன்பு கொண்டவர்களைவிட, அவளுடைய 'கருநாக்குக்குப் பயந்து' அவளை மகிழ்வித்து அனுப்புகிற பெண்கள் தான் அதிகம். அவள் பெயர்கூடப் பலருக்குத்

தெரியாது. எல்லோருக்கும் அவளைத் தெரியும். 'காயங்குளத் தான்' என்றால் காயங்குளம் ஊர்க்காரி அவள்.

அவள் சொல்லிவிட்டுப் போனவைகளை எண்ண எண்ண நீலாவதிக்குக் குழப்பமே ஏற்பட்டது. அவள் உண்மையே பேசினளா; வழக்கம் போல் புளுகியிருப்பாளா, அவள் குறி தான் சொன்னளா? மனசிலே பட்டதை எல்லாம் கொட்டி விட்டுப் போனளா? ஒன்றும் நிர்ணயிக்க முடியாமல் தலை யிலே கைவைத்து உட்கார்ந்து விட்டாள்.

'பார்த்தேளாம்மா, காயங்குளத்தாளுக்கு எப்படிக் கொட்டாவி நெரச்சக்கிட்டுப் போச்சு? அவ்வளவு திட்டி யம்மா ராசத்துக்கு! பாவிக் கண்ணுலே பாம்பு கொத்த!' என்று கைவிரல்களைச் சேர்த்துச் சொடுக்கினள், அடுப்பங் கரைப் பக்கமிருந்து வந்த லக்ஷ்மி.

அவ கொட்டாவி விட்டதினலே திருஷ்டி பட்டிருக் குன்னு அர்த்தமாக்கும்?' என்று ராஜம் கேட்டாள்.

'பின்னே? தெரியாமலா சொல்லிட்டுப் போயிருக்கா நம்ம முன்னுள்ளவங்க?' என்று பதிலளித்தாள் லக்ஷ்மி. எவ் வளவு கண்ணு பட்டிருக்கோ, அவ்வளவு தூரம் மந்திரிக் கவளுக்கு கொட்டாவி வரும்னு சொல்லுவாங்க. இன்னைக் குத்தான் நீ பார்த்தியே!'

'ஊம்' என்று குரலிழுத்துவிட்டு ஊஞ்சலை மெதுவாக ஆடச் செய்தாள் ராஜம். 'கிரிச் கிரிச்' என்று ஊஞ்சற் கம்பிகள் ஒலிக்கத் தொடங்கின.

எண்ணப் புகையை நீளவிட்டு, முடிவான ஒளி காண முடியாமல் ஏங்கியிருந்த நீலாவதிக்கு அந்த ஓசை வேதனை யளித்தது. 'சும்மாயிரம்மா வீணு ஏன் ஊஞ்சலை ஆட்டுதே.

சவம் காதையடைக்குது!' என்று முனங்கினுள். அவள் குரலே காட்டியது அவள் மனம் சரியாக இல்லே என்று!

ராஜம் ஊஞ்சலின் அசைவை நிறுத்திவிட்டாள். அங்கு சிறிது நேரம் மௌனம் நிலவியது. திடீரென்று நீலாவதி கேட்டாள்: 'என்ன லக்ஷ்மி, இந்தப் பிச்சி சொல்வது நெச மாயிருக்குமா?'

திடீர்க் கேள்வியைப் புரிந்துக்கொள்ள முடியாத லக்ஷ்மி விழித்தபடி நின்ருள். பிறகு 'ஏதம்மா?' என்று மெதுவாகக் கேட்டாள்.

'அப்படி அவ செய்வாளா?' என்று நீலாவதி கேட்டது தனக்குத்தானே எழுப்பிய ஐய விஞவாகத்தான் ஒலித்தது. மற்றவர்களுக்குப் புரியாத புதிர்தான்.

'என்னவோ என்ஞலே நம்பவே முடியலியே. ஊம்?' என்ருள். பிறகு பெருமூச்செறிந்து சொன்ஞள்; 'ஆஞல் மனுஷாளேப் பற்றி என்ன தான் உறுதியாகச் சொல்ல முடியுது? யாராரு எப்படி எப்படி நடப்பாங்களே! கடவுளுக்கே வெளிச்சம்.'

அவளாகவே சொல்லட்டும் என்று மற்ற இருவரும் மௌனமாயிருந்தனர் 'என்ன லக்ஷ்மி, நீ என்ன நினேக்கிறே? பிச்சி சொன்ஞளே, பந்தல் தீப்பிடிக்கும்படி ஏவல் வச்சிருக்காங்க. அப்படி வைக்கத் தூண்டியது பண்ணேயார் வீட்டுப் பொன்னம்மா தான்னு சொன்ஞளே, அது சரின்னு உனக்குப் படுதா?'

ஊஞ்சல் கம்பியைப் பிடித்தபடி நின்ற லக்ஷ்மி கொஞ்சம் நகர்ந்து ஒரு சுவரோரத்தில் அமர்ந்தாள்.. 'எனக்கு என்னம்மா தெரியும்!' என்று சொல்லி வைத்தாள். 'காயங்

குளத்தா அவளுக்கு தோணியதைச் சொன்னு. அது சரியோ, தப்போ!'

'செல்லத்தை வரச் சொன்னதுக்கு அவன் வரலே. அதுக்குக் காரணமே இதுதான்னு பிச்சி சொல்லிவிட்டாளே. பொன்னம்மா மந்திரவாதி செல்லம் பண்டிதர் மூலமாகத் தான் ஏவல் வச்சிருக்கணும். அடிக்கடி பண்டுவரு பண்ணை யார் வீட்டுக்கு வந்து போருரு. அன்னைக்கொருநாள்—செவ் வாய்க்கிழமையோ என்னவோ—பொன்னம்மா செல்லம் பண்டிதரைப் பார்த்துப் பேச ரகசியமா அவர் வீட்டுக்குப் போரு—அப்படின்னு காயங்குளத்தா சொல்லுதாளே!'

லக்ஷ்மி சொன்னுள்: 'பிச்சி இஷ்டம்போலே என்ன வேணும்னுலும் சொல்லி வைப்பா, பண்ணையார் வீட்டம்மா இவளுக்கு பணம் காசு கொடுத்திருக்க மாட்டாங்க. இவ ஏதாவது புதுச்சேலை கீலை கேட்டு, அந்த அம்மா இல்லைன்னு சொல்லியிருக்கும். இவளுக்குக் கோபம் வந்திருக்கும். சொல் றதைப் பூரா நம்பவே முடியாதம்மா. ஆனு சில சமயம் சரி யாவும் சொல்லிருவா.'

'அது சரி. பண்ணையார் வீட்டம்மா எதுக்காக நம்ம கல்யாணப் பந்தலிலே தீ வைக்கணும்னு மந்திரிக்கணு மாம்?' என்று கேட்டு வைத்தாள் ராஜம்.

'அது தான் பிச்சி சொன்னுளே! பண்ணையாரு இங்கே வந்து போறது அவளுக்குப் பிடிக்கலே. நம்ம பேரிலே அவ ளுக்குக் கோபமும் வெறுப்பும் இருக்கு. எப்ப சமயம் வரும்னு பார்த்துக் காத்திருந்து செய்திருக்கா. அப்படியும் இருக்க லாமே?' என்று நீலாவதி சொன்னுள்.

'அப்படியானு தீப் பிடிச்சதுக்குப் பொன்னம்மா தான் காரணம்கியா?' என்று மகள் கேட்டாள்.

'நாம எப்படித் திட்டாந்தரமாச் சொல்ல முடியும்? பிச்சி சொன்னதிலேலே, யோசிக்க வேண்டியிருந்துது. வேறென்ன?' என்றாள் நீலாவதி.

அவர்கள் யோசனை எந்தவிதமான முடிவையும் எட்டவில்லை. எட்ட முடியவில்லை. 'ம்ம். கவலைப்பட்டு என்ன செய்ய! எல்லாம் நடக்கபடி நடக்கு. நாம வீணா மனசைப் புண்ணாக உலையவிடுவானேன்? படுத்துத் தூங்குவோம்' என்று சொல்லி எழுந்தாள். 'லக்ஷ்மி, பின்னாலே கதவெல்லாம் தாழ்ப்பா போட்டாச்சா? முன்வாசக் கதவையும் தாழிட்டிடு' என்று உத்திரவிட்டாள்.

எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டு, லக்ஷ்மி 'பெட் ரூம் லைட்'டை ஏற்றி, திரியும் முத்துபோல் சிறு ஒளி மட்டுமே நிற்கும்படி குறைத்து ஒரு மூலையில் வைத்தாள். பக்கத்தில் தீப்பெட்டியும் எடுத்துப் போட்டாள்.

ஊஞ்சலிலிருந்து எழுந்த ராஜம் குத்து விளக்கருகில் போய் 'இதை அணைச்சிரட்டுமாம்மா?' என்று விசாரித்தாள்.

'அச்சானியமா என்ன பேச்சு இது. எத்தனை நாள் சொல்லுவது? விளக்கை நிறுத்தட்டுமா—இல்லே உசத்திரட்டுமான்னு கேட்டா என்ன? விளக்கு நாச்சியா தலையிலே அடியாதே. பூவை எடுத்துக் குளிரவையி. அல்லது திரியை எண்ணெய்க்குள் இழுத்திரு' என்று மகளுக்குப் போதித்தாள் தாய்.

ராஜம் விளக்குச் சரத்தை இழுத்து, பூவினால் சுடரை ஒடுக்கி விட்டு, தனது படுக்கைக்குப் போனாள்.

குத்துவிளக்கு அணைக்கப்பட்டதால் எழுந்த கருகல் வாடை பரவியது அங்கே.

மூலையில் இருந்த சிறு விளக்கின் முத்தொளியின் மங்கலான வெளிச்சம் அலை அலையாக நிழல் படியச் செய்து பின் இருட்டைக் காட்டியது, அறையின் முக்கால் வாசிப் பகுதியில்.

அந்த அறையில் அமைதி பரவியது. ஆனால் நீலாவதியின் உள்ளத்தில் எண்ணக் குழப்பம் அலைமோதிக் கொண்டு தானிருந்தது.

## 9. சிந்தனையும், சிரிப்பும்

வெள்ளிக்கிழமையன்று தான் இதுவும் நடந்தது...நீலாவதி தனது வீட்டிலே எண்ணக் குழப்பத்தில் ஆழ்ந்திருந்த வேளையில், பண்ணையார் சிவகுருநாத பிள்ளை என்னதை எண்ணமெல்லாம் எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தார் தமது அகத்தில். அன்று பூராவும் அவருக்கு மன நிம்மதியில்லை. எண்ணத் தெளிவுமில்லை. நீலாவதி, ராஜம், கல்யாணம், தீ, தாண்டவராய பிள்ளை—இப்படிப் பலரைப் பற்றிய, பலவற்றைக் குறித்த நினைவுகள் நீண்டு நெளிந்தன அவர் உள்ளத்தில்.

தாண்டவராய பிள்ளையைச் சந்தித்த பிறகு பண்ணையாரின் மனக்குழப்பம் அர்த்தமற்று, தெளிவற்று, அடி முடி ஆழமற்றுப் புரண்டு அதிகக் கலக்கம் ஏற்படுத்தியது. 'இவனுக்கென்ன! இவன் ரொம்பப் பெரிய மனுசன் மாதிரித்தான்; ஊராருக்கெல்லாம் நியாயம் பேசி வைக்க வந்த தரும புத்திரன்!' என்று அடிக்கடி அவர் மனம் முணங்கியது. 'நான் சொல்லுதேன். இவருக்கு நம்பிக்கை வரலியாமில்லா! மடையன்...ஹூஹ், தீ வச்சவனைக் கண்டுபிடிக்கப் போறாராம். பெரிய சூரப்புளி!' என்று சிரிப்பு எழும் சில வேளை. உடனேயே 'குறுகுறுவென்று' உட்கார்ந்து விடுவார், பார்வை குறிப்பற்று சூன்யத்திலே நிலை குத்தி நிற்க.

'நீலாவதி...அவ ஒரு முண்டம்! ஆரம்பத்திலேயே என் சொல்படி நடந்திருந்தால் இவ்வளவு தொல்லைகளுக்கே இடம்

இருக்காதே. பெரிய கோட்டை கட்டி மகளுக்குக் கல்யாணம் பண்ணத் துணிஞ்சாளே, என்னாச்சு? அவ வீட்டோடு வளர்த்து வந்த மாப்பிள்ளை ராசா சொல்லாமப் புரையாமக் கம்பி நீட்டிட்டான். திருட்டுப்பய அவன். எனக்குத் தெரியும் அவனை நல்ல! வேறே எந்த முட்டாளாவது இப்படிப் பெண்ணும் சொத்துச் சுகமும் கிடைக்கிறபோது விட்டுட்டு ஓடிப்போவானா? அதுவும் கலியாணத்தன்னைக்கி. என்ன இருந்தாலும் கூத்தாடிப்பய தானே! ஹெஹ!'

அவரது மனக் குழப்பத்துக்கு யாற்றுக அமைந்தது இத்தகைய சிரிப்புத்தான். மற்றவர்களை மட்டந் தட்டுவது போல் அபிப்பிராயம் கூறிக்கொண்டு, அதற்கொரு முத்தாய்ப்பாக ஒரு சிரிப்புச் சிரிப்பது எந்த மனிதனுக்குத்தான் திருப்தியளிக்கவில்லை! பண்ணைப் பிள்ளைவாளும் மனிதர் தானே!

அதனால் அவர் ராஜத்தை நினைத்துப் பெருமூச்சு எறிந்தார். 'ராஜம், நல்ல பொண்ணு. அவ அம்மாளைவிட அழகாயிருக்கு. நீலாவதிகூட அவ வயசிலே இவ்வளவு அருமையா இருந்ததாக எனக்கு நினைவில்லே. இது...புள்ளெலட்டு மாதிரில்லாயிருக்கு—கடிச்சித் திங்கணும் போலே ஆசையைத் தூண்டுறதாக. அதிலெயும் காலப்போக்கில் அழகு கொள்ற முறைகளும், வசதிகளும் ரொம்ப ஜாஸ்தியாயிட்டுதா—கேட்பானேன்! குமரிப் பொண்ணு அலங்காரம் பண்ணிக்கிட்டு கிலுக்குச் சிரிப்பு சிரித்து, வெட்கம் பூத்துக்கவிய கோணி நிற்பது—சே! ராசாத்தின்னு ராசாத்திதான்..!'

எண்ண ஓட்டத்தின் ஏக்கச் சுழிப்பிலே சிக்கி சொக்கிப் போய்க் கிடந்தார் பண்ணையார். சாப்பிடும் முன்னும் பின்னரும் இதே நினைவு. உண்ட கிரக்கத்தைவிட இந்த ஏக்கம் அதிக மயக்கத்தை உண்டாக்கியது. கட்டிலில் படுத்துப் புரண்டார். என்னவோ தூங்கினர். அமைதி தரும் ஆழ்ந்த உறக்கமில்லை. எழுந்து காப்பி சாப்பிட்ட பிறகுகூட அவ

ருக்கு மனத்தெளிவு ஏற்படவில்லை. வெற்றிலையைக் குதப்பிக் கொண்டு திண்ணையில் ஈஸிச்சேரில் சாய்ந்து கிடந்தார்.

அந்தி மயங்கும் வேளையில் பொன்னம்மாள் குத்து விளக்கை ஏற்றினாள். வண்டிக்காரன் நாலைந்து 'அறிக்கன் லாம்புகளை நன்றாகத் துடைத்து, சுடரேற்றி அறைக்கு ஒன்றாக வைத்துவிட்டு, திண்ணையில் விட்டத்திலிருந்து தொங்கிய 'விளக்குக் கம்பி'யில் ஒன்றை மாட்டி வைத்துவிட்டுப் போனான். விளக்கு ஆடி அசைந்துகொண்டிருந்தது. பண்ணையாரின் உள்ளத்தில் ஊசலாடிய நினைவுகளைப்போல தூணின் நிழலும், வேறு பல நிழல்களும் அங்கங்கே படிந்து அசைந்து கொடுத்தன.

பொன்னம்மாள் கையில் ஒரு கிண்ணத்துடன் வந்து வாசல்படியில் நின்றாள், அவர் மீது சொகுசுப் பார்வை எறிந்தபடி. ஆரஞ்சு வர்ண உடலிலே சிறு சிறு கட்டங்களாகப் பச்சைக் கோடுகள் பரவிக் கிடந்த, அரக்குச் சிவப்புத் தலைப்பு அகலமாக ஓடிக்கிடந்த 'வாழை நார்ப்பட்டு' உடுத்தியிருந்த அவள் முகம் களங்கமற்றுத் திகழ்ந்தது. அந்த எழிலுக்கு நிலவாய்ச் சிரித்தது நெற்றியில் குங்கும திலகம். கருங் கூந்தலை ஜடைபின்னி, எடுத்துக் கொண்டை போட்டு, குண்டு மல்லிகையை நிறையச் சூடியிருந்தாள். நிற்கவா செய்தாள் அவள். நாட்டியக் குதிரை மாதிரி அவள் கால்கள் மாறி மாறித் தாளம் பயின்றன அவள் சிரித்தாள்.

'என்ன, இன்னைக்கு நீங்க ஒரு மாதிரி குருகுருன்னு உட்காந்தே இருக்கீக. ஊங்?'

அவள் அழகை விழுங்கிக் கொண்டிருந்த பிள்ளைவாளின் மனம் சொல்லிற்று: 'என்ன இருந்தாலும் ராசம் இவளைவிட அழகுதான். பச்சைக்கிளி அவ!'

'நான் கோயிலுக்குப் போயிட்டு வாறேன்' என்றாள் பொன்னம்மா. அவர் ஒன்றும் சொல்லாததனால் 'ஊம், சரியா?' என்று குழைந்தாள்.

'போயிட்டு வாயேன், நான் வேண்டாம்னு சொல்லு தேன்!' என்றார் அவர்.

அவசியமில்லாதபோது அவளாகவே சொல்லிவைத் தாள்: 'சீக்கிரமே வந்திருவேன்.' பிறகு சட்டென நினைத்துக் கொண்டவளாய் உதிர்த்தாள்: 'ஐயோ, எனக்கு ஞாபகமே இல்லாமப் போச்சே!'

'என்னது?' என்று கேட்டார் அவர்.

'உங்க நீலாவதி இருக்காளே நீலாவதி—அவ ஆசையா உங்களுக்கு பண்டம் பணியாரம்லாம் அனுப்பியிருக்கா. அவ வீட்டு சமையல்காரி இருக்காளே—லட்சுமியா அவ பேரு?—அவதான் கொண்டுவந்தா. லட்டு, பத்தாசி, அதிரசம், தேங்குழல்—கல்யாண வீட்டுப் பலகாரங்கள் இருக்கும்லா அதிலே கொஞ்சம் கொஞ்சம் அனுப்பியிருக்கா. நீங்க காப்பி சாப்பிடையிலே கொடுக்கலாம்னு அலமாரிலே எடுத்து வச்சேன், மறந்தே போனேன். ராத்திரி இட்டிலி தின்னும்போது சாப்பிட்டாப் போகுது!' என்று, தனக்கே உரிய நீட்டல்கள், நெளிவுகள், ஆட்டங்கள், குலுக்கல்கள், சிரிப்புகளோடு சொல்லி முடித்தாள்.

'ராத்திரிச் சாப்பாட்டோடு என்ன! இப்ப தான் எடுத்துக் கொடுத்திட்டுப் போயேன். நீ கோயிலுக்குப் போயிட்டு வந்து காபி போட்டுக் கொடுத்தால் போதும். இன்னைய விரதத்தை இப்படியே கழிச்சிரலாம். இட்டிலி வேகணும்கிற அவசியம் கூட இல்லை.'

கையிலிருந்த கிண்ணத்தை சுவர் 'மாடக்குழி'யில் வைத்துவிட்டு பொன்னம்மா உள்ளே போனாள், கால் பாதசரங்கள் 'சிலுக்கு சிலுக்கு' என்று கட்டியம் கூற! சிறிது நேரத்தில் ஒரு கையில் தட்டும், மறு கையில் தண்ணீர் டம்ளருமாகத் திரும்பிவந்தாள். அவற்றை அவர் முன் வைத்துவிட்டு, கிண்ணத்தை எடுத்துக்கொண்டு 'கோயிலுக்குப் போயிட்டு வாரேன்' என்று சொல்லி, பாதசரம் கவிதை

பாடப் படிக்கல்கள் பல இறங்கித் தெருவின் இருளிலே கலந்தாள் பொன்னம்மாள்.

அடுத்த வீட்டிலே 'ஆச்சி, கோயிலுக்கு வரலையா?' என்ற குரலும், 'வந்திட்டியா பொன்னம்மா! சரி போவோம் வா' என்ற பதிலும் எழுந்து கலந்தன.

இருளும் அமைதியும் எங்கும்.

பண்ணைப் பிள்ளைவாள் பலகாரத்தட்டு இருந்த 'ஸ்டூலை' அருகே இழுந்து, நிமிர்ந்து உட்கார்ந்தார். 'நீலாவதி என்ன இருந்தாலும் நல்லவதான். அவ பிரியம் இன்னும் குறையலே' என்று நினைத்தபடி ஒரு லட்டைப் பிட்டு வாயிலே போட்டார். இரண்டு 'அதிரசம்,' மூன்று 'பஜ்தாசி,' தேன் குழல் முதலியவற்றைத் தீர்த்துவிட்டு தண்ணீர் குடித்தார். 'ஆனு அவ ராசம் விஷயத்திலே அவ்வளவு கண்டிப்பாக நடந்திருக்க வேண்டியதில்லை. அட குலத்தொழிலைச் செய்தா என்ன குத்தமாம்? இல்லே கேட்கேன். அதுக்கு இஷ்டமில்லேன்னு வேணும். நான்தான் சொன்னேனே, தனி பங்கலாவிலே ராணி மாதிரி இருக்கலாமே!...கேக்கமாட்டேனிட்டாளே!...கல்யாணம் என்ன வாழுது' தாசிப் பொண்ணுக்கு!...போகுது, இனிமே?...இனிமேல் என்ன செய்யப் போறாளாம் நீலாவதி?'

அதே யோசனையோடு சாய்ந்தார். 'ராசத்தை மறக்க முடியலே. நீலாவதி அவளுக்குக் கல்யாணம்தான் பண்ணி வைக்கப் போறேன்னு சொன்னபோதுகூட அடிக்கடி அவ வீட்டுக்குப் போனபோது ராசத்தைப் பார்க்கிறப்பல்லாம் எனக்கு ரொம்பத் தவிப்புதான். இனிமேல்?...மெதுவா நீலாகிட்டேப் பேச்சுக் கொடுத்துப் பார்க்கலாம்னு ஏதாவது நெனச்சுக்கிடுவா. கொஞ்ச நாள் ஆறப்போட வேண்டியதுதான்...அவளுக்கு மூளையே கிடையாதுங்கேன். ஆமா ரோசாப்பூ மாதிரி இருக்கிற புள்ளேயை அதன் மதிப்பு தெரியாத தடிக் கூத்தாடிக்குத் தாலி கட்டி வைக்கிறேன்னு துணிஞ்சா! ஹெஹ!......'

நேரம் மெதுவாக ஓடுவதுபோல் தான் தோன்றியது. அவர் நிமிர்ந்து உட்கார்ந்து மீண்டும் லட்டு ஒன்றை எடுத்துப் பிட்டார் கண்ணில் தென்பட்ட கருப்பு ஒன்றை எடுத்தார், முந்திரிப் பழமாக இருக்கலாம் என்ற நினைப்புடன். விரல் நுனி உணர்ந்து சொன்னது அதுவல்ல என்று. அவர் அதைக் கண்ணருகில் கொண்டுவந்து கவனித்தார். கையால் நசுக்கிப் பார்த்தார். அது முந்திரிப் பழமல்ல. எழுந்து விளக்கின் பக்கம் சென்று வெளிச்சத்தில் நன்கு பார்த்தார். ஏதோ லேகியம் மாதிரி—ஆனால் மென்மையும் நெகிழ்வும் அற்று, 'பிறுபிறு என்று' என்பார்களே அப்படி—தோன்றியது அச்சிறு உருண்டை. அதை விரல்களால் உருட்டியபடி மறுபடியும் நாற்காலியில் சாய்ந்துவிட்டார்.

இப்போது அவர் முகத்தில் கவலை நன்றாகக் கனத்துவிட்டது.

வண்டிக்காரன் வாசலில் வந்து கைகட்டி நின்றான். அவர் அவனிடம் எதுவுமே கேட்கவில்லை. அவன் 'எசமான், மாட்டுக்குப் பருத்திக் கொட்டையும் தவிடும் கலந்து வச்சிட்டேன். வீட்டுக்குப் போயிட்டு வந்திருதேன்' என்றான்.

'ஊம்' என்றார், அவன் போனான்.

நேரம் ஊர்ந்துகொண்டிருந்தது.

'சிலுக்குசிலுக்கு' ஒலி மென்மையாக வந்து, உரத்தது. பொன்னம்மா வந்துவிட்டாள். படிகள் ஏறி திண்ணையில் அடி வைக்கும்போது அவள் கண்கள் தட்டில் பாய்ந்தன. 'என்ன, சாப்பிட்டு முடிஞ்சுதா?' என்று கேட்டவள் திடுக்கிட்டுப் போனாள்.

மீதியிருந்த பண்டங்களிடையே ஒரு லட்டு இரண்டாகப் பிட்டுக் கிடந்தது. அதன் அருகில் கருப்புச் சிறு உருண்டை ஒன்று கிடந்தது. அதன்மீது பாய்ந்த அவள் விழிகள் பண்ணையார் முகத்துக்குத் தாவின.

சிவகுருநாதப் பிள்ளை பெருங் கவலையோடு, இருகைகளை யும் உயர்த்தி மடித்துப் பின் தலைக்கு அண்டை கொடுத்தவ ராய், சாய்ந்துக் கிடந்தார் அவர் பார்வை பொன்னம்மாளை ஆராய்ந்தது.

அங்கு அப்போது நிலவிய அமைதி பங்கரமாகப் பட்டது அவளுக்கு. அவள் மெதுவாக நடந்து உள் அறை மாடக் குழியில் கிண்ணத்தை வைத்துவிட்டு, 'இந்தாங்க விபூதி—குங்குமம்' என்று சேலைத்தலைப்பில் முடிந்திருந்ததை அவிழ்ப் பதில் முனைந்தாள்.

'பொன்னு, இது என்ன?' என்று கேட்டார் அவர். வறண்டு கரகரத்தது அவர் குரல்.

அவள் நகர்ந்து வந்தாள். தொங்கிய விளக்கின் அடி இருள் அவள் முகத்தில் படிந்தது, அவள் முகபாவங்களை மறைக்க விழுகிற திரைபோல. 'எது? என்னது?' என்று கேட்டாள் அவள்.

'இந்த லட்டிலே யிருந்தது.

'முந்திரிப் பழமா யிருக்கும்!'

'இதா முந்திரி? நீயே பாரு' என்று எடுத்து நீட்டினார் பண்ணையார். தங்க வளைகள் கலகலத்த மென்கரம் ஒன்று அதை ஏற்றுக்கொண்டது விளக்கின் ஒளியில் அதைப்பார்த் தாள் இல்லை தான். 'வேறே என்னதோ!' என்றாள்.

'அது தான் கேட்கேன் என்னதுன்னு?' என்று அதட்டி னார் பிள்ளை.

'எனக்கு என்ன தெரியும்?' என்று தீனக்குரலில் மொழிந் தாள் மங்கை.

'உனக்குத் தெரியாது?'

'எனக்கு எப்படித் தெரியும்?'

'சத்தியமா?'

'ஊம்' என்று தலையசைத்தாள் அவள்.

'இந்தா என்னைப் பார்த்துச் சொல்லு! நீ மை வைக் கலே எனக்கு? இது நீ வச்சது தானே?' அதிகாரக் குரலில் தான் கேட்டார்.

'ஐயோ, என் தலை எழுத்தே! எனக்கு என்ன தெரியும்? அந்தத் தேவடியா கொடுத்தவிட்ட பலகாரங்களுக்கு உள்ளே இருக்கு. அதை நானு கண்டேன்! நான் வச்சதாம்!...உம், என் விதி! இங்கே வாழ்க்கைப்பட்டு சந்தோசமில்லாமல் கஷ்டப்படுறது போதாதுன்னு இப்படி அவப்பேரு வாங்க வேண்டியிருக்கு உங்ககிட்டே!...' அவள் புலம்பத் தொடங் கினாள்.

'ஏ பொன்னு...இந்தா பாரு!'

'ஊர்ச் சனங்களும் ஏசுது. உங்க உறவு முறைக்காரங் களும் ஏசுது. நீங்க ஏச வேண்டியதுதான் பாக்கியிருந்தது. யாரை நொந்து என்ன செய்ய. என் சென்மப் புண்ணியம் இது...'

அவளது சிணுங்கல் அவருக்கு எரிச்சல் ஏற்படுத்தியது. 'ஏ சவமே! இப்ப என்னை கொள்ளைக்கு ஒப்பாரி வைக்கியாம்? விஷயத்தைத் தெரிஞ்சுக்கிட விசாரிக்க வேண்டாமா? லேசாக் கேட்டாலே தாடகை மாதிரி வயித்திலே வாயிலே அடிச்சுக்கிடுதியே...'

'பின்னே எனக்கு என்ன தெரியும்? அந்தச் சிறுக்கி அனுப்பியிருக்கா. அதுலே என்ன மண்ணு இருக்கோ! அதுக்கு நானு பழி?'

'நீலாவதி இதையெல்லாம் எப்ப அனுப்பி வைச்சா?'

'லச்சுமி கொண்டு வந்து தரும்போது மணி நாலு நாலரை இருக்கும்' என்று சொல்லிவிட்டு உள்ளே போனாள் பொன்னம்மா.

சிவகுருநாத பிள்ளையின் யோசனைகளுக்கு அன்று முடிவே ஏற்படாது போல் தோன்றியது. சிந்தனைச் சுமை அழுத்த, அவர் நாற்காலியில் சாய்ந்தார்.

'நீலாவதி இப்படியும் செய்வாளா? அவ எதுக்காகச் செய்யணும்? இவ்வளவு காலமும் இல்லாமே இப்ப வந்து எனக்கு மருந்து வைக்கணும்னு அவளுக்கு என்ன அவசியம் வந்தது, தெரியலியே ...ஊம்ம்'

அவர் மனக் குழப்பம் தெளிய வழியில்லை.

'ஒரு வேளை இப்படியிருக்குமோ! எதிர்பாராமல் அவள் திட்டமெல்லாம் சரியாப் போனதினுலே, அவள் ராசத்து மேலே எனக்கு மோகம் ஏற்படுத்துவதுக்காக மருந்து வச்சிருப்பாளோ?'

இந்தச் சந்தேக வித்து விழுந்ததுதான் தாமதம். அவர் உள்ள நிலம் ஆசை, ஏக்கம், கனவு முதலியவைகளால் பண்பட்டிருந்தது—அதற்கு உயிரூட்டி முளை எழச்செய்து, பெரிதாக வளர்ந்து மேலும் பசுமைக் கனவுகள் சிலிர்க்க உதவி புரிந்துவிட்டது.

'அப்படித்தான் இருக்கும். அதிலும் இன்னைக்கு நான் கோவப்பட்டுக்கிட்டு வந்தது மாதிரிப் பட்டிருக்கும் அவளுக்கு! தாசிகுலம் இல்லே! கைகாரிகளாகத்தான் இருப்பாளுக' என எண்ணினுர். 'ராசத்தை நான் விரும்புகிறதுக்கு எனக்கு மருந்து வேறேயா வைக்கணும்! என்ன பைத்தியக்காரத்தனம்! ஹ ஹ ஹ!'

இந்த நினைவு நெளிந்து கொடுக்கவும் தானுகச் சிரிப்பு பொங்கிக் கொண்டு வந்தது அவருக்கு.

'மல்கோவா மாம்பழத்தைத் தின்ன தட்சணையா கேட்பான் மனிசன்! நம்ம ராசாத்தி ஒண்ணுங் கிளாஸ் மல்கோவாப்பழம் போல அல்லவா! அவளை நான் மறந்திருந்தால் அல்லவா எனக்கு ஞாபகமூட்டணும்! ஹெஹ்!'

அவர் முகம் மலர்ந்தது.

பொன்னம்மா கையில் காப்பி டம்ளருடன் வந்து சேர்ந்தாள். 'இந்தாங்க காப்பி' என்று அதை அவருக்கு முன்னிருந்த ஸ்டூலில் வைத்தாள், தட்டை ஒரு கையில் தூக்கிக் கொண்டு.

'ஊம்' என்று நிமிர்ந்து உட்கார்ந்தவர் அவசரம் அவசரமாக 'இங்கே கொண்டா அதை—தட்டை—இப்படிக் கொடு' என்று கேட்டார். அவள் நீட்டினுள். 'இந்த உருண்டையை பத்திரமா வைக்கணும். அதைப்பற்றி பின்னுலே கவனிக்க வேண்டியிருக்கும். செல்லம் பண்டிதன் கிட்டே காண்பிக்கணும்' என்று முனங்கி அதை எடுத்து வெற்றிலை ஒன்றில் பொதிந்துவிட்டு, அங்குமிங்கும் பார்த்தார்.

அவர் பார்வையில் படாதபடி தன் முகத்தை திருப்பிக் கொண்டாள் பொன்னம்மா.

'பொன்னு, ஒரு காயிதம் எடு, இதை மடிச்சு வைக்க. சின்னக் காயிதம் போதும்.'

அவள் உள்ளே போய் சிறு துண்டுக் காகிதம் கொண்டு வந்து கொடுத்தாள். அதில் இலைப் பொட்டணத்தை நன்ருக மடித்து, அதை வெற்றிலைச் செல்லத்தில் உள்ள தனிச் சிறு அறை ஒன்றில் அடக்கம் செய்தார். அவருக்கு சிரிப்பு வந்தது. ராஜத்தையும் நீலாவதியையும் நினைத்துக்கொண்டு தான் சிரித்தார் அவர்.

ஆனுல் அவர் சிரிப்பின் அர்த்தம் பொன்னம்மாளுக்குப் புரியவில்லை!

## 10. பொன்னம்மா

பண்ணையார் சிவகுருநாத பிள்ளைக்கு இரண்டாம் தார மாக வாழ்க்கைப்பட்ட பொன்னம்மாளைப் பற்றி செங்குளத் துக்காரர்கள் என்ன சொன்னாலும் சரி, அவளைப் பொறுத்த வரையில் நல்ல மனுஷிதான் அவள்! பிரமாதமான தவறு ஒன்றும் செய்துவிடவில்லை அவள்.

நாகரிகம் முளைவிட்டு வளர்ந்து வந்த நகரத்திலே வாழ்ந்து, எட்டாவது வரை படித்த பெண்ணுக்கு நாகரிக மாகத் தன்னை சிங்காரித்துக் கொள்ளவேண்டும் என அவ ளுக்கு ஆசை ஏற்பட்டது தவறே அல்ல. வாய்க்காலில் போய் குளித்துவிட்டு வரும் சமயம், கிராமத்துப்பெண்களைப் போல ஈரம் சொட்டும் கூந்தலும், மஞ்சள் மினுக்கும் முக மும், இடுப்பிலே பெரிய குடமுமாகத் திரும்பி வர மனமு மில்லாமல், தலை துவட்டத் தனித் துண்டும், கையிலே சோப்பு டப்பாவும், தலைப் பின்னலிலிருந்து அவிழ்த்தெடுத்த ரிப்பனு மாக வருவாள். இது நாகரிக வாசனையற்றவர்களுக்கு பிடிக்க வில்லை. 'இதென்ன தேவடியாத்தனம்!' என்றுதான் மற்ற வர்கள் சொன்னார்கள்.

மற்ற வீட்டுப் பெண்கள் உபயோகிப்பது போல தந்தச் சீப்போ, எருமைக் கொம்புச் சீப்பு அல்லது மரச் சீப்போ உப யோகிக்காமல், அவள் நீளமான கிராப்புச் சீப்பைக் கையாண் டது பெரிய பாபமாகத்தான் தோன்றியது மற்றவர்களுக்கு. 'ஆம்பிளைக சேக்குச் சீவுத சீப்புல்லா வச்சிருக்காப் பொன்

ளம்மா' என்று மூக்கிலே விரல் வைத்தார்கள் மூத்தவர்கள்! வாய்க்காலிலிருந்து திரும்பி வரும்போது மற்றப் பெண்களைப் போல தலையிலே துண்டைச் சுற்றி இறுக்கித் திருகி எடுத்துக் கட்டியோ, அல்லது வெறுங்கூந்தலை மட்டும் கொண்டை போட்டோ வர விரும்பாமல், அழகிய கருப்புச் சீப்பினால் சிக்கறுத்து வாரிப் பளபளக்கத் தொங்கவிட்டுக்கொண்டு வந்தது பிறர் கண்களை உறுத்தாமலில்லை.

மற்ற வீட்டுப் பெண்கள் வெறும் தேங்கா யெண்ணெய் அல்லது பெரியம்மாக்கள் காச்சி ஊற்றிய தைலங்கள் எதையாவது—அவை கறுகல் நாற்ற மெடுத்தாலும்கூட!—தடவித் தலை முடித்துத் திரிந்த போது, பொன்னம்மா எந்தெந்தச் சீமைகளிலிருந்தெல்லாமோ கண்ணாடிப் புட்டிகளில் அடைத்து, பகட்டான தாள்கள் ஒட்டி, பச்சை யென்றும், சிவப்பு என்றும் நிற நிறமாக வந்த வாசனைத் தைலங்களை உபயோகித்தது பேத்திமார்களுக்குப் பொறுமையையும், அம்மாக்கமார்களுக்கு எரிச்சலையும், பாட்டிமார்களுக்கு ஆத்திரத்தையும் உண்டாக்கியது.

தமிழ்நாடு வேளாளகுலச் சட்ட திட்டங்களால் மிகவும் பாதிக்கப்பட்ட பருவ மங்கை,—பல வருஷங்கள் கல்யாணமாகாமல் வீட்டுக்குள் அடைப்பட்டு—கனவும் தனிமையும் ஏக்கமும் தானுமாய்ப் புழுங்கிய கன்னி-இருபத்தோராவது வயசிலே தான் மணமகளாக முடிந்த போதிலும், சொத்தும் சுதந்திரமும் அந்தஸ்தும் வந்து சேர்ந்ததினால் பூரித்துப் போனாள். முன்பு வசதியின்றியும் மற்றவர்களுக்குப் பயந்தும் அனுபவிக்காது விட்ட சில்லரைத் தேவைகளை, தானே வீட்டின் அரசியாகி சகல வசதிகளும் பெற்றதும், அனுபவிக்கத் துணிந்தாள். அவள் கெட்டலைந்து சீரழிந்து விடவில்லை. இஷ்டம் போல் சிங்காரித்து தன் அழகின் போதையிலே கிரங்கித் திரிந்தாள். ஆனால் ஊர்க்காரர்களுக்கு அவள் போக்குப் பிடிக்கவில்லை. காரணம், பொன்னம்மா முற்போக்கடையாத செங்குளம் ஊரிலே முன்னேற்றப் பாதையில் முன்னேடிப் பார்க்க குதித்துச் செல்லத் துணிந்ததுதான்.

அதனால் தளுக்குக்காரி தன்னைக் கலங்கப்படுத்திக் கொள்ளவில்லை யென்றாலும் தன் பெயர்மீது மாசுபனி படிய வகை செய்து கொண்டாள்! அவ்வளவுதான். காலமும் சூழ் நிலையும் மக்களின் மனோபாவமும் அப்படியிருந்தன.

அவள் படித்த படிப்பும், கால வெள்ளம் அள்ளி வந்த நாகரிக அலையின் மோதலும் அவள் புறத் தோற்றத்தைத் தொட்டிருந்தனவே தவிர அவள் உள்ளமும் பாட்டிமார் களின் பண்பாட்டு மூளையில்தான் பலமாகக் கட்டுண்டு கிடந் தது. விரத அனுஷ்டானங்கள், கோயில் தரிசனங்கள், தீர்த் தக் குளிப்புகள், திருப்பதி யாத்திரைகள், சோதிடம் சகுனம், சொப்பனம், பேய் பிசாசு பில்லி சூனியம், ஏவல் செய்வினை மருந்து வைத்தல் முதலான செயல்கள் பலவற்றிலும் அவ ளுக்கு பலமான நம்பிக்கை உண்டு. ஜாதகம் பார்ப்பதிலும் குறி கேட்பதிலும்' சாமிகளுக்குச் செய்வதிலும் அவள் எவ் வளவோ காலத்தையும் பணத்தையும் நாசமாக்கத் தயங்கு வதே கிடையாது.

அவளது பொழுது போக்குகளில் பண்ணைப் பிள்ளைவாள் தலையிடுவதில்லை. அவள் என்ன செய்கிறாள், எந்தக் கோவி லுக்குப் போகிறாள், எந்தப் பூசாரியிடம் குறி கேட்டாள், எந்த மந்திரவாதியிடம் பேசினாள் என்கிற விவரங்களை அறிய அவர் அக்கறை எடுத்துக்கொள்வதேயில்லை. கல்யாணமான புதிதில் ஒரு வருஷம் அவளைக் கண்ணாய் கவனித்து வந்தார். பிறகு மனைவி பழகிய பொருளாகி விட்டாள். அவர் தமது அர்ஜுன ரஸனை வேட்டையை செங்குளம் ஊரிலும் சுற்று வட்டாரங்களிலும் மீண்டும் துவக்கிவிட்டார். அதற்குத் தான் அவருக்குப் பொழுது சரியாக இருந்தது. 'பொன்னம் மாளுக்குத்தான் சகல உரிமைகளும் இருக்கின்றனவே; இஷ் டப்பட்டதை செய்துகிடட்டுமே; பணத்துக்குப் பஞ்சமா? ஆள்களுக்குக் குறைச்சலா?' என்று சுதந்திரம் அளித்துவிட் டார். கொஞ்ச காலம் தனது பக்தி அனுஷ்டானங்களை யெல் லாம் அவள் தன் கணவனிடம் ஒன்று விடாமல் சொல்லி வந்

தாள். உரவரை அதற்கு வரையறைகள் வகுத்துக் கொண்டாள்.

பொன்னம்மா வருஷத்துக்கு இரண்டு மூன்று தடவைகள் தாய் வீடு போய் வருவதுண்டு. அவள் தாய் சில முறைகள் இங்கு வந்து தங்கிப் போவாள். அவள் தாய்க்கு ரொம்ப வருத்தம்தான், தன் மகளுக்கு ரொம்ப வருஷமாகக் கல்யாணமாகாமல் இருந்தது. 'ஏதோ விளக்கு நாச்சியா கிருபையாலே குடும்பத்திலே ஒளி ஏற்பட்டது. ஆனா பொன்னம்மாளுக்கு ஒரு பிள்ளை பிறக்கலியே இன்னும்' என்ற கவலை கோயில் குளம், தர்மம் அனுஷ்டானங்கள் என்று பலப்பல செய்யத் தூண்டி, மகளுக்கு அடிக்கடி போதனைகள் புரிய வைத்தது.

மகளுக்குக் கல்யாணமாகி நான்கைந்து வருஷங்களாகியும் குலம் விளங்க ஒரு குழந்தை பிறக்கவில்லையே என்ற ஏக்கமும், சுற்றாத அரச மரம் இல்லை, கும்பிடாத கோயில் இல்லை, பண்ணாத பூசைகள் இல்லை என்கிற கணக்கெடுப்பும் சேர்ந்து, அவள் யோசனைகளை வேறு வழியிலே திருப்பின. கணவன் சதா தேவடியா வீடும், அங்கேயும் இங்கேயும் கதி என்று திரிவதைத் தவிர்த்து பொன்னம்மாளிடம் அதிக ஆசை காட்டி வீட்டிலேயே தங்க வகை செய்யவேண்டும் என்று திட்டமிட்டாள். அதற்குச் சரியான வழி அவர்களது முன்னோர்கள்—பரம்பரை பரம்பரையாகப் பட்டிக்காட்டுப் பெண்கள்—நம்பிக்கை வைத்து உபயோகித்த 'மருந்து வைக்கும்' முறையைக் கையாளத் தூண்டினாள். மகளுக்கு முதலில் போதிய தெம்பு இல்லை என்றாலும்கூட, தாயின் இடையறாத போதனை துணிவு கொடுத்தது. இவர்களைப் போன்ற பெண்களுக்கெல்லாம் துணை நின்று வேண்டிய சகாயம் செய்யும் செல்லம் பண்டிதரின் தயவினால் அவள் 'மருந்து' பெற்றுக்கொண்டாள்.

அதை கணவனுக்குக் கொடுக்கலாமா வேண்டாமா என்ற யோசனை அடிக்கடி எழுந்தது. அவளது தாய் மாமா

வுக்கு அவர் பெண்டாட்டி மருந்து வைத்துவிட்டாள்; அவர் படுத்த படுக்கையாகி வாந்தியெடுத்து வாந்தியெடுத்து, எலும்பும் தோலுமாகிச் சாகாமல் செத்து அவதியுற்றுப் பலியானதும் மருந்து வைப்பதைப்பற்றி பலர் பலவிதமாகச் சொன்னதும் அவளுக்குத் தெரியும். அதுமாதிரி 'நல்லதை நினைத்துச் செய்யப் போயி, அது தீமையிலே போயி முடிஞ்சா ஆபத்துல்லா!' என்ற பயமும் இருந்தது அவளுக்கு.

'அதுக்கெல்லாம் ஒண்ணும் வராதுட்டீ! அப்படி வந்தாலும் நம்ம செல்லம் பண்டுவன் இருக்கவே இருக்கான். மாற்று குடுத்து மருந்தைக் கீழே விழத் தட்டி, வந்த சிக்கை மாயமாப் போக்கடிச்சிடுவான். நாம் என்ன கெடுதலுக்கா செய்யிதோம். எல்லாரும் நல்லாயிருக்கனும், அவுக பேரு நிலைநிக்க குடும்பம் துலங்கனும்கிறதுக்குத்தானே இவ்வளவும்' என்று போதித்தாள்.

'ஆமா, அவுகளுக்கு இது தெரிஞ்சு போச்சுன்னு?' என்ற சந்தேகம் தலை தூக்கியது பொன்னம்மாளுக்கு.

'ஏட்டி பொன்னு! உன்னைப் போலே முட்டா மூதியை— பைத்தியாரப் பொண்ணை - நான் பார்த்ததே இல்லை. எதுக் கெடுத்தாலும் பயமும் சந்தேகமும் பட்டுக்கிட்டிருந்தால் எதுதான் நடக்கும். ஈசனே, பகவானேன்னு அவன் தலையிலே பாரத்தைப் போட்டுட்டு தைரியமாக் கொடுத்திரு. எல்லாம் நல்லதா முடியும்' என்று உற்சாகமூட்டி, திட்டம் வகுத்துக்கொடுத்தாள் அன்னை.

அவளே உடனிருந்து மருந்துப் பிரயோகம் வெற்றிகரமாக முடிகிறதா என்ன என்று கவனித்திருப்பாள். ஆனால் அதற்குள் அவளுக்கு வேறு அலுவல்கள் காரணமாக ஊரிலிருந்து அழைப்பு வந்துவிட்டது.

ஆகவே, பொன்னம்மா தந்திரமாக - ஒரு வேளை விஷயம் வெளிப்பட்டு விட்டாலும் பழியைப் பிறர் தலையிலே போட்டுத் தப்புவித்துக் கொள்ளலாம் என்ற வரும்முன் காக்கும்

யோசனையோடு - புருஷனை மயக்கித் தன்மீது மோகம் ஏற்படச் செய்ய உதவும் மருந்தை நீலாவதி வீட்டிலிருந்து வந்த லட்டிலே பொதிந்து வைத்தாள். அவருக்கு தெரியாமலே அவர் விழுங்கி விடுவார் என எண்ணினாள்.

ஆனால் எதிர்பாராதது - அல்லது எதிர்பார்த்தது தானோ? - நடந்து விட்டது. அவள் திட்டத்தின்படி பழியை நீலாவதி தலையிலே போட்டுத் தப்பித்துக்கொண்டாள் - அப்போதைக்கு!

அவள் மனம் அமைதியுறவில்லை, திக்குத்திக்கென்று உதைத்துக் கொண்டிருந்தது. அவளால் தூங்கவே முடியவில்லை.

விளக்குகள் எல்லாம் அணைக்கப்பட்டபிறகும் பண்ணையார் நன்றாகவே தூங்கிவிட்டார் என்பதன் அடையாளமாக நீண்ட குரட்டை எழுந்த பிறகும் அவள் வெகுநேரம் தூங்கவில்லை.

'இப்பதைக்கு நான் சொன்னது நெசம் போல பட்டுட்டுது. ஆனால் உண்மை தெரியாமலா போகும்? நாளைக்கே விளையாட்டுப் போக்காகவோ — அல்லது தெரிஞ்சுக்கிடணும்னே — நீலாவதி கிட்டேக்கேட்டால் வெளிச்சமாயிடாதா? அல்லது, செல்லம் பண்டிதரிடமே விசாரிக்கப்போயி; அவரு உள்ளதைச் சொல்லிப் போட்டா? எப்படியோ உண்மை தெரிஞ்சு போச்சுன்னு என்னாகும்? என்ன செய்வாங்க? ஏச்சும் உதையும்...! நான் இப்படிச் செய்திருக்கப் படாதுதான். நான் எவ்வளவோ சொன்னேன். அம்மைதான் கேட்காம ஒரேபிடியாச் சாதிச்சு...இப்ப, இனிமேல் அவளா கஷ்டப்படப்போறா? இன்னைக்குராத்திரி அவ மனமா குத்திக்குடையுது? அவ சுகமாத் தூக்கிக்கிட்டிருப்பா, என் புத்தியைச் செருப்பாலடிக்கணும். நான் இப்படி செஞ்சேனே!... ... இப்படி முடிஞ்சதும் நல்லதுக்குத்தான். இதுவும் கடவுள் செயல்னுதான் தோணுது மருந்தைத் தின்னுவச்சு, அது என்னவாவது செய்து அவுகளுக்கு ஆபத்து விளைச்சிட்டுதுன்னா அப்புறம்?...'

இந்த விதமாக அவள் உள்ளம் எண்ண அசை போட்டுக் கொண்டிருந்தது.

பெரிய கண்ணாடியை அல்லது கடியாரத்தைக் கீழேதள்ளி உடைத்துவிட்டு, 'மற்றவர்களுக்குத் தெரியக்கூடாதே. அப்பா அடிப்பாங்களே. இது சரியாப் போயிரட்டும், கடவுளே' என்று ஏங்குகிற சின்னப்பயல் மாதிரி—விலை உயர்ந்த பட்டுப் பாவாடையைக் குதியாட்டத்திலுல் கிழித்துவிட்டு அதை மடித்து வைத்து 'சாமி, உனக்குக் கோடிப் புண்ணியம் அது ஒட்டிக்கிடட்டும். நீ நல்லாருப்பே. அது ஒட்டிக்கிடட்டும்' என்று மனமுருகிப் பிரார்த்தனை பண்ணுகிற சிறுமிகள் மாதிரி—செய்யக்கூடாத தவறை இழைத்த பிறகு அதன் விளைவுகள் எழாமல் போகட்டும் கடவுளே என்று விழுந்து கும்பிடுகிற பல மனிதர்களையும் போலவே, பொன்னம்மாளும் கண்ணீருகுத்துக் கடவுளைப் பிரார்த்தித்தபடி புரண்டு கொண்டிருந்தாள்.

'இது இப்படியே போயிரட்டும். உண்மை தெரியாமலே போகட்டும். பிள்ளையாரப்பா, உனக்கு கொழுக்கட்டை பண்ணி வைக்கிறேன்' என்று ஏங்கினுள். வைரவனுக்கு வடமாலையும், சனி பகவானுக்கு எள்ளும் திரியும், சுடலை மாடனுக்கு சுட்டகோழியும் பட்டைச் சாராயமும், பலப்பல சாமிகளுக்கு அர்ச்சனை, பாயாசம், சர்க்கரைப் பொங்கலும்—இப்படி யாராருக்கு எதெது என்ற நியமம் உண்டோ அது தவருதபடி நிவேதித்துக் கும்பிடுவதாக நேர்ந்து புலம்பினுள். அவளுக்கு அறிமுகமான இந்தத் தேவதைகள் எல்லாம் அவள் வாக்களிக்கிற லஞ்சத்தைப் பெற்றுக்கொள்ள மறுத்து விடுமோ—அல்லது பெற்ருலும் அவளது இஷ்டம் போல் நிறைவேற்றித் தராது போய்விடுமோ—என்ற சந்தேகந் தானே என்னவோ, அவள் மனக் குழப்பம் குறையவே யில்லை.

'வெத்திலைச் செல்லத்திலே பத்திரமாக வைத்தபொட்டணத்தைத் தூக்கி அடுப்பிலே போட்டிரலாமா?' என்ற ஆசை ஏற்பட்டது. பிறகு 'அவுக காலையிலே எழுந்ததும் அதைக் காணலியேன்னு சண்டைக்கு வந்தால்?' என்ற பயமும் எழுந்தது.

'சரி, வாறது வரட்டும்! கடவுள் காப்பாத்தாமலா போவாரு!' என்று தேற்றிக்கொண்டாள். தூக்கம் கண்களை அழுத்திக் கிரக்கம் கொடுக்கவும், தன்னையறியாமலே தூக்கத்தில் விழுந்தாள் பொன்னம்மா.

## 11. அலைபடு உள்ளங்கள்

வெள்ளிக்கிழமை இரவிலே காயங்குளத்தாள் சொல்லிப்போன சேதியை எண்ணி எண்ணி தூங்காமல் புரண்ட நீலாவதிக்கு காலையிலேகூட மனத்தெளிவு பிறக்கவில்லை. பொன்னம்மாதான் ஏவல் வைக்கத் தூண்டியிருப்பாளா; அதனால்தான் செல்லம் பண்டிதர் வர மறுத்துவிட்டாரா; அப்படியானால் இதை எப்படிக் கண்டுபிடிக்கலாம்; யாரிடம் கேட்கலாம்—இன்னோரன்ன நினைவுக் குமிழிகள் தோன்றித் தோன்றி மறைந்தன அவள் உள்ளத்தில்.

பொன்னம்மா தான் தீயை ஏவிவிடும்படி செல்லம் பண்டிதரைக் கேட்டுக்கொண்டிருந்து, அதன்படியே காரியங்கள் முடிந்திருந்தன என்றால், இதை பண்ணையாரிடம் எப்படித் தெரிவிப்பது—அல்லது தெரிவிக்காமலே இருக்கவா—என்ற அரிப்பு வேறு புரண்டு கொடுத்தது.

‘எதையும் நல்லாத் தெரிஞ்சுக்கிடாம, திட்டாந்தரமா ஒருத்தி மேலே எப்படிப் பழியைப் போடுறது? பொன்னம்மா, பாவம்! நல்ல குணம். அவ மேலே எனக்கு என்றைக்கும் கோபமோ, வெறுப்போ கிடையாது. அவளும் அப்படி ஏதாவது இருப்பதாகக்கூடக் காட்டிக்கிடலியே...... ஊஹம். ஆனா யாரைத்தான் உறுதியா நம்ம முடியுது இந்தக் காலத்திலே? பண்ணையாருக்கு அவ மனக்கஷ்டம் தெரியாமலா போயிருக்கும்?...இப்படிப் பழி வாங்கணும்னு நினைக்கக் கூடிய அளவுக்கு அந்தப் பொண்ணு மனசு குமுறிக் குமைஞ்

சிருக்கணும்னு அது இத்தனை நாளா மனசுக்குள்ளேயே எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பா! பாவம்...'

புரி அவிழ அவிழ காற்றாடியை மேலே மேலே நெளிந்து எவ்வி உயரப் பறக்கும்படி செய்யும் காற்றுப்போல, அவளது மனப்பட்டத்தின் கயிற்றைத் தளர்த்தித் தளர்த்தி நினைவு வெளியிலே நீந்தச் செய்து கொண்டிருந்தது இந்த எண்ணம்.

'பேச்சோடு பேச்சாக இதையும் பண்ணையாரு காதிலே போட்டுவைக்க வேண்டியதுதான். அவருக்கும் விசயம் தெரிய வேண்டியதுதானே' என்று நினைத்தாள். அவளுக்கிருந்த மனக் குழப்பத்தில் அவள் வீட்டு அலுவல்களை தப்பும் தவறுமாகவே செய்தாள். பிறகு ஒன்றும் செய்யாமல் சும்மா உட்கார்ந்திருப்பதுதான் சரி என்று கையைக் கழுவி விட்டு சேலையில் துடைத்தபடி முன் கட்டுக்கு வந்தபோது அங்கு பண்ணையார் உட்கார்ந்திருப்பதைக் கண்டாள்.

'நீங்க எப்ப வந்தீக? வந்து கம்முன்னு, மூச்சு கீச்சு காட்டாம இருக்கேளே!' என்று விசாரித்தாள்.

'இப்பதான் வந்தேன். அஞ்சு நிமிசம்கூட ஆகியிருக்காது. வீணுக் கூப்பிட்டு வேலையைக் கெடுப்பானேன்னுதான் சும்மா இங்கேயே இருந்தேன்' என்றார். 'ராசத்தை எங்கே? அவளுக்கு இப்ப எப்படியிருக்கு? திரும்ப மயக்கம் கியக்கம் ஒண்ணும் வரலியே?' என்று அக்கறையாகக் கேட்டார்.

'அதெல்லாம் ஒண்ணுமில்லே' என்றாள் நீலாவதி. அவள் சிவகுருநாத பிள்ளையின் முகத்தைப் பார்த்தாள். அவரோ தரையை நோக்கியபடி தவமிருந்தார்!

* *

பண்ணையார் காலையில் எழுந்திருக்கும்போதே ராஜத்தை தரிசிக்க வேண்டும் என்ற நினைப்போடுதான் விழித்தார். வெற்றிலைச் செல்லத்தை முன்னால் வைத்து வெற்றிலை போடும்போதெல்லாம் அந்த மருந்துப் பொட்ட

ணத்தின்மீது அவர் பார்வை படியும். தானுக அவருக்குச் சிரிப்பு மலரும் முகத்திலே.

'நீலாவதியின் பைத்தியக்காரத்தனத்தை நினைத்து எப்படிச் சிரிக்காமல் இருக்க முடியும்?' என்று கேட்கும் மனம். 'நானும் முட்டாள்தனமாகத்தான் நடந்து கொண்டேனே என்னவோ! இப்படி விசயம் போகும் என்று தெரிந்தால்... ஆனுல், அதுபோல் ஏற்பாடுகள் செய்யவேண்டியதும் அவசியமாகத்தானே இருந்தது?...'—தொடர்பற்ற எண்ணத் தடத்திலே சிறிது முன்னேறிப் பின் திக்குத் தெரியாமல் விழித்தபடி அமர்ந்துவிடுவார்.

'எல்லாமே விசித்திரமாகத்தானிருக்கு. நாடகமே உலகம்கிருகளே அது சரின்னுதான் எனக்குக்கூடப் படுது!' என்று நினைத்துக் குறுநகை கொள்வார்.

பொன்னம்மாள் மௌனமாக காப்பி கொண்டுவந்து கொடுத்தாள். 'நீங்க குளிச்சிட்டுச் சாப்பிடப் போறீகளா? இல்லே, இப்பவே தோசை சுட்டிரவா? அடுப்பு எரியுது. கல்லு போடட்டுமான்னுதான் கேட்டேன்' என்ருள்.

அவருக்குப் புரியாததுபோலே 'ஊம்ம்' என்று இழுத்தார். பிறகு 'சரி எதுக்கும் தோசையைச் சுட்டுப் போட்றேன்! நான் எப்பவாவது தின்னுட்டுப் போறேன்' என்று சிரித்தார்.

'இப்பவே சட்டு வைச்சால், பிறகு தோசை எரு மாதிரி இருக்கு, சூடு இல்லே என்று சொல்வேளேன்னு தான் கேட்டேன்' என்று சொல்லுதிர்த்துவிட்டு உள்ளே போனுள்.

பொன்னம்மா வழக்கம்போல் வேலைகளை கவனித்து வந்தாளே தவிர, அவள் உள்ளத்தில் கொந்தளிப்பு இல்லாமற் போகவில்லை. அவளைப் பொறுத்தவரையில் சரி, வெள்ளம் வந்துவிட்டது. தலைக்கு மேலே போகும்போது, ஒரு சாண் அதிகம் போனுல் என்ன, ஒரு அடி உயரம் அதிக

மாகிவிட்டால்தான் என்ன! வர்றது வந்துவிட்டுப் போகுது' என்று எல்லே வகுத்துக்கொண்டான்!

பண்ணையார் சுடச் சுட தோசை தின்பதைத் தள்ளி வைக்கவில்லே. குளிப்பதைத்தான் 'பிறகு பாத்துக்கிடலாம்' என்று ஒத்திப் போட்டு முடிந்ததுமே கிளம்பிவிட்டார் நீலாவதி வீட்டுக்கு. வழி நெடுக ராஜத்தின் நினைவுதான். அவள் என்னை எதிர்பார்த்து நிற்பாளா? மகளை அழகுபடுத்தி வைத்திருப்பாளா நீலா? இப்படி எவ்வளவோ நினைப்புகள்?

நீலாவதி வீட்டை யடைந்தபோது பண்ணையார் பார்வையில் யாரும் தென்படவில்லே. நீலாவைக் காணுமே என்று கேட்கவில்லே அவர் மனம். 'ராசாத்தி எங்கே இருக்கா? படுத்திருப்பாளோ? இன்னைக்கும் ஏதாவது மயக்கம் ..புள்ளையை இப்படியே கவனிக்காமலே விட்டிருந்தா உடம்புக்கு ஆபத்துல்லா. சத்தான மருந்துகள், பழங்கள் நிறைய வாங்கிக் கொடுக்கணும்' என்று எண்ணியபடி, நாற்காலியில் உட்கார்ந்தார்.

'ஆமா இந்த மருந்து விசயம்பற்றி நீலாவதிகிட்டேப் பிரஸ்தாபிக்கலாமா வேண்டாமா?' என்ற கேள்வி எழுந்தது. 'எப்படிக் கேட்பது? நீ எனக்கு மருந்து வச்சியான்னு! என்ன முட்டாள்தனம். இப்ப கேட்பானேன் வீணு? அவ பேச்சு, செயல் எல்லாத்தையும் கவனிச்சு மெது மெதுவாகக் கிரகிக்கணும் .. அதுக்காக, தெரிஞ்சுக்கிடலேங்கிற மாதிரியிலும் இருந்திடப்படாது. அப்புறம் இவளுகள்ளாம் என்னை அசட்டுப்பய—ஏமாந்த சோணகிரின்னு — நினைச்சிரப் போரு......'

இவ்விதம் எண்ணச் சுழலில் அவர் சிக்கித் திணறிய வேளையிலேதான் வந்து சேர்ந்தாள் நீலாவதி. அவளிடம் என்ன பேச்சை எப்படித் தொடர்வது என்ற தயக்கம் அவருக்கு ஏற்பட்டது. அவள்கூட மௌனமாகத்தான்

நின்ருள். இருவருக்கும் இத்தகைய திகைப்பு என்றுமே ஏற்பட்டதில்லை.

தான் மருந்து வைத்துவிட்டது இவருக்குத் தெரிந்திருக்குமோ—அல்லது, நம்ம பண்ணையாருக்கு இப்போ போயி மோக மருந்து கொடுக்கத் துணிந்தோமே—என்று மன அரிப்புதான் அவளை சகஜமாகப் பேசவிடாமல் தடை செய்கிறது என்று அவர் நினைத்தார்.

பண்ணையார் ஏன் கலகலப்பாகப் பேசவில்லை? பொன்னம்மா விஷயத்தைச் சொல்லியிருப்பாளோ ஒரு வேளை! பெருமையடிக்காமலிருக்க முடியுமா அவளால்! அதனுல் அவர் மனம் குழம்பி இருக்கிருர் போலும் என்ற நினைப்பு படர்ந்தது நீலாவதி உள்ளத்தில்.

என்ன பேசுவது?

'உன் மகள் மீது எனக்குப் பிரியம் இல்லாமலா போச்சு! எத்தனை தடவை உனக்கு படிச்சுப் படிச்சுச் சொன்னேன்; கெஞ்சாத வகையெல்லாம் கெஞ்சிக் கேட்டேனே. அப்பவே நீ 'ஊம்'னு வாயசைத்திருந்தால், இவ்வளவு வீண் தொல்லைகளுக்கு இடமே இல்லையே. சரி, போவுது! ராசாத்தியை எங்கே? - இப்படியா கேட்பது அவளிடம் போய்! ஏன் ராஜம் தலைகாட்டவேயில்லை? நானுகத் தேடவேண்டும், கேட்கட்டுமே என்று திட்டமோ?' பண்ணையார் மனம் நினைவுத் தறியில் எண்ணப் பாவு ஓட்டிக்கொண்டிருந்தது இந்தக் கதியிலே.

'உங்கள் பெண்டாட்டி பொன்னம்மா இருக்காளே, அந்த ராங்கிக்காரி தானே நம்ம வீட்டுக் கல்யாணப் பந்தலிலே தீப் பிடிக்கும்படி மந்திரிச்சிருக்காளாம்? செல்லம் பண்டிதனைக் கேளுங்களேன். இப்போ அவ வயிறு குளிர்ந்திருக்கா? இப்படியா கேட்பது இவரிடம்?' - இந்தத் திகைப்பு நீலாவதிக்கு.

இரண்டு பேரும் பேசத் துணிவற்று இருந்தார்கள். எத்தனை நேரம் அப்படி இருக்க முடியும்? பண்ணையார் வாய் திறந்தார்: 'டவுனுக்கு போன ஆளு வந்திட்டுது. ஆனு மாப்பிள்ளையைப்பற்றித்தான் தகவல் எதுவும் இல்லே. என்ன செய்வது?'

'இதை என்னிடம் சொல்வானேன்—என் வயிற்றெரிச்சல் அதிகம் ஆகட்டுமேங்கிறதுக்கா? பொன்னம்மா கிட்டேச் சொல்லுங்க அவ சந்தோஷப்படுவாள்!'—இவ்விதம் அறிவிக்கவேண்டும் என்று துடித்தது அவள் உள்ளம். ஆனல் அவள் சொல்லவில்லே. 'ஊம், என்ன செய்றது?' என்றுதான் இழுத்தாள், துணைக்கு ஒரு நெடுமூச்சையும் கூட்டி!

'அதற்குப் பிறகு என்ன பேசுவது? என்ன செய்றது? இப்படிப் பண்ணிவிட்டுப் போயிட்டானே என்று அனுதாபக் குரலில் பேசவா! எனக்கு வருத்தமிருப்பதாகச் சொன்னல், அது அயோக்கியத்தனமாக அல்லவா படும்! அதிலும் லட்டோடு லட்டாகக் கற்கண்டுச் சேதி போல இங்கேருந்து தூது வந்திருக்கிறபோது!'......அவர் உதடுகளில் சிரிப்பு ஊர்ந்தது.

நீலாவதி அவரைக் கவனித்தபடி நின்ருள். 'சிரிக்க மாட்டீங்களா. பின்னே?' என்று எரிந்து விழவேண்டுமென்றுதான் தவித்தாள். ஏதாவது சொல்லியிருப்பாள். 'அம்மா!' என்று அழைத்தபடி அங்கு வந்து சேர்ந்தாள் ராஜம். பண்ணையார் இருப்பதைக் கண்டதும் மௌனமானுள்.

'என்னம்மா கண்ணு?' என்று திரும்பி அவளைப் பார்த்தாள் நீலாவதி.

'சும்மாதான் கூப்பிட்டேன். இங்கே தனியா என்ன செய்தேன்னு பார்க்க வந்தேன்...' அவள் பார்வை பண்ணையார் முகத்தில் பாய்ந்தது. ஒரு கணம் அங்கு திகைத்துத் தேங்கி நின்றது. அப்போது அவள் கருவிழிகளிலே ஒரு

மிரட்சி, அச்சம் ஒளிரும் கலக்கம், மிதந்தது. அந்த முகம் ஏதோ ரகசியத்தைச் சொல்வதுபோல—அவளுக்குப் புரியாமல் குழப்பத்தை விளைவித்துக் கொண்டிருந்த பயங்கரப் புதிர் ஒன்றுக்கு அதிக பயங்கரமான விடை அம்முகத்திலே மின்னுவது போல—தோன்றியது. அவள் பார்த்தாள். பேசாமல் திரும்பி அடுப்பங்கரைக்கே போய்விட்டாள்.

அன்றலர்ந்த ரோஜா மலர்போல் திகழ்ந்த - இனிய ரோஸ் வண்ணப் பட்டாடை போர்த்து மிளிர்ந்த பூங்கொடியன்ன - ராஜத்தை, அவள் எழிலை விழுங்கிய பண்ணையார் அவள் மின்னலெனை மறைந்ததை உணர்ந்து ஏங்கினார். வான் வில்போல் வனப்புக் காட்டும் அந்தக் கன்னி 'இன்னும் கொஞ்சநேரம் நின்று என்னுடன் பேசிக்கொண்டிருந்தால் என்ன தவறு வந்துவிடப் போகிறதாம்? அதிலும், இந்த மருந்து வேறு கொடுத்து என்னை மயக்கத் துணிந்தபோது! ஒருவேளை வசியக் கலையிலே இதுவும் ஒரு உத்திபோலும்... ஊம். அல்லி ராணிகள் நாடகம் எப்படி வளர்கிறது என்று தான் பார்க்கலாமே!' என்று நினைத்தார் பண்ணையார்.

'சரி. நீலாவதியோ பேசா விரதம் அனுஷ்டிக்கிறாள். ராசாத்தி வந்தா. டக்கூன்னு மறைஞ்சிட்டா. இன்னமே இங்கே காத்திருப்பானேன்? சாயங்காலம் வரலாம்' என்று யோசனை கூறியது உள்ளம். 'நான் போயிட்டு வாறேன், நீலம்' என்றார்.

'அதுக்குள்ளே என்ன அவசரம்? இப்பத்தானே வந்தீங்க?'

'இன்னும் குளிக்கலே. வேறே வேலைகளும் நிறையக் கிடக்கு.........வாறேன்' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார்.

அவர் வாசல் நடை இறங்கித் தெருவில் கலந்துவிட்டதை உள்ளே இருந்தபடி கவனித்து நின்ற ராஜம் மெது

வாக முன் கட்டுக்கு வந்தாள், 'என்னம்மா, பண்ணையாரு என்ன சொல்தாரு?' என்று கேட்டபடி.

'ஒண்ணும் சொல்லலியே! ஏன்?'

'சும்மான் கேட்டேன். நீ கண்டா அவரிடம் விசாரிச்சி யோன்னு'

'அட பைத்தியாரப் புள்ளெ, இதை அவர் கிட்டே எப்படிக் கேட்க முடியும்? நமக்கே திட்டமாத் தெரியாத போது...'

'இல்லே. நீ ஒரு வேளை......'

'எனக்குத் தெரியாதா என்ன! அது சரி. அவரு இங்கே இருக்கிறபோது நீ அவசரம் அவசரமா என்னவோ சொல்ல வந்தையே, என்னது?'

'அதா! செல்லம் பண்டிதர் சிவன் கோயிலுக்குள்ளே இருந்து வெளியே வந்து இந்தப் பக்கமாப் போனது தெரிஞ் சது. அவரைக் கூப்பிடலாமேன்னு சொல்ல ஓடி வந்தேன். பண்ணையாரு இருந்தாரா, அதனுலே பேசாமல் போய்விட் டேன்!'

'அவன் தான் நாம கூப்பிட்டு அனுப்பியதுக்கே வர லியே. நேத்துத்தான் வர முடியலேன்னு, இன்னைக்கு இப்போ இவ்வளவு தூரம் வந்தவன் இங்கே வந்து பார்த்துச் சொல்லிட்டுப் போகப்படாது?' என்று முனங்கினுள் நீலா வதி. 'அவனைக் கூப்பிட்டுத்தான் என்ன செய்யப் போருேம்!' என்று அலுத்துக் கொண்டாள்.

'இது நிசமா, பொய்யான்னு தெரிஞ்சுக்கிடலாம்லா?' என்று அன்னையின் முகத்தைப் பார்த்தாள் மகள்.

'அவனு உள்ளதைச் சொல்லுவான்?' என்று வருத்தக் குரலில் சொன்னுள்.

'இதைச் சொல்லாட்டாலும் அத்தான் எங்கே போயிருக்கலாம்னு.' அதற்கு மேல் அவள் பேசவில்லை. நீர் படர்ந்த அவளது அழகுக் கண்கள் அன்னையின் கண்களிலே தங்கின ஒரு கணம். சட்டெனத் தலைக்குனிந்தாள் ராஜம். அவளது செவ்விய கன்னங்கள் காட்டின அவள் உள்ளத்து நாணத்தை. கண்களிலிருந்து உருண்டோடிய நீர்த்துளிகள் அவள் துயரத்தை எடுத்துச் சொல்லின. அவள் சோகம் தாயின் இதயத்தைத் தைத்தது. அவளை அன்போடு பற்றி அணைத்து, 'அழாதே ராஜம்! தெய்வ சோதனைதானோ என்னவோ, நாம இப்படி எல்லாம் கஷ்டப்பட வேண்டி யிருக்கு. சின்ன வயசிலே நீ இப்படிக் கஷ்டப்பட நேர்ந்திட் டுதே. இதை நினைக்க நினைக்க எனக்கு ரொம்ப வருத்தமாத் தானிருக்கு. மற்றவங்கதான் இப்படியெல்லாம் பண்ணு தாங்கன்னு, ரத்னம்கூட....' அவள் தொண்டை கம்மியது. 'அழாதே கண்ணு' என்று சொல்லி, தன் சேலைத் தலைப்பால் மகளின் கண்களைத் துடைத்தாள் நீலாவதி. அவள் கண்களி லும் நீர் பெருகியது.

'ராஜம், கவலைப்படாதே கண்ணு. செல்லம் பண்டி தனைக் கூப்பிடலாம். அவன் வராமல் போனால், அவன் வீட் டிலே போயாவது கேட்டுட்டு வாறேன். என்ன செய்றது, அம்மா. அன்றெழுதினதை ஈசன் அழிச்செழுதப் போறானோ? நடக்க வேண்டியது நடந்துதானே தீரும்?' என்று தேற்று வதில் ஈடுபட்டாள்.

ராஜம் கண்ணீர் சிந்தாமல் நிறுத்திக்கொண்டாள். எனினும், அவள் உள்ளத்தில் அமைதி மலர்ந்துவிட முடி யுமா! அவள் கண்ட இன்பக் கனவுகள், வளர்த்த ஆசைகள் எல்லாம் கருகிப்போன பிறகு எப்படி ஆனந்தம் பூக்கும்! ரத்னம் ஓடிப் போகாமல் இருந்தாலாவது, அவளுக்கு ஆறு தல் இருந்திருக்கும். அவன் இருந்தால் அவள் வருத்தப்பட வேண்டிய அவசியமே கிடையாதே! பந்தல் எரிந்தது பெரிய நஷ்டமொன்றுமில்லையே. ஆனால், மாலையிட்ட மணாளன் கல்யாணத்தன்றே காணாமல் போய்விட்டால்—அவளை விட்டு

விட்டு மறைந்து போவதென்ருல்—அவளிடம் அவனுக்கு ஆசை இல்லையா? 'அத்தான் என்னை வெறுத்ததே இல்லையே. அத்தானுக்கு என்மீது கோபமோ, வருத்தமோ கிடை யாதே. இங்கே யாரிடமும் கோபமிருக்க நியாயமும் இல்லை. இந்தக் கல்யாணத்தில் இஷ்டமில்லை யென்ருல், முதலிலேயே சொல்லியிருக்கலாம். இஷ்டமில்லையென்று எப்படிச் சொல்ல முடியும்? அத்தான் ஏன் திடீரென்று, யாரிடமும் சொல்லாமற் கொள்ளாமல் ஓடிப்போக வேண்டும்?'—அவ ளது பிஞ்சு உள்ளம் இவ்விதம் அலைமோதிக் கொண்டிருந்தது அடிக்கடி.

கனவிலும் நனவிலும் ராஜம் தன் அத்தானை நினைத்தே ஏங்கித் துடித்தாள். சில சமயங்களில் அவளை அலறித் துடிக்க வைத்ததே அந்தக் கனவு...கனவிலே வந்து பயமுறுத் திய முகம்...அவள் உடல் குலுங்கியது. இப்போது பண்ணை யார் முகத்திலேகூட அதே பயங்கரம்...நடுக்கும் கோரக் கனலின் தகதகப்பு! மறுபடியும் அவளைக் குலுக்கி எடுத்தது அந்த நினைப்பு.

அவள் உடல் பதறுவதை உணர்ந்த நீலாவதி மகளைத் தன் உடலோடு நன்கு அணைத்துக் கொண்டாள். 'ஏனம்மா உன் உடல் நடுக்குது இப்படி? ஏன்?' என்று கொஞ்சும் குர லில் குழைவாகக் கனிவாகக் கேட்டாள். 'ஒண்ணுமில்லே' என்ற பாவனையாகத் தலையை ஆட்டினுள் ராஜம்.

'படுக்கிறதா இருந்தா படுத்து தூங்கேன்...லச்சுமி!...'

'இந்தா வந்திட்டேன்' என்று குரல் வந்தது. அதைத் தொடர்ந்து வந்தாள் லக்ஷ்மி, வரும் பொழுதே காப்பிப் பாத்திரமும் டம்ளரும் எடுத்துக் கொண்டு.

'நீயே கொண்டு வந்திட்டியா? இதுக்குத்தான் கூப்பிட் டேன்...இதையெல்லாம் கீழே வச்சிட்டு, ராஜம் படுக்குற துக்கு படுக்கை...'

'வேண்டாம்மா. நான் இப்ப படுக்கலே' என்றாள் ராஜம்.

'உடம்புக்கு என்னமும் செய்தா ராசம்?' என்று வினவினாள் லக்ஷ்மி.

'உடம்புக்கு ஒன்னுமில்லே. மனசுதான் ஒரு மாதிரி கஷ்டமா...'

'வருத்தப்படாதேம்மா...எல்லாம் சரியாப் போயிரும். அதையே நினைச்சு நினைச்சு ஏங்கினால் உடம் என்னாகும்? வீணாக் கவலைப்படாதே' என்றாள் தாய்.

'ஊம்' என்றாள் ராஜம். அவள் வேறு என்ன சொல்லப் போகிறாள்! இல்லை, என்னதான் சொல்வதற்கு இருக்கிறது!

## 12. தாண்டவராய பிள்ளை

செங்குளம் சிவன் கோயில் தெருவில் நடுநாயகமாகத் திகழ்ந்த பெரிய வீட்டிலே வாழ்ந்த பெரிய மனிதர் அந்த ஊருக்கே தனிக் கௌரவம் பெற்றுத் தந்தவர். ஆடம்பரமாகவும் அதிகார முறுக்கோடும் நடந்துகொண்ட அவர் 'ஆள் முறுக்காகவும்' இருந்தார். நல்ல உயரம். வாட்டசாட்டமான வளர்ச்சி. கம்பீரமளிக்கும் மீசை. அவர் வகித்து வந்த அரசாங்க உத்தியோகமும் அவருக்குப் பெருமை கொடுத்தது.

பல வருஷங்களுக்கு முன்பு, நாட்டிலே விழிப்பு ஏற்படாத காலத்தில்—நாகரீகம் பரவாத பருவத்தில்—சிறு நகரங்களிலும் கிராமங்களிலும் எந்த அரசாங்க உத்தியோகஸ்தரும் அளவற்ற மரியாதை பெறமுடிந்தது. முறுக்கும், ஆக்கினைகள் செய்து வைக்கும் துணிவும், தானகவே தண்டனைகள் கொடுக்கும் சுபாவமும் பெற்றுக்கொண்டால், ஒருவர் அந்த ஊரின் 'ராஜா'வாக விளங்க வசதிகள் இருந்தன. அத்தகைய வசதிகளை தாண்டவராயபிள்ளை பயன்படுத்தி ஆரவார ஆட்சி புரிந்துவந்தார்.

அந்த ஊர்க்காரர்களுக்கு அவருடைய உதவி தேவையாகத்தான் இருந்தது. கோர்ட்டுக்கும் போலீசுக்கும் போகாமலே சிறுசிறு பிரச்னைகளை தீர்த்துக்கட்ட—களவு முதல் கடன் விவகாரங்கள் வரை பைசல் பண்ண—அவரது செல்வாக்கு பயன்பட்டது. அவரும் உண்மையைக் கண்டுபிடிப்பதற்காக எவ்வித முறைகளைக் கையாளவும் தயங்கமாட்டார்.

பழமொழிகளைச் சிதைத்துப் பேசுவதில் திருப்தி காணும் அவர் அடிக்கடி சொல்வது 'அடி உதவுகிற மாதிரி அக்கா தங்கச்சி உதவமாட்டாள்' என்பது. 'அடிமேல் அடி அடிச் சால் ஆனையும் சாகாமலா போகும்?' என்றுகேட்கும் சுபா வம் பெற்ற அவருக்கு நிச்சயமாகத் தெரியும் சரியான உதை கொடுத்தால் பொய்யும் பிடிவாதமும் செத்து விழுந்து, அந்த இடத்தில் உண்மை தலைகாட்டும் என்று.

'கொக்கு தலையிலே வெண்ணெய் வச்சுப் பிடிக்கிறது என்பதே தப்பு. கொக்கு தலையிலே நறுக்குன்னு ஒரு குட்டு வச்சால் அது தானுகக் கதிகலங்கி நம்ம காலிலே விழாதா என்ன!'—இப்படி அவர் உதிர்க்கும் ஞானச்சுடர்கள் எவ் வளவோ! அவருடன் ஒரு மணி நேரம் பேசிக்கொண்டிருந் தாலே போதும், ஒரு புத்தகம் படித்த மாதிரித்தான். அவ் வளவு லாபம் உண்டு என்று அவரே சொல்வார்.

அவர் 'ஸர்க்யூட்' போய் வருவதும்—பெண்கள் சொல் வதுபோல் சொன்னால், 'ஸர்க்கோடு' போறதும் வாறதும்— அதற்காகப் பலர் அவர் வீட்டு வாசலில் கைகட்டிக் காத்து நிற்பதும் அவர் அந்தஸ்தின் அடையாளங்கள். அவருக்கு போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டரும், அதிகார வர்க்கத் தூண்க ளும்—அவரே ஒரு 'தூண்' தானே!—நண்பர்கள் ஊர்ப் பிரமுகர்களும் 'வேண்டியவர்கள்' தான்.

ஜில்லாக் கலெக்டர் அந்த ஊருக்கு விஜயம் செய்த போது, மோட்டாரை சிவன் கோயில் முகப்பு மண்டபத்தில் விட்டு விட்டு, அவர் வீட்டு வழியாக 'முசாபரி பங்களா' வுக்குப் போனபோது 'ஹல்லோ, டண்டவராயபில்லே, இது தான் உங்கள் வீடா?' என்று இங்கிலீஷில் கேட்டது, பிள்ளைக்கு அந்த ஊரில் இருந்த மதிப்பை உயர்த்தியது என்றே சொல்லவேண்டும். அதைவிடப் பேச்சுக்குப் பொரு ளான விஷயம், கலெக்டர் துரை 'கியாம்பு' முடிந்து திரும்பிய போது அவருக்காக ஸ்ரீமான் பிள்ளை இரண்டு பெரிய கூடை களில் நூறு 'தாராக்கோழி'களை போட்டு அடைத்து அனுப்பி வைத்த காரியமாகும்.

தாண்டவராய பிள்ளை ஊர்க்காரர்களின் அன்பு, பயபக்தி முதலியனவற்றுக்கு ஆளாகியிருந்ததால் அவர் தீர்ப்புக்கு மதிப்பு இருந்தது. அவரால் துணிச்சலாகக் காரியங்கள் செய்யவும் முடிந்தது. தனது சக்தியில் அபார நம்பிக்கை கொண்டிருந்த அவருக்கு கல்யாணப் பந்தலில் தீ எப்படிப் பிடித்தது, யார் வைத்தது என்று கண்டுபிடிப்பது சுலபம் என்றே பட்டது.

சனிக்கிழமை காலையில் அவர் திண்ணையில் அமர்ந்து வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தார். அப்போது தான் நீலாவதி வீட்டிலிருந்து பண்ணையார் சிவகுருநாதபிள்ளை திரும்பி வழியே போய்க்கொண்டிருந்தார். திண்ணையில் அவர் இருந்ததைப் பார்த்தும்கூட, பாராதவர் மாதிரி தலை குனிந்து தரையிலே கண் பதித்தபடி நடந்தார் பண்ணையார். கூப்பிடலாமா வேண்டாமா; மனுஷன் ஏனிப்படி கடன் காரன் மாதிரி தப்பிப்போக விரும்புகிறார் என்ற எண்ணம் தாண்டவராய பிள்ளைக்கு எழுந்தது. கூடவே, பேச்சு கொடுத்துப் பார்க்கலாமே என்ற நினைப்பும் பிறக்கவே, 'அண்ணாச்சி......அண்ணாச்சியோய்!' என்று கூவினார்.

திடுக்கிட்டுப் பார்த்தார் பண்ணையார். 'சனியன் மாதிரி—வண்டி மலைச்சி—விக்ரகம் மாதிரி வழியிலே உட்கார்ந்துக் கிட்டு......சே' என்று அவர் மனம் புலம்பியது. இருந்தாலும் சிரிப்பை வரவழைத்து 'நீங்களா! அட, நீங்க திண்ணையி லேயே தான் இருக்கேளா? நான் கவனிக்கவேயில்லை' என்று முனங்கியபடி திண்ணைக்கு வந்தார்.

'ஆமா. உங்களுக்கு எத்தனையோ சோலி, எவ்வளவோ கவலை!' என்றார் தாண்டவராயர், 'உட்காருங்க. வெத்திலை போடுங்களேன்'.

பண்ணையார் திண்ணையில் தூரத்தில் அமர்ந்தார். தூணில் சாய்ந்தபடியே 'என்ன, கேம்ப் எல்லாம் முடிஞ்சி தாக்கும்?' என்று விசாரித்தார்.

'என்ன எழவோ—உத்தியோகம் இருக்குதே, பார்த்துத் தானே தொலைக்கணும். வெளியூர் போனா ரொம்ப வசதிக்

குறைச்சலா இருக்கு. அதிகாலையிலே பனி ரொம்பப் பெய்யுது. பாருங்க...'

'ஆமா எழவு மழை மாதிரில்லா கொட்டுது. மழை பெய்யவேண்டிய காலத்திலே பனி இப்படிப் பெஞ்சுதுன்னு சொன்ன, அப்புறம்?' என்று சொல்லி வைத்தார் பண்ணையார். கொஞ்ச நேரம் பேச்சு அங்கும் இங்குமாக அலைந்ததும், பண்ணையாராகவே கேட்டார்: 'என்ன துப்பு துலக்கிட்டேளா?'

'துப்பாவது துலக்குறதாவது! அதெல்லாம் ஒண்ணுமில்லே' என்று அலுத்துக் கொண்டார் பெரிய மனிதர்.

'இல்லே, கண்டுபிடிச்சிருவேன்னு சொன்னேளே. அதுக்காகக் கேட்டேன்'

'ஆமா அன்னைக்கு ராத்திரி தீப்பிடிச்சுதே அப்போ, பந்தக்காரத் தேவன் கல்யாண வீட்டுப் பந்தல் பக்கத்திலே தான் படுத்திருந்தானு?' என்று சாதாரணமாகக் கேட்டார் 'தாவன்ன.' அந்தக் கேள்வி பண்ணையார் எதிர்பாராத வேளையில் விழுந்து அவரை திடுக்கிடச் செய்தது.

'யாரு? கந்தத்தேவனு? ஏன்?' என்று பதட்டமாக வினவினார்.

'சும்மா தான் கேட்டேன். பந்தக்காரத் தேவன் மாதிரி ஒருவன் அன்னைக்கு ராத்திரி தீ, தீன்னு கத்திக்கிட்டு ஓடிப் போனனும் அவன் தானன்னு தெரியிறதுக்காகக் கேட்டேன்.'

'யாரு சொன்ன அப்படி?'

தாவன்ன சிரித்தார். 'அன்று ராத்திரி நானும் பையனும் தெருவிலேயே கட்டில் போட்டுப் படுத்திருந்தோம்.

'என்ன, தெருவிலேயா? இந்தப் பனியிலா?'

'பனி விடியப்போகிற நேரத்திலே தானே விழுது. தினம் பத்துமணி வரை தெருவிலே கட்டில் போட்டு உட்கார்ந்திருக்

கறதுதான் யாராவது பேச வாருங்க. இல்லேன்னு ரிப்போர்ட் பண்ண வாருங்களே.'

'ஆமா' என்று தலையாட்டினுர் பண்ணையார்.

'அன்னைக்கும் யாரோ பேசிக்கிட்டிருந்தாங்க. போற துக்கு பத்து, பத்தரை மணி ஆயிட்டுது. சரி, இன்னும் கொஞ்ச நேரத்திலே பட்டணப் பிரவேசம்தான் திரும்பி வந்திடுமே, இந்தப் பாதையாகத்தானே போகணும், அது வரும்போது பார்த்துவிட்டு, பிறகு உள்ளே போய் படுக்க லாம் அப்டீன்னு யோசித்து கட்டிலிலேயே தூங்கிட்டேன். நல்ல தூக்கம். அப்புறம் ஒரு மணி நேரத்திலேயே தான் தீ, தீன்னு கூப்பாடு வந்துட்டுதே!'

பண்ணையார் அவசரமாகக் கேட்டார்: 'நீங்களே ஆள் சத்தம் போட்டுகிட்டு ஒடுறதைப் பார்த்தேளா?'

'நான் பார்க்கலே. நான் பிறகு தான் முழிச்சேன். நம்ம சுந்தரம்தான் முதல்லே பதறி எழுந்திருச்சிருக்கான். அவன் தான் சொன்னுன் அப்படி......'

'சின்னப் பையன் கலவரத்திலே—அதிலும் தூக்க மயக்கம் வேறே—என்ன கண்டான்! ஹெஹ, என்ன நான் சொல்றது?'

'அதையே தான் நானும் சொன்னேன். இருந்தாலும் சந்தேகத் தெளிவுக்காகக் கேட்டேன்.'

'என்னவோ எனக்குத் தெரியாதே' என்ருர் பண்ணை யார். 'எனக்கு யார் மேலேயும் சந்தேகமே கிடை யாது...'

'நீங்க தான் திட்டமாகச் சொல்லிவிட்டீர்களே! அப்புறம் எதற்காக சந்தேகப்பட வேணும்?' என்று சொல்லுதிர்த் தார் 'நாவன்ஞு.' அந்தக் குரலிலே கிண்டல் தொனித் தது.

'நீங்க தான் உண்மையைக் கண்டுபிடிக்கப் போறீகளே! தாராளமாகக் கண்டுபிடிங்க...நான் வரட்டுமா? இன்னம்

குளிக்கலே. போய்தான் குளிக்கணும்' என்று விடைபெற்றுக் கொண்டு போய்ச் சேர்ந்தார் பண்ணையார்.

'இவரு திடுக்கிடுகிறதையும், மழுப்புகிறதையும் பார்த்தால் என்னவோ ஒருதினுசாக இருக்கு. ஆனால் இவரு மேலே வீணாகச் சந்தேகப்பட்டுப் பிரயோசனமில்லே...'

அவர் சிந்தனையில் ஆழ்ந்தவராய் நாற்காலியில் சாய்ந்து விட்டார். 'ஆமா. கல்யாண வீட்டுப் பந்தல் தீப் பிடிச்சு எரிஞ்சதைப்பத்தி நான் ஏன் கவலைப்படணும்? அதுதானே எனக்கே புரியலே. என் குணம் அப்படியமைஞ்சுட்டுது... அட அதுமட்டும் இல்லையே. தூங்கறவன் கண்ணிலே மிளகாப் பொடியை தூவிவிட்டுச் சிரிக்கிறமாதிரி, ஊர் பூராத் தூங்கும்போது தீ வச்சிட்டு, யாரு எவன்—கண்டுபிடி பார்க்கலாம்னு சொன்னால்... இப்ப அப்படி யாரும் சொல்லலே, அவன் இப்படி ஊரை ஏமாத்தப்படாது பாரும். இன்னைக்கு இப்படிச் செஞ்சவன் நாளைக்கு எவன் அல்லது எவன் தலையை யாவது ராவோடு ராவாகச் சீவிட்டுப் போகமாட்டான்னு எப்படி சொல்ல முடியும்? இந்த ஒரு குத்தத்தை அப்படியே விட்டுட்டால், மேலே மேலே குத்தம் செய்ய லைசென்ஸ் கொடுத்த மாதிரில்லா ஆகும்? அவனுக்கு ரொம்பத் தொக்காக அல்லவா போயிரும்? அதுக்குத்தான் அவனைக் கண்டு பிடிக்கணும்னு நான் நினைக்கிறேன்...... கண்டுபிடியாமலா போயிருவேன், பார்க்கலாம்' என்று நினைத்தார். மீசையை முறுக்கிவிட்டது கை. டம்மி நிற்கும் எவனோ ஒருவனை அந்த 'அவனை'ப் பார்த்து எச்சரிப்பதுபோல் தலையையாட்டினார்.

'பந்தல்காரத் தேவனைக் கூட்டிவரச் சொல்லலாமே' என்று நினைத்தார். 'சரி, சாயங்காலமாப் பார்க்கலாமே' என்று ஒத்திப்போட்டார். ஈஸிச்சேரின் நீண்ட கைகளில் கால்களை நீட்டி, சுகமாகக் கண்களை மூடிச் சாய்ந்திருந்தார்.

கொஞ்ச நேரம்தான் போயிருக்கும். 'தூக்கம் போலிருக்கு!' என்ற குரல் மெதுவாக—எங்கோ பள்ளத்துள்ளி

ருந்து எழுவதுபோல்—ஒலித்தது. கனவிலிருந்து விழிப்பது போல் கண்திறந்து பார்த்தார். எதிரே நீலாவதி நின்று கொண்டிருந்தாள்.

தாண்டவராய பிள்ளை நிமிர்ந்து உட்கார்ந்து, 'நீலா வதியா! வாம்மா வா... ஏது இவ்வளவு தூரம்? உட்காரு' என்று உபசரித்தார். அவள் படிமீது உட்கார்ந்தாள். எப் படிப் பேச்சை தொடங்குவது என்று அவளுக்குப் புரியவில்லை போலும்! மௌனமாக இருந்தாள்.

'தாவன்னு' பேசினார்: 'பாரேன், இப்படி நடக்குமின்னு யாரு கண்டது? நான் ஒண்ணு நினைக்க, நீ ஒண்ணு செய் திடறதுங்கிற மாதிரி, நீ திட்டமிட்டு சிறப்பாக் கல்யா ணத்தை நடத்த எவனோ தீயை வச்சுக் கெடுத்தும் போட் டானே, உம். இதுக்கு என்ன சொல்றது?'

'யாராவது தீ வச்சிருக்கணும்னுதான் நீங்ககூட நினைக் கிறேளா?' என்று கேட்டாள் அவள்.

'பின்னே? தீ தானாகவா புடிச்சிருக்கும்? இல்லே கேட் கேன். புகையுள்ள இடத்தில் தீ உண்டு என்பது நிசம் என் பாக. தீ எழும் இடத்தில் அதைப் பற்ற வச்சவன் எவனாவது இருக்கத்தானே வேணும். இல்லையா? என்ன நான் கேட் கிறது?'

'ஊம்' என்று தலையசைத்தாள் நீலாவதி. 'முதல்லே பண்ணையாரு......'

'அவர் என்னிடம் கூடத் தான் சொன்னாரு—வாணக் குழாய் விழுந்து தீ பிடிச்சுட்டுதுன்னு. அது தப்பு, எவனோ தான் தீ வச்சிருக்கணும். அதைக் கண்டு பிடித்தே தீர்வ துன்னு முடிவு கட்டிவிட்டேன்'

'நீங்க தான் உதவி பண்ணனும், எனக்கு என்ன தெரி யுது? இல்லே, என்னாலே என்ன ஆகும்? யாரு என்ன சொன் னாலும் சரி சரின்னு தலையாட்டி வைக்கிறேன். இது இப்படி முடிஞ்சது எல்லாருக்குமே ஒரே கவலையும் துக்கமும்தான்

உண்டாக்கிட்டுது. நான் எவ்வளவோ நினைச்சேன். கடவுளு இப்படிப் பண்ணிட்டாரே. அந்தப் பொண்ணு—பாவம், அதன் தலையெழுத்து இப்படியெல்லாம் கஷ்டப்படணும்னு இருக்கு—மெலிஞ்சு நொந்துபோகுது. ஊம். என்ன என்றது?'

'அது சரி. உனக்கு யார் மேலாவது சந்தேகமிருக்கா?' என்று கேட்டார் அவர்.

'யாரைச் சந்தேகிக்க முடியும்? வேண்டாதவங்க—இப்படிப் பண்ணக்கூடியவங்க-யாரும் இல்லையே. இருப்பதாகவே தெரியலியே......' அவள் கன்னத்தில் கை வைத்து சோகமாக உட்கார்ந்து விட்டாள்.

வெளியே வந்து எட்டிப்பார்த்தாள் 'தாவன்னு'வின் மனைவி, 'நீலாவதியா? வா...உன் மகளுக்குக் கல்யாணம் பண்ணி துக்கம்கொண்டாட வேண்டிய நிலை வந்துட்டுது!' என்று அனுதாபம் அறிவித்தாள்.

'என்னம்மா செய்றது? இப்படி நடக்கணும்னு இருக்கே. யாரைக் குறைசொல்றது? விதியைத்தான் நொந்து கொள்ளணும்' என்று சோக மூச்செறிந்தாள் நீலாவதி.

'விதி என்ன செய்யும்? எய்தவன் எவனோ இருக்க, மேலே வந்து விழுந்த கல்லை நொந்துகொண்டதாம் மாங்காய்—அந்தக் கதையிலேதானிருக்கு நாம் பேசுறது. மனுஷா செய்றது தானே எல்லாம்' என்றார் அவர்.

'மனுஷாள் செய்றது தான்னாலும் நம்ம வேலையும் பொழுதும் சரியாக இல்லாமப் போகப் போய்தானே இப்படில்லாம் வருது...இன்னொண்ணுல்லா. உங்களிடம் சொல்லலாமா வேண்டாமான்னு நினைச்சேன். சொல்றதுனாலே ஒரு குத்தமும் இல்லேன்னுட் தோணுது' என்று தயங்கினாள்.

'என்னது? தோணினதைச் சொல்லு சும்மா' என்று தைரியப்படுத்தினார் அவர்.

'யாராவது ஏவல் வச்சிருக்கலாம். ஏவலினாலே தீப்பிடிச்சிருக்கணும்னு......'

'தாவன்னு'வுக்கு சிரிப்பு பொங்கிவந்தது. 'ஏவலா? அப்படி யார் சொன்னது?' என்று கனைத்தார்.

அவர் ஸ்ரீமதி சிணுங்கினாள். 'அவ சொன்னதிலே இப்படிச் சிரிக்கதுக்கு என்ன இருக்கு? ஏவல், செய்வினைங்கிறதெல்லாம் இல்லாமலா போச்சு? எங்க மாமனாரு ஒருத்தர் கூட......'

'சரிதான். இருக்கும் இருக்கும்' என்று அவள் பேச்சுக்கு முற்றுப்புள்ளி போட்டார் பிள்ளை. 'அப்படி யாரு நீலாவதி ஏவல் வச்சிருக்கப் போறா! அவ்வளவு வன்மம் உன்மேலே யாருக்கு வரப்போகுது?'

'நானும் அப்படித்தான் நினைச்சேன். ஆனால்......' அவள் தயங்கினாள். சொல்வதா, வேண்டாமா என்ற சிறு போராட்டம். பிறகு சொல்லிவிட்டாள். 'இதை எவ்வளவு நம்பலாம்கிறது எனக்கே பிடிபடலே. இப்படியும் இருக்குமான்னு சந்தேகமும் இருக்கு காயங்குளத்தா சொன்னா, பண்ணையார் வீட்டுப் பொன்னம்மா செல்லம் பண்டிதர் மூலம் ஏவலுக்கு ஏற்பாடு செஞ்சிருக்கணும் அப்படின்னு. யார் மேலேயும் நான் பழியைப்போடத் தயாராக இல்லே. அது வேறே பாவம் எனக்கு எதுக்கு!'

'தாவன்னு' பிரமித்துப் போய்விட்டார். அவர் மனைவி பார்வதம்மாளுக்கும் அது திகைப்பையே தந்தது. 'இந்தக் காலத்துலே யாரையம்மா நம்ப முடியுது! எதைத்தான் உறுதியாகச்சொல்ல முடியுது!' என்று தன் அபிப்பிராயத்தை ஒலிபரப்பினாள்.

ஸ்ரீமான்மௌனமாக இருந்தார். இதைப்பற்றி என்ன முடிவு கட்டுவது என்றே அவருக்கு ஓடவில்லை. 'செல்லம் பண்டிதரிடம் நீ ஒன்றும் கேட்கவில்லையா?' என்று விசாரித்தார்.

'விபூதி மந்திரிச்சுப் போடச் சொல்லலாம்னு கூப்பிட்டு அனுப்பினேன். அவன் வரவேயில்லே. இன்னைக்குக் காலே

யிலே கோயிலுக்கு வந்தானும். கூப்பிட்டனுப்பினுளே, என்னன்னு எட்டிப் பார்ப்போம் என்றுகூடத் தலையைக் காட்டலே. அது வேறே சந்தேகத்தை உண்டாக்குது' என்ருள்.

'சரி. செல்லம் பண்டிதனை நான் கூப்பிட்டு அனுப்புறேன். இந்தா பாரு நீலாவதி, நீ வந்து சொல்லுவதற்கு முன்பே, தீ எப்படிப் பிடித்தது, யாரு வச்சா என்று கண்டு பிடிப்பதுன்னு முடிவுகட்டிவிட்டேன். எங்கே பார்க்கலாம்னு பண்ணைப்பிள்ளைவாள் வீராப்பு பேசியிருக்காக. பார்க்கலாமேன்னு தான். நீ வேறே வந்து சொல்லியாச்சு. இனிமேல் என்ன? உனக்கு யார் மீதாவது சந்தேகமிருந்தால் தெளிவாச் சொல்லிப்போடு' என்ருர்.

'எனக்கு யார் மீதும் சந்தேகமில்லை. இல்லாதது பொல்லாததைச் சொல்வானேன்!' என்ருள் நீலாவதி. பிறகு தன் வீடுபோய்ச் சேர்ந்தாள்.

தாண்டவராய பிள்ளை வண்டிக்காரனுக்கு உத்திரவிட்டார். 'பந்தல்கார கந்தத்தேவனைக் கூட்டிவா முதல்லே. பிறகு சாயங்காலமாக செல்லம் பண்டிதரை நான் வரச் சொன்னேன்னு சொல்லிட்டு வா'

'ரொம்பச் சிக்கலான விஷயமாகத்தான் முடியும் போலிருக்கு. நீலாவதி சொன்னது போலே இருக்குமோ. அதனுலே தான் ஒருவேளை பண்ணையார் தீ தானுகவே பிடிச்சிருக்கும்னு அடிச்சுப் பேசி வாருரோ...என்ன எழவோ, விசாரிக்க விசாரிக்க தானுத் தெரிஞ்சிட்டுப் போகுது!' என்று தனக்கே சமாதானம் சொல்லிக்கொண்டார் அவர்.

## 13. செல்லம் பண்டிதர்

நீலாவதி அடிக்கடி உச்சரித்திருக்கிருள் 'செல்லம் பண்டிதர்' பெயரை. பண்ணையார் பேச்சில் அடிபட்டுள்ளது அந்த பெயர். தாண்டவராய பிள்ளையும் ராஜமும் மற்றவர்களும்கூட 'செல்லம் பண்டிதர்......செல்லம் பண்டிதர்' என்று சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். இவர்கள் மட்டுமல்ல, செங்குளம் ஊர் பூராவுமே போற்றிப் புகழ்பாடும் கௌரவம் பெற்ற ஸ்ரீமான் செல்லம் பண்டிதரை நாமும் அறிமுகம் செய்து கொள்ள வேண்டியது அவசியம் தானே!

கடவுள் இருக்கிருரோ இல்லையோ; ஏடுகளும் பக்தர்களும் முழங்குகிறபடி எல்லா சக்திகளும் அந்தக் கடவுளுக்கு உண்டோ இல்லையோ—செங்குளத்து மக்களுக்குத் தெரியாது. ஆனல் அவர்கள் கடவுளைப் பற்றி சந்தேகித்தது கூட இல்லையே! 'முன்னேர்கள் செய்த தவப் பயனல்' இவர்கள் வாழ்க்கை இந்த மண்ணிலே இயங்குகிறது என்ற நம்பிக்கையுடன் திரிபவர்கள் முன்னேரது பாவ, புண்ணிய 'கர்ம வினை'களுக்கேற்ப தங்கள் வாழ்க்கையை ஆட்டிவைக்க ஒரு கடவுள் அல்ல, பலப்பல கடவுளர்கள் உண்டு என்று நம்பி விழுந்து கும்பிட்டு பக்தி பண்ணியல்லவா வாழ்கிருர்கள்!... கடவுளர்கள் பட்டியலில் மேலும் மேலும் பெயர்களை இணைத்துச் செல்வதில் இந்த வட்டாரத்தினருக்கு ரொம்ப திருப்தி. சேர்மன் சாமி, அந்தச் சாமி, இந்தச் சாமி என்று கோயில் கட்டத் துணியும் அவர்கள் செல்லம் பண்டிதருக்கும் ஒரு கோயில் ஏற்படுத்தத் தயங்க மாட்டார்கள் என்று

சொல்லலாம்! கடவுளிடம் அவர்களுக்கு உள்ள நம்பிக்கைக்கு சிறிதளவும் குறையாத—அதைவிட அதிகமாகக்கூட—நம்பிக்கை இருந்தது பண்டிதரிடம்.

மக்கள் குறை தீர்த்து வழிகாட்ட வந்த செல்லம் பண்டிதர், மந்திர, தந்திர, யந்திர வித்தைகளை அவர் தொழிலாகக் கையாண்டு வந்தவுடன், நாட்டு வைத்தியம் என்கிற கலையை உப தொழிலாகவும் கொண்டிருந்ததனால் அந்த ஊர்க்காரர்களுக்கு அவர் தயவு அதிகம் தேவைப்பட்டது. எல்லோருக்கும் துணை அவர். கைக்குழந்தைக்கு சிறு இழுப்பு; அல்லது யாருக்காவது காய்ச்சல்; இல்லை, வீட்டு ஐயாவுக்கு ஏதாவது வியாதி—இப்படி என்ன எழவு வந்தாலும் சரி ஆள் பறக்கும் பண்டிதர் வீடு நோக்கி; வீட்டுக்கு புதிதாக வந்த மக்களுக்கு பேய்க் குற்றம்...பெண்ணுக்கு ஏதேனும் கோளாறு...செய்வினை வைத்து விட்டதாக சந்தேகம்.....இவை போன்ற விஷயங்களுக்கும் செல்லம் பண்டிதரின் துணைதான் அவர்களுக்கு வேண்டியிருந்தது. பொதுவாக கிராம வாசிகளின் நம்பிக்கையும் சந்தேகங்களும் உண்டாக்குகிற சகல பிரச்னைகளையும் தீர்த்து வைத்து, நல்ல வழிகாட்டக்கூடியவர் பண்டிதர் தான் என்று நம்பினார்கள் ஊர்க்காரர்கள். அதற் கப்புறம் தான் கடவுளர்கள் மீது பாரத்தைப் போடுவார்கள். செல்லம் பண்டிதரை அவர்கள் கடவுளாக மதியாமல், கடவுளுக்கு அடுத்தபடியாகக் கருதுவதன் காரணம் அவர் இன்னும் செத்துப் போகாமல் பூத உடலோடு அவர்களிடையே நடமாடுவது தான்.

செல்லம் பண்டிதரின் சிரித்த முகம்—நரையோடிய தலைமயிரும், மீசையும், ஒளி மிதக்கும் கண்களும், காவியேறிய பற்களும், குங்குமப் பொட்டு திகழும் நெற்றியும்—பார்த்தவர்களின் பயத்தைத் தீர்த்து வைக்கும் நல் மருந்து; கட்டம் போட்ட சிவப்புப் பட்டு லேஞ்சி 'வல்லாட்டு' இருபுறமும் ஆட, ஒரு கை அவரது மருந்துப் புட்டிகளும் டப்பிகளும் அடங்கிய சிறு பொட்டணத்தை மார்புடன் அணைத்து வர, அவர் மெது நடை நடந்துவரும்போதே தங்களைப் பிடித்

துள்ள பீடைகள் எல்லாம் பின் வாசல் வழியாக ஓட முயல்கின்றன என்று உணரும் சக்தி இருந்தது அந்த ஊராருக்கு.

அவருக்கு எல்லோரும் 'வேண்டியவர்கள்' தான். எவரையும் தட்டிக் கழிக்கவோ, பகைத்துக் கொள்ளவோ அவர் விரும்பியதில்லை. எல்லோரிடமும் நல்ல பெயர் பெற முயன்ற அவர் பலரிடம் கெட்ட பெயர் வாங்கிக் கட்டிக் கொள்ள நேர்ந்தாலும், அப்படி எதிர்த்துப் பேசுகிறவர்கள் அவரில்லாத இடத்தில் தான் பேசுவார்கள்—அவர்கள் கண்டதும் மிகவும் சுமுகமாகப் பழகி மகிழ்வார்கள்—என்பதும் குறிப்பிடவேண்டிய விஷயம் தான்.

அன்று—சனிக்கிழமை—செல்லம் பண்டிதர் தனது வீட்டில் பெட்டிகளையும் டப்பாக்களையும் தட்டிக் கொட்டி, அடுக்கி வைத்து ஒழுங்கு பண்ணிக் கொண்டிருந்தார். தாண்டவராயபிள்ளை அவரைப் பார்க்க விரும்புகிறார், சாயங்காலம் வீட்டுக்கு வரும்படி சொல்லி அனுப்பினார் என்கிற சேதியை வண்டிக்காரன் வந்து சொல்லிவிட்டுப் போனான். 'ஆகா, அதுக்கென்ன! ஆறு ஆறரை மணிக்கெல்லாம் வாரேன்.' என்று அவனை அனுப்பிவிட்டதிலிருந்து, 'அவர் ஏன் என்னை வரச்சொன்னார்; இப்ப அவருக்கென்ன அவசரம்' என்றெல்லாம் எண்ணினார் பண்டிதர். பிறகு 'சவத்தைப் போட்டு பிரமாதப் படுத்துவானேன்! சாயங்காலமாகப் போய்ப் பார்த்தால் எல்லாம் தானாகத் தெரிஞ்சிட்டுப் போகுது. அதை விட்டுவிட்டு இப்பவே பிடிச்சு மனசைக் குழப்புவானேன்?' என்று ஒதுக்கி விட்டு விட்டார். ஒரு மாதிரியாக சாமான்களைச் சீருறுத்திவிட்டு அவர் வெற்றிலை போட ஆரம்பித்ததும், 'என்ன, பண்டுவருக்கு ரொம்ப சோலி ரெம்ப போலிருக்கு' என்ற பேச்சும் காலடி சப்தமும் அவர் கவனத்தைக் கவர்ந்தன.

'யாரது? நீலாவதி அம்மாளா?...வாங்க. ஏது இவ்வளவு தூரம்?... உட்காருங்க' என்று உபசரித்தார்.

நீலாவதி தான் வந்திருந்தாள். அந்த அறையில் ஒரு சுவரோரத்தில், சாய்ந்தபடி அமர்ந்தாள் அவள். 'பின்னே தேடி வராமல் என்ன செய்யிறது? நீர் தான் கூப்பிட்டனுப் பினதுக்கு வரமாட்டேனிட்டீக!' என்றாள்.

'வரமாட்டேன்னு சொன்னேனா? யாரு கிட்டே? நான் என்னைக்காவது அப்படிச் சொல்லுவேனா? செல்லம் பண்டி தனை நல்லத் தெரிஞ்ச நீங்களே இப்படிச் சொன்னா?'

'நேத்து நீருஏன் வரலே? ராசாத்திக்கு உடம்பு ஒருமாதிரி இருக்கு...புள்ளே எங்கோ பயந்திட்டுது போலிருக்கு. திரு நூறு மந்திரிச்சுப் போடணும்னு சொல்லியனுப்பினால்......' என்று குறை கூறத் தொடங்கினாள் அவள்.

'நேற்று எனக்கு சோலி அதிகம். இல்லேன்னா வராமல் இருப்பேனா? நேத்து பூசை பண்ண எல்லா ஏற்பாடுகளும் செஞ்சுக்கிட்டிருந்தேன். அப்ப தான் லச்சுமி வந்தாள். அவ கிட்டே தான் இப்படி இப்படி விசயம்னு சொல்லி அனுப்பி னேனே. சொல்லலையா அவ?'

'சொன்னா...சொன்னா! என்ன இருந்தாலும் பண்டுவரு முன்னேயப் போலவா இப்போ!' என்றாள் நீலாவதி.

அவர் கனைப்புச் சிரிப்பு உதிர்த்து 'எனக்கென்ன புதுசாக் கொம்பா முளேச்சிருக்கு? அதே பழைய செல்லம் தான்!' என்றார்.

'இருந்தாலும், நான் சொல்லியனுப்பினால் வருவீரா! பெரிய பெரிய வீட்டுப் பழக்கங்கள்ளாம் உமக்கு வந்திருக்கு. பெரிய வீட்டுக்காரங்களுக்குத் தான் முதலில் உதவி செய்யப் போவேரு, என்ன இருந்தாலும் நான்......'

'ஐயோ! அப்படிச் சொல்லப்படாது. நான் ஆள் வித்தி யாசமே பாராட்டுவதில்லே. நிசமாச் சொல்லுறேன். நேத்து எனக்கு ரொம்ப அலுவல். அதுதான் வர முடியலே... நீங்க அதைத் தவறா எடுத்துக்கிட்டு, பேசப்படாது. ஆமா'

என்றார். பிறகு 'குழந்தைக்கு என்ன செய்யுது? இப்ப எப்படி யிருக்கு? மாப்பிள்ளைப் பையன்கிட்டேயிருந்து ஏதாவது தகவல் உண்டா?' என்று விசாரித்தார்.

'அது ஒண்ணும் தெரியலே. அவன் எங்கே போயிருப்பான்கிறது, மை பார்த்தால் தெரியும்னு சொன்னாங்க. அதையும் கேட்டுத் தெரிஞ்சிக்கிடலாம்னு தான் உம்மைக் கூப்பிட்டது. நீரு வரலே. அதனாலே நானே வந்துட்டேன்' என்று அறிவித்தாள் நீலாவதி.

'அடா அடா! சே, என்ன அந்தப் பையன் அப்படிப் பண்ணிட்டும் போயிட்டுது!' என்று அனுதாபம் காட்டினார் அவர்.

நீலாவதி சகஜமாகப் பேசினாளே தவிர, அவள் மனம் செல்லம் பண்டிதரைக் கரித்துக் கொண்டே யிருந்தது. 'நீரு தானே இந்த வினைக்கெல்லாம் காரணம்? இளிச்சுப் பேசுதான் பாரு!'—இந்த ரீதியிலே!

'அப்படியும் இருக்குமா? திட்டாந்தரமாச் சொல்லப் படாது. இவருக்கென்ன வந்தது ஏவல் வைக்கணும்னு?' என்று ஒரு கேள்வி எழுப்பும் உள்ளம். 'ஏன், இவனுக்குப் பணம்தானே குறி. யார் எக்கேடு கெட்டால் என்ன? பொன்னம்மா நிறைய குடுத்திருப்பா. பணம் மட்டுமா கொடுத்திருப்பா! அவளே சதிர்த்தாசி மாதிரி ஆளுகளை மயக்குதாளே!' என்று பதில் வெட்டு வீசும் ஒரு நினைப்பு. 'பாவம் பொன்னம்மா, நல்லவ. அவளைப் போயி வீணா ஏசுதேனே. அவள் தூண்டினாள்னு எப்படிச் சொல்றது?......ஊம், என்னவோ நம்ம போதாத காலம்!' என்று புழுங்குவாள். உடனே, 'அதை இவர்கிட்டே எப்படிக் கேட்கிறது?...கேட்பானேன்? தானாத் தெரிஞ்சிட்டுப் போவுது. தாண்டவராய பிள்ளை தான் விசாரிக்கேன்னு சொன்னாரே' என்றும் நினைத்தாள்.

என்றாலும், ஒரு கேள்வி கேட்டு வைத்தாள்; 'என்ன பண்டுவரையா, கல்யாண வீட்டுப் பந்தலிலே தீப் பிடிச்சுதே

அது எவனுவது வச்சதாக இருக்குமா? இல்லே, வாணக் குழாய் விழுந்து தான் பத்தியிருக்குமா?'

பண்டிதர் யோசிக்கவே இல்லே, 'சட்டென்று' சொன்னுர்: 'அது தானுவும் பிடிக்கலே. வாணம் பட்டுப் பிடிக்கவுமில்லே. ஒரு ஆள் வச்சது தான். எனக்கு நிச்சயமாத் தெரியுது அது. நேற்று பூஜை பண்ணிக்கொண்டிருந்த போது, நல்லாத் தோணிச்சு. யாரோ தீ வச்சிட்டு ஓடினது போல் உருவம் காட்டுச்சு. ஆனுல் அது யாருன்னு தெரியலே? இன்னும் கொஞ்சம் கவனிச்சு தியானித்தால், அது கூடத் தெரிஞ்சுபோம், ஆனு நான் கவனிக்கலே.

அவர் ஒளிவு மறைவின்றிப் பேசுகிற மாதிரித்தான் தொனித்தது குரல். ஆனுலும், வேறு திக்கிலே எண்ணத்தை திருப்பிவிட, திருட்டுப் பேர்வழி இப்படி உறுதியாகப் பேசலாம் என்ற ஐயம் எழாமலில்லே அவளுக்கு.

'அது கிடக்குது, ரத்னம் எங்கே போயிருக்கான்? திரும்பி வருவானு? எப்ப வருவான்? இதை யெல்லாம் மைபோட்டுப் பார்த்துச் சொல்லணும், பண்டுவரே' என்று கேட்டுக் கொண்டாள்.

'பார்த்தாப் போகுது, அதுக்கு நீங்க வரவேணும்னு இல்லே. இன்னைக்கு ராத்திரி பூசை பண்ணும் போது, பார்த்து நாளேக் காலேயிலே நானே வந்து சொல்லுதேன்' என்று சொன்னுர்.

'சரி. மறந்துட வேண்டாம், அப்போ, நான் வரட்டுமா?' என்று புறப்பட்டாள். பண்டிதரும் எழுந்து விடைகொடுத்து அனுப்பினுர்.

நீலாவதி இரண்டாம் கட்டிலிருந்து, ஒடுக்கமான முன் அறைக்கு வந்தபோது உள்ளே அவசரமாக ஒருத்தி நுழைவதைக் கண்டு, வழிவிட்டு ஒதுங்கினுள். இவளேப் பார்த்ததும், வந்தவள் திகைத்து விட்டாள். திடுக்கிட்டுப் பயந்து போன குறி அவள் முகத்தில் படர்ந்தது. அவளும்

மறு சுவரோடு சுவராக ஒண்டி, நாணிக் குறுகினாள். அந்த இடத்தில் அப்படியே பிறர் கண்ணுக்குப் புலனாகாமல் ஒடுங்கி மாயமாகிவிடக் கூடாதா என்று அவள் எண்ணுகிற மாதிரிப் பட்டது அவள் போக்கு. அவளை நன்கு கவனித்த நீலாவதி 'பொன்னம்மாவா? வாம்மா. சௌக்கியந்தானா?' என்று கேட்டாள். முச்சந்தியிலே நிர்வாணமாக நிறுத்தப் பட்டது போன்றஉணர்ச்சி தன் உடலில் ஊர்வதாக உணர்ந் தாள் பொன்னம்மா. 'ஊம்' என்று தலையசைத்தாள்.வெட் கத்தால் தலை குனிந்தாள்.

வேறு என்ன சொல்வது, அல்லது கேட்பது என்றே தோன்றவில்லை அவளுக்கு. நீலாவதி தன்னை அங்கு சந்திப் பாள் என்று அவள் எண்ணவேயில்லை. நீலாவதி என்ன! யாருமே அவ்வேளையில் தான் செல்லம் பண்டிதர் வீடு செல் வதைப் பார்த்துவிடக் கூடாது என்று பயந்து பயந்தே கிளம்பி வந்தாள் பொன்னம்மா. 'இங்கு என்னடான்னா சனியன் மாதிரி முளைச்சிருக்கா இவ!' என்று குமைந்தது அவள் உள்ளம், அவள் மேலே ஒன்றும் பேசாமல், உள் அறைக்குப் போய் விட்டாள்.

அவள் மௌனமாகப் போவதையே கவனித்து நின்ற நீலாவதி பெருமூச்சு விட்டாள். 'ஊரிலே எல்லாரும் பேசு தான்னு சொன்னால், ஏன் பேசமாட்டாங்க? இவ அலையிற அலைச்சல் அப்படியிருக்கே!' என்று நினைத்தபடி வெளி யேறினாள்.

அவள் போய்விட்டாள் என்பதை உறுதி செய்துகொள்ள வெளியே வந்து மறைவாக நின்று எட்டிப் பார்த்து விட்டு உள்ளே போனாள் பொன்னம்மா. அவள் வந்ததுமே பரபரப் படைந்த செல்லம் பண்டிதர், அவள் செயல்களைக் கண்டு கலவரமுற்றார். 'என்ன? ஏம்மா நீங்க இப்படி? ஒருவார்த்தை சொல்லி அனுப்பினால் நானே ஓடி வருவேனே. வீணா நீங்க வந்து... அப்புறம் பண்ணையாரய்யா என்ன சொல்வாங்க?' என்றார்.

பொன்னம்மா நின்றபடியே மொழிந்தாள்; 'பண்டுவரே, விஷயம் விபரீதமாகப் போயிடுத்து. என்னாகும்னு எனக்கே தெரியலே'

அவருக்கு ஒன்றுமே புரியவில்லை. இப்படி வாலுமில்லாமல் தலையுமில்லாமல் பேசினால்; 'என்னது?' என்று கேட்டார், 'உட்காருங்க, உட்கார்ந்து சொல்லுங்க.'

'உட்காரதுக்கு நேரமில்லே. அவசரம் அவசரமா வந்தேன். நான் வந்தது யாருக்குமே தெரியாது. இப்பதான் இங்கே நீலாவதி பார்த்துட்டா...விஷயம் என்னன்னு, உம்மகிட்டு வாங்கிட்டுப் போனேன் பாரும் மருந்து. அதை அவுகளுக்குக் கொடுத்திட்டேன்...'

'சாப்பிட்ட பிறகு ஏதாவது கோளாறு கீளாறு'' என்று பதட்டமடைந்தார் அவர்.

'சாப்பிடதுக்கு முன்னாடியே விபத்து வந்திட்டதே! சாப்பிட வேறே வேணுமா!' என்று வேதனைச்சிரிப்பு ஒன்றை மெல்லென உகுத்தாள்.

'என்ன நடந்தது, சொல்லுங்க அம்மா' என்று கேட்டார் பண்டிதர், விஷயத்தை அறியவேண்டும் என்கிற துடிப்போடு.

பொன்னம்மா எல்லாவற்றையும் சொன்னாள். 'நான் பழியை நீலாவதி பேரிலே போட்டிருக்கேன். இப்போ என்னாகுமோன்னு எனக்கு பயமாருக்கு. நேத்து ராத்திரி அவுக கேட்டபோது உள்ளதைச் சொல்ல என்னாலே முடியலே. இனிமேல் எப்படிச் சொல்லுவது? உண்மை தெரியாமலா போகும்? அதை நினைக்க, நினைக்க எனக்கு பயமாயிருக்கு; மருந்து வச்சது, அது காணாதுன்னு அவுகளை ஏமாற்ற பழியை இன்னொருத்தி மேலே போட்டது இரண்டு குத்தமும் தெரிஞ்சா, என் கதி என்னாகும்? என்னைக் கொன்னு போட மாட்டாகளா கொன்னு!' இதைச் சொல்லும்போதே அவள் உடல் நடுங்கியது.

'நீங்க ஏன் பழியை நீலாவதி மேலே போட்டீங்க?' என்று கேட்டார் பண்டிதர்.

'சொன்ன அவுக நம்பணுமே, அதுவுமில்லாமே, எனக்கு சட்டுன்னு நீலாவதி நினைவுதான் வந்தது.'

'பண்ணையாரய்யா இது விஷயமா நீலாவதி கிட்டே விசாரிச்சால்?'

'அதே பயம் தானே எனக்கும், என்ன செய்யலாம் பண்டுவரே!' என்று ஆவலாக விசாரித்தாள்.

'என்ன செய்வது; செய்வதற்கு என்ன இருக்கு? வாறது வந்து தானே செய்யும்' என்று வேதாந்தம் பேசினார் பண்டிதர்.

'ஐயா அந்த மருந்தை உம்ம கிட்ட காட்டனும்னு சொன்ன, அப்படி உம்மிடம் கேட்டால், நீராக......'

பண்டிதர் முந்திக் கொண்டார். 'எனக்குத் தெரியாதா! நான் சொல்வேனா என்ன! என்னைப் பற்றி நீங்க கவலைப்பட வேணும். விஷயம் தேரிஞ்சு போனால், அது என் மூலமாக வெளிப்பட்டதாக இராது. இதை நீங்க நிச்சயமா நம்பலாம்' என்று உறுதி கூறினர்.

'அப்புறம் நடக்கது நடக்கு; என்று சொல்லிவிட்டு, புறப்பட்டாள் பொன்னம்மா. அவள் பின்னலேயே வந்த பண்டிதர் சொன்னர், 'ஆச்சி, ஒரு விஷயம். இனிமேல் நீங்க இப்படி தனியா இங்கே வரவேண்டாம். என்னத்துக்கு வீண் பொல்லாப்பு? நாளைக்கு நாலு பேரு நாலைச் சொல்லுவான். ஊர் நிலைமை அப்படியிருக்கு' என்று.

'நாளைக்கு என்ன! இன்னைக்குக் கூடத்தான் இஷ்டம் போல பேசுறாங்க மற்றவங்க' என்று அந்தராத்மா குரல் கொடுத்தது.

'அது சரி' என்று சொல்லி, வேகமாக நடந்தாள் பொன்னம்மா.

எதையோ நினைத்துச் சிரித்தார் பண்டிதர், 'ஊம். நேரமும் ஓடத்தான் செய்யுது? இப்பவே புறப்பட்டால் தான் அங்கே நின்னு, இங்கே நின்னு பெரிய வீட்டுப் பிள்ளை வாள் முன்னுலே போய்ச்சேர பொழுது சரியாக இருக்கும்' என்று முனகியபடி, காரியங்களைக் கவனிக்க வீட்டினுள் போனுர் அவர்.

தாண்டவராய பிள்ளை முதலில் பந்தல்காரனைத்தான் கூட்டி வரும்படி ஆளனுப்பினார். ஆனால் கந்தத்தேவன் பக்கத்து கிராமம் எதற்கோ போயிருக்கிறான், விளக்கு வைக்கும் நேரத்திற்கு வீடு திரும்பிவிடுவான், வந்ததும் தகவல் தெரிவிக்கிறோம் என்று வீட்டிலிருந்தவர்கள் சொல்லி அனுப்பி விட்டார்கள்.

'சரி, வரட்டுமே! என்று தலையாட்டினார் 'தாவன்னா' அவர் மத்தியானம் சாப்பிட்டு விட்டு, 'ஒரு கண்ணுக்குத் தூக்கம் போட்டு' விழித்தெழுந்து, காப்பி சாப்பிட்டும் மயக்கம் தெளியாத கிறக்க நிலையிலேயே உட்கார்ந்திருந்தார். வெளியே 'எசமான் இருக்காகளா?' என்ற கேள்வி பிறந்ததும், 'யாரது?' என்ற பதில் வெட்டை வீசினார் பிள்ளை.

'நான் தான் எசமான்—செல்லம்...' என்ற பதில் உருண்டு வரவும், 'ஓ செல்லம் பண்டிதரா! வாரும் வே, வாரும்' என்று வரவேற்பு பாடியவண்ணம் எழுந்து, துண்டு ஒன்றைஇழுத்து மேலே போர்த்து திண்ணைக்கு வந்தார். செல்லம் பண்டிதர் கும்பிடு போட்டு நின்றார். 'எசமான் என்னை வரச்சொன்னீகளாமே. என்ன விசேஷம்?' என்றும் கேட்டார்.

'என்னவே, நீரு இந்தப் பக்கமே எட்டிப் பார்க்கக்கூடாதுன்னு வச்சிட்டீரா!...உட்காரும்...ஏன் நிக்கேரு!' என்று சொல்லி, தான் ஈஸிசேரில் சாய்ந்தார் 'தாவன்னா.' 'வரப்படாதுன்னு ஒண்ணுமில்லே, எசமான். எனக்கு சோலி சரியா யிருக்கு. என்ன செய்றது? அலைச்சல், கவலைகள்,

என்ன எழவெல்லாமோ வேலைகள் என்று அடுக்கினார் பண்டிதர், தரையில் உட்கார்ந்தபடி. கையிலிருந்த வெற்றிலைச் செல்லத்தையும்—அது நிறையச் சூரணங்களும் செந்தூரங்களும் மாத்திரைகளும் சிறு புட்டிகளில் அடைபட்டுக் குடியிருந்தன—காவி நிறக் கைக்குட்டைப் பொட்டணம் ஒன்றையும் (இதில் மந்திரச் சாமான்கள் கட்டுண்டு கிடக்கும்) கீழே வைத்தார்.

தாவன்னா மெதுவாகப் பேச்சு கொடுத்தார்: 'என்னவே உம்ம தொழிலெல்லாம் எப்படி நடக்கு?'

பண்டிதர் சிரித்தார். தன் இருகைகளையும் தேய்த்துக் கொண்டே சொன்னார், 'என்னவோ உங்களைப் போல உள்ள முதலாளிகள் தயவினாலே எப்படியோ கழியுது' என்று.

'எங்க தயவு என்ன! உம்ம திறமையும் குணமும்தான் உம்ம பேரிலே எல்லோருக்கும் நம்பிக்கை ஏற்படுத்தியிருக்கு இல்லையா?'

'ஏதோ ஊர்க்காரங்க பிரியம். அவங்க அன்பு வச்சால்...' என்று இழுத்தார் பண்டிதர்.

'சும்மவா சொன்னான்—ஊரு ஒண்ணுபட்டா கூத்தாடிக்குக் கொண்டாட்டம்னு.' என்று தாவன்னா கனைத்தார். அவரது பண்பாட்டைப் புரிந்து கொள்ளாத பண்டிதர் தலையைச் சொரிந்தார். 'ஊரு ரெண்டுபட்டால் கூத்தாடிக்குக்கொண்டாட்டம் அப்படின்னு சொல்லுவாங்க, ஒன்றுபட்டால் எப்படி?' என்று கேட்டும் தீர்த்து விட்டார்.

'ஊம்' என்று யோசித்தார் பிள்ளை. வெகுநேரம் யோசிக்கவில்லை 'இதுகூடத் தெரியலியா உமக்கு! ஊரு பூரா ஒன்று கூடித் திரண்டு நிக்கிற இடத்திலே கூத்தாடிக்கு காசு அதிகம் கிடைக்குமா இல்லையா? என்ன நான் சொல்றது?'

'அதுவும் சரிதான்' என்று ஒத்து ஊத நேர்ந்தது பண்டிதருக்கு. 'எசமான் என்னைக் கூப்பிட்டனுப்பியது ஏன்? அதை இன்னம் சொல்லலியே?' என்று விசாரித்தார்.

'சொல்லத்துக்குத் தானே கூப்பிட்டனுப்பினேன். வே, ஒரு விசயத்திலே உம்முடைய உண்மையான அபிப்பிராயம் வேணும். நீரு மறைக்கப்படாது. பொய்யிகிய்யி சொல்லப் படாது.'

செல்லம் பண்டிதருக்கு உள்ளுக்குள்ளே உதைப்புதான். இடம் அத்தகைய இடமல்லவா! யார் எவர் என்று பாரா மலே தனது அதிகார உரிமைகளை ஆடவிடும் துணிவு பெற்ற வராயிற்றே தாவன்ன பிள்ளைவாள். 'உங்ககிட்டே இந்தச் செல்லம் என்னைக்காவது ஏமாத்தினது உண்டா? திருட்டு, பொய் இப்படி ஏதாவது...'

'வே. நீரு செய்தீருன்னு கண்டாச் சொன்ன, பின்னேப் போட்டுப் பேசுதீரே வீண. இப்ப எனக்கு ஒரு சந்தேகம் ஏற் பட்டிருக்கு. அதுக்கு உள்ளதைச் சொல்லணும்னு தானே கேட்டேன்' என்று தெளிவு படுத்தினர் அவர்.

'சரி, எசமான்' என்று பக்தி சிரத்தையோடு மொழிந் தார் பண்டிதர்.

'ஏவல், கீவல்ங்கிருகளே அதெல்லாம் உண்மைதான?' என்ற கேள்வி பண்டிதருக்கு திகைப்பு அளித்தது. இதுதான் அவர் கேட்க விரும்பிய கேள்வியா, அல்லது ஏமாந்த வேளை யில் பிடிக்கலாம் என்பதற்காக பேச்சைமாற்றும் சாதுர்யமா என்று சந்தேகித்தார்,

அவர் திகைப்பை விபரீதமாக எடுத்துக் கொள்ளவில்லை தாவன்ன. 'எனக்கு இது விளங்கவே யில்லை. எப்படி ஐயா திடீர்னு கல்லு வந்து விழும்? ஆள் எறியாமலே கல்லுவிழும், மண்ணு விழும், சோத்திலே மயிரு விழும், இன்னும் ஆபாச மெல்லாம் தோணச் செய்வாங்க ஏவல் உதவியினலே ஆளைக் காணுமல் அடிக்கிறது வைக்கப் படப்பிலே தீ பிடிக்கச் செய் கிறது, பணப்பெட்டியை இடம் மாத்றது இப்படி அற்புதங் களெல்லாம் செய்யமுடியும், செய்கிருங்கன்னு சொல்லு

தாங்களே. இதெல்லாம் என்ன நிசந்தானு; நம்பமுடியலியே, என்னவே சொல்லுதீரு?' என்று கேட்டார்.

'தொழிற்காரனையே கேட்டால் அவன் என்ன சொல்லுவான்? எல்லாம் வாஸ்தவம்னு தானே எசமான் சொல்லணும்?'

'சொல்ல வேணும்கிறது என்ன அடிபிடி கட்டாயமா? எல்லாம் சுத்த பம்மாத்து. எங்கே பிழைப்பு நடக்கணுமில்லையா; அதுக்காக ஊரிலுள்ளவங்களை யெல்லாம் இளிச்சவாயனுகளாக ஆக்க முயல்கிற எத்து வேலையென்று சொல்லுமே! நான் கண்டா இதை டாம்டாம் பண்ணப் போறேனு என்னவே பண்டிதரே என்ன!'

'அப்படி ஓங்கி அடித்து விடப்படாது எசமான். உலகத்திலே எவ்வளவோ மகிமைகள் இருக்கு நமக்கு அவை புரியலே நம்மாலே அவற்றை விளக்கமாக வர்ணிக்க முடியலேங்கிறத்துக்காக அவையெல்லாம் எத்து வேலை, பம்மாத்துன்னு சொல்லிப் போடலாமா? மற்றவங்க அபிப்பிராயத்தைப்பற்றி நான் ஒண்ணும் சொல்லறத்துக்கில்லை. என்னைப் பொறுத்த வரையிலே, இதெல்லாம் இல்லைன்னு அடிச்சுப் பேசத் தயாராக இல்லை. அவ்வளவுதான்' என்று தீர்க்கமாக அறிவித்தார்.

'அப்படியா? இது மாதிரில்லாம் நடக்கும்னு நீரு சொல்லுதீராக்கும்?'

'நான் என்ன, எத்தனையோ பேரு சொல்லியிருக்காக. இன்னும் சொல்றுங்களே.'

'அதனுலேதான் உம்மிடம் கேட்டேன். சந்தேகத்தைத் தெளிவுபடுத்திக்கிடலாம்னு...அன்னைக்கு நீலாவதி வீட்டுக் கல்யாணப் பந்தல் தீப் பிடிச்சு எரிஞ்சது கூட ஏவல் காரணமாத்தான் இருக்கும்னு சொல்றுங்க' என்று பண்டிதரின் முகத்தைக் கூர்ந்து கவனித்தபடியே கேட்டார் அவர்.

'என்னது! நம்ம ஊரிலே ஏவலா? கிடையாது. இருக்கவே முடியாது' என்று கத்தினார் பண்டிதர். அவர் கண்களில் வியப்பும் கேலிச் சிரிப்பொலியும் மின்னினவே தவிர, அவர் நடிக்கிறாரோ, பொய் சொல்கிறாரோ என்று சந்தேகிக்க வைக்கும் குறியே இல்லை. 'அப்படி யாரு எசமான் சொன்னது.'

'திடீர்னு தீ பிடிச்சிட்டுதே! வாணக்குழாய் தெக்குத் தெரு மூலையிலே கிளம்பினது இங்கே வந்தா விழப்போகுது. அது ஏவல் வேலைதான் அப்டின்னு சில பேரு சொன்னாங்க.'

'உங்களுக்கு மந்திர தந்திரங்களிலே நம்பிக்கை இல்லாமலிருக்கலாம். நான் தொழில் செய்கிறவன் என்கிற முறையிலே இதையெல்லாம் நம்பித்தானே தீரணும். எனக்குத் தெரிஞ்சு கல்யாணப் பந்தலிலே தீ ஏவல் காரணத்தால் பிடிக்கலே. எவனோ ஒருவன்தான் வச்சிருக்கான். அது எனக்குத் தெரிஞ்சது...'

'போலீஸ்காரனுகளிடம் இப்படிச் சொல்லித் தொலைக்கப்போறீரு பூசை, கீசைன்னு! அவங்க உம்மையே குத்தம் செய்ய உடந்தையாக இருந்தவன்னு புடிச்சிரப்போரானுகவே பிறகு' என்று சொல்லிக் கனைத்தார் அவர்.

'அதெப்படி எசமான் என்னைக் கையாளுன்னு சேர்க்க முடியும்? நானா தூண்டினேன்? இல்லை நான் கண்டால் தீவச்சேனா? தீவச்சவன் யாருன்னு தெரிஞ்சால் நானே உங்களிடம் சொல்லித் தருவேனே. எனக்குத் தெரியாது.'

'ஆமா, இது ஏவல் இல்லேன்னு எப்படி உறுதியாகச் சொல்ல முடியுது உம்மாலே?' என்று கேட்டார் தாவன்னா.

'இந்த வட்டாரத்திலேயே ஏவல் வைக்கிறத்துக்கு ஆள் இல்லை எசமான். எனக்குத் தெரியும். ஆனால் இதை மாதிரி வேலைகளை நான் செய்கிறதில்லை. சூனியவேலை, எழவு ஒரு காரியத்தைச் செஞ்சால், அப்புறம் அதே பாபச்

சுமையாக மனசை அழுத்திக்கிட்டிருக்கும். உருப்படக்கூட முடியாது. ஏதோ கொஞ்சம் காசு அப்பதைக்கு கிடைக்கு தேன்னு இது யாதிரிக் கருமத் தொழிலேச் செஞ்சா அப் புறம்...சேனியன்......அதனுலே நான் செய்கிறதேயில்லே. யாராவது ஏவல் வைக்கிரதுன்ஞ, மலேயாளத்து மந்திரவாதி எவனேயாவது கூட்டி வந்து செய்யணும், அப்படி அவன் செய்கிறதாயிருந்தாலும் உள்ளூர் மந்திரவாதிகிட்டேக் கெஞ்சிக் கேட்டுக்கிட்டுத்தான் செய்யத் துணிவான்...'

'என்ன கேட்பான்? ஏன்?'

'இப்படி இப்படி செய்யப் போறேன். நீங்க மாத்து மந் திரம்போட்டு முறியடிச்சிறப்படாது. எதிர் மந்திரம்போடப் படாதுன்னுல்லாம் கேட்டுக்கிடுவான். அவன் மந்திரிக்கும் போது, இன்னொருத்தன் விளேயாட்டுக்குனுலும், எதிர் உருப் போட்டால், முதல் மந்திரம் பலியாது. அது போக, அந்த மந்திரவாதி மேலேயே பாஞ்சிரவும் செய்யும். இப்படி இசை கேடா ஏதாவது நடந்திரப்படாதேன்னு முன் ஜாக் கிரதையாக நடவடிக்கை எடுத்துக்கிடுவாங்க.'

'ஓகோ' என்று தலேயசைத்தார் பிள்ளே.

'அதினுலே, இந்தப் பக்கத்திலே யாரு எங்கே எப்போ ஏவல் வச்சாலும் எனக்குத் தெரியாமல் போகாது. அதுதான், சத்தியமாச் சொல்லுதேன் இது ஏவல் அல்ல. ஏவல்னு சொல்றவங்க சும்மா சொல்லியிருக்கணும். அல்லது என் மேலேயோ, வேறு யார் மீதோ வயித்தெரிச்சல் பட்டுச் சொல்லியிருக்கணும்...யார் சொன்னது எசமான்?'

செல்லம் பண்டிதர் பொய் பேசவில்லே என்பது தாவன் னுவுக்கு நன்ருகத் தெரிந்தது. 'சும்மா கேலியாகத்தான் சொல்லியிருப்பாங்க' என்ருர் அவர்.

'இதென்ன கேலி. அப்படித்தான் யார் சொன்னுன்னு சொல்லுங்களேன்?'

'ஏன் வே, சபிக்கப் போறீரா! உமக்கு கோபம் வாற மாதிரித் தோணுதே' என்று சிரித்தார் பிள்ளை. பண்டிதரும் சிரித்துவிட்டார். 'இல்லே எசமான், தெரிஞ்சுக்கிடதுக்காகக் கேட்டேன். என்னை நல்லத் தெரிந்த நீங்களாக இருக்கப் போயி சரியாப் போச்சு, வேறே யாரும் இருந்தால்? எனக்கு விரோதமாப் பேசி வருவது யாருன்னு எனக்குத் தெரிய வேண்டியதுதானே. நான் ஒண்ணும் சாதிச்சிடப் போற தில்லே, இருந்தாலும்...'

'பிரமாதமான எதிரி இல்லே. காயங்குளத்தா சொன்னு ளாம்.'

'ப்சு, அந்தக் கிழட்டு மூதியா! கழுதைக்கு என் மேலே பொறுமை. என்னுலே அவ பிழைப்புக் கெட்டுப் போகு தாம். அந்தக் கோபம்! அவள் சொன்னுள்னு நீங்க...'

'அவ பேச்சினுலே நான் உம்மைக் கூப்பிட்டு விசாரிக் கலே, வே. அநியாயமா ஒரு பொண்ணு பேரு இதிலே அடி படப் போய்த்தான்.'

'யாரு? யாரு பேரு?' என்று விசாரித்தார் பண்டிதர். தாண்டவராய பிள்ளை சிறிது நேரம் யோசித்துக் கொண் டிருந்தார். 'உம். உமக்கும் தெரிய வேண்டியதுதானே! பண்ணையார் வீட்டுப் பொன்னம்மாதான் நீலாவதி பேரிலே பொறுமைப்பட்டு ஏவல் வைக்க உம்மைத் தூண்டினுள் அப் படின்னு...' என்று சொன்னுர்.

'சும்மா, லொட்டச்சிகள்கதை. அந்த அம்மா ஒருநாளும் அப்படிச் செய்ய மாட்டாங்க. நல்ல குணமாச்சே' என்று ஆரம்பித்தவர் பேச்சை வளர்க்கவில்லை. அவரைக் கண்டு, மருந்து விஷயமாக பொன்னம்மா பேசியதை அவர் நினைத் துக் கொண்டார். ஆகவே, பொதுவாக கருத்து உதிர்த் தார், 'பாருங்களேன், உலகம் எப்படிப் போகுது!' என்று.

'எனக்கு நம்பிக்கையே இல்லே. நீலாவதி இதைச் சொன் னதும் நான் சிரிக்கத்தான் செஞ்சேன். இருந்தாலும், சந்

தேகத்துக்கு இடமில்லாமல் தெளிவுபடுத்திவிடத் தான் உம்மை வரவழைச்சது. எனக்கு சந்தேகமே கிடையாது' என்று விளக்கினுர் பிள்ளை.

'நீலாவதியா உங்களிடம் சொன்ஞு? எப்போ சொன்ஞு?'

'இன்னைக்குக் காலையிலே தான் இங்கே வந்தா, சொன்ஞு. ஆஞல் அவளும் திட்டமாச் சொல்லலே· பண்ணையார் வீட்டம்மா ரொம்பநல்லவ. அவள் மேலே பழியைப் போடத் தயாரில்லே. விஷயம் புரியிறதுக்கு முந்தி யாரையும் குறைகூற முடியாதுன்னு தான் அவளும் சொன்ஞள்' என்ருர்.

செல்லம் பண்டிதர் 'ஓகோ, அது சரிதான்' என்ருர். அவர் தாஞகவே நினைத்துக் கொண்டார்; 'இங்கே வந்திட்டுத்தான் நீலாவதி என்னைப் பார்க்க வந்திருக்கா. இதைப் பற்றி சூசகமாகக்கூட...தீ பிடிச்சது பற்றி பேச்செடுத்தா. அதுகூட நான் என்ன சொல்றேன்னு தெரிஞ்சுக்கிடதுக்காகத் தானிருக்கும்...ஊம், இப்படியிருக்கு விசயம்...பொன்னம்மா நீலாவதி பேரிலே பழி போட்டுட்டா மருந்து விஷயத்திலே! பேஷ்!' இப்படி எண்ணவும் அவருக்கு சிரிப்பு எழுந்தது. தாண்டவராயர் முன் இருப்பதை மறந்துபோய் சிரித்து விட்டார்!

'என்ன வே சிரிப்பு! என்ன வேடிக்கை கண்டுவிட்டீர்?' என்று தாவன்ஞ விசாரிக்கவும் தான் அவருக்கு சூழ்நிலை நினைப்பு வந்தது. இவரிடம் மருந்து விவகாரத்தைச் சொல்வானேன் வீஞக என்று கருதிஞர். 'இல்லே, காயங்குளத்தாளை நினைக்கவும் சிரிப்பு வந்துட்டுது. பாருங்களேன், அவ வேண்டாத வேலை பண்ணியிருக்காளேன்னு தான்...எனக்குச் சிரிப்பாக இருக்கு. ஆஞல் பாவம் அந்தப் பண்ணையார் வீட்டு அம்மா...'

தாவன்ஞ குறுக்கிட்டார். 'அது தானே எனக்கும் வருத்தமாயிருக்கு சே!' என்ருர்.

மாலை மயங்கிக் கொண்டிருந்தது. வீட்டில் விளக்குகள் ஏற்றி வைக்கப்பட்டன. வெளியே தெருவில் கைகட்டிய வண்ணம் வந்து நின்றான் பந்தல்காரக் கந்தத் தேவன் 'எசமான்,' என்று கும்பிடு போட்டான்.

'என்ன தேவரே!' என்றார் பிள்ளை.

'இப்பதான் திரும்பி வந்தேன். உங்க உத்திரவைக் கேள்விப்பட்டதும் ஓடிவந்தேன் உடனே' என்றான்.

'நான் வரட்டுமா?' என்று எழுந்தார் செல்லம் பண்டிதர், கிளம்புவதற்கு ஆயத்தங்கள் செய்து. தாவன்று தலையசைத்தார். பண்டிதர் 'வர்றேன், எசமான்' என்று சொல்லி, கும்பிட்டுவிட்டு, தனது சாமான்களை எடுத்துக் கொண்டு புறப்பட்டுப் போனார்.

அந்த இடத்திலேயே சிறிது நேரம் மௌனம் நிலவியது. வெளியே எங்கோ விளையாடப் போயிருந்த சுந்தரம் குதித்துக் கொண்டே ஓடிவந்தான். தெருத்திண்ணை யோரமாக நின்ற ஆளை வேட்டியை எடுத்துத் 'தார்ப்பாய்ச்சி' கட்டி, இடுப்பிலே துண்டை இறுக்கிக் கட்டி, கைகளை மார்பிலே கட்டிப் பணிவாக நின்றவனை பார்த்ததும் 'யாரது? கந்தத் தேவரா?' என்று கத்தினான்.

தேவன் சிரித்தபடி 'என்ன சின்ன ஐயா, எங்கே போயிட்டு வாறீக?' என்று வினவினான்.

சுந்தரம் வாசற்படியில் ஏறி நின்று உற்சாகமாகக் கத்தினான்: 'வே தேவரே, அன்னைக்கு தீ பிடிச்சு எரிஞ்சதை நான் பார்த்தேனே. நிஜம்மா நான் தானே அப்பாவுக்கெல்லாம் சொன்னேன்!' அமெரிக்காவைக் கண்டு பிடித்த கொலம்பஸின் உற்சாகம் கூட, புதிய சித்தாந்தத்தைக் கண்டுபிடித்துக் கூத்தாடிய ஆர்க்கிமிடீஸின் களி வெறிகூட, பையனின் பெருமைக்கு 'உறை போடக் காணாது' அவ்வளவு ஆனந்தம் அவனுக்கு.

தேவன் பதில் சொல்லுவதற்குள், தாண்டவராயப் பிள்ளை கேட்டார். பேச்சை எப்படித் தொடங்குவது என்று முழித்துக் கொண்டிருந்த அவருக்கு அவர் மகன் தோன்றாத் துணையென வந்து சமயத்தில் சரியான உதவி பண்ணினுன். 'என்ன வே தேவரே, பந்தல் எரிஞ்சு போனதிலே உனக்கு ரொம்ப நஷ்டமோ?' என்று விசாரித்தார்.

தேவன் முழங்கையைச் சொரிந்தபடி முண முணத்தான். 'என்ன செய்யிறது எசமான். இருநூறு முந்நூறு ரூபா இருக்கும் நஷ்டம். பிரப்பம் பாய், மூங்கிலு, லஸ்தரு, குளோபு, சரவிளக்கு எல்லாமே தீந்து போயிட்டுதே!'

சுந்தரம் தான் இருப்பதைக் காட்டிக் கொண்டான். 'என்னமா எரிஞ்சுது தெரியுமா தீ! சொக்கப்பனை இது பக்கத்திலே வர முடியாது. ஏய் யம்மா—எவ்வளவு பெரிய தீ!'

'அந்த ரூபாயெல்லாம் நஷ்டம் தானுக்கும்!' என்று தூண்டிலை வீசினுர் தாவன்னு.

'ஆமா எசமான். யார்கிட்டே கேட்க முடியும்? அந்த அம்மா பாவம் அவர்களுக்கு இருக்கிற கஷ்டத்திலே, கல்யாணம் பண்ணி வச்சும் பிரயோசனமில்லே. துக்க வீடாத் தானிருக்கு. அவுங்ககிட்டே பணம் கேட்க முடியுமா?' என்று வள்ளல் தோரணையில் பேசினுன்.

'பய வருத்தம் இல்லாமல்தான் பேசுதான். அவன் ஏன் வருத்தப்படப் போருன்!' என்று நினைத்தார் அவர் 'பண்ணையாரு ஏதாவது உமக்கு பணம் கொடுத்தாரா!' என்று கேட்டார்.

'பண்ணையாரு ஏன் எசமான் எனக்குத் தாருரு? யாரு சொன்னுங்க அப்படி?' என்று பதிலளித்தான் அவன். அவன் குரலில் பதட்டமும் நிதானமின்மையும் தொனித்தன.

'அட, அவரு கொடுத்தாரான்னு கேட்டேன். நீ ஏன் இப்படி ஆத்திரப்படுதே?' என்று கடு கடுத்தார் 'தாவன்னு'.

ஆவர் பேச்சின் தொனி மாறிவிட்டதை அவன் உணரத்தான் செய்தான். அவர் மேலும் தொடர்ந்தார், 'ஏ கந்தா, உள்ளதைச் சொல்லிப்போடு. அப்புறம் வீணு போலீஸு, கேசுன்னு, வளரவேண்டிய அவசியம் ஏற்படுதுன்னு சொன்ன, ஐயான்னுலும் அரசேன்னுலும், சாமி பூதம்னு கெஞ்சினுலும் விடமாட்டாங்க. என்ன தெரிஞ்சுதா? தீப் பிடித்த சமயத்திலே நீ எங்கே இருந்தே? தீ...தீ...ன்னு கத்திட்டு நீ ஏன் இந்தத் தெருவிலே எதிர்திசையா ஓடினே? யாரு பந்தலுக்குத் தீ வச்சுது? நீதான் வச்சையா? அப்படீன்னு ஏன் கொளுத்தினே?'

அவர் அதட்டிக் கேட்டுக்கொண்டே போனுர். பேச்சு நடுவிலே, அப்போதுதான் அங்கு வந்த அவர் வேலையாட்கள், சர்க்கார் சேவகர்கள், அளித்த வணக்கங்களை தலையசைத்து ஏற்றுக்கொண்டார். அவர்கள் வரிசையாக நின்றுர்கள்.

கந்தன் இந்நிகழ்ச்சியை எதிர்பார்க்கவேயில்லை. அவர் அவசரமாக அழைத்து வரச்சொன்னுர் என்றதும், என்னவோ, ஏதோ என்று வந்தான். அப்போதே அவன் நெஞ்சு திக்கென்று அடித்துக்கொண்டது. அவன் வேகமாக வரும்போது வாசல்படி 'டணுர்' என்று தலையை விசாரித்தது. தலையைத் தடவி விட்டுக்கொண்டு தெருவிலே வேக நடை நடந்து வந்தபோது தறுதலைத்தனமாக உயர்ந்து நின்ற கல் ஒன்று கால் கட்டை விரலைப் பதம் பார்த்தது. 'என்ன எழவு இது. சகுனத் தடைகளாக' என்று அவன் முனங்கியபடி வழி நடந்தான். 'எல்லாம் சரியாகத்தானிருக்கு! இப்போ இங்கே இப்படி வந்திருக்கே' என்று தோன்றியது அவனுக்கு. அவன் இதயம் இப்போது வேகமாகத் துடித்தது.

'என்ன எசமான், நீங்க என்னெல்லாமோ சொல்லுறீங்க. எனக்கு எதுவுமே தெரியாதே' என்றுன்.

'ஓ! உனக்கு ஒண்ணுமே தெரியாதோ? சரிதான்' என்று நக்கலாகச் சிரித்தார் அவர்.

'பந்தல் எரிஞ்சு நஷ்டமாயிட்டுதேன்னு மனிசன் வயித் தெரிச்சல்லே இருக்குப்போது, இது வேறே பழி. எல்லாம் தலைவிதி, எசமான்' என்று அலுத்துக்கொண்டான்.

தாண்டவராயர் திடீரெனக் கோர சொரூபியானார். 'திருட்டு ராஸ்கல்! என்னையே ஏமாத்தப் பார்க்கியாலே நீ? பந்தலுக்கு நீ ஏண்டா தீவச்சே? தீ, தீன்னு கத்திக்கிட்டு ஏன் ஓடினே? அப்படி உன்னைச் செய்யச் சொன்னது யாரு? மரியாதையாச் சொல்லிரு, இல்லைன்னு உன்னைத் தொலைச்சுப் போடுவேன்—சொல்லிட்டேன். இந்த ஊரிலே இருக்கவனெல் லாம் ஏமாந்த சோணகிரிகள்னு நினைச்சிட்டீங்களோடா காலிப்பயல்களா?' என்று கர்ஜித்தார்.

'எனக்கு ஒண்ணும் தெரியாது, எசமான்' என்றான் அவன்.

'உனக்கு ஒண்ணுந் தெரியாதா? ஆமா, தெரியாதுடா... தெரியாது! சின்னக் கொழந்தை...அவனுக்கு ஒண்ணுந் தெரி யாது. ஆனால், பந்தலுக்கு தீ வைக்கத் தெரியும்! கல்லுளி மங்கத்தனம் பண்ணத் தெரியும்...அடேய், நான் சொல்லு தேன்—நீ ஈசநாட்டுக் குறப்பயலாப் பிறக்க வேண்டியவன். மறவனாப் பிறந்துட்டே...பந்தல்லே ஏன் தீ வச்சே—சொல் லிப்போடு' என்று உறுமினார்.

'நான் வச்சேன்னு யார் சொன்னது?' என்று முறைத் தான் அவன்.

'சீ நாயே என்னலே குரைக்கே?' என்று சீறினார் அவர். 'வே, நாயுடு...பிள்ளை! அவனைப் பிடிச்சு கட்டுங்க ரெண்டு பேரும். ஏய் சாட்டைக் கம்பை எடுத்திட்டு வா...துரை மவன் கேட்ட கேள்விக்கு நான் பதில் சொல்லணும்' என்று எழுந்தார்.

அவர் உத்திரவுப்படி சேவகர்கள் அவனைக் கட்டினார்கள். வண்டிக்காரன் சாட்டைக் கம்பைக்கொண்டு வந்து கொடுத் தான்.

'கை ரெண்டையும் முதுகுக்குப் பின்ஞலே சேர்த்து வச்சுக் கட்டு' என்று கத்திஞர் அவர்.

அப்படியே கட்டப்பட்டது.

'ராஸ்கல்...கல்யாணப் பந்தல்லே தீயாலே வைக்கிறே? எவ்வளவு திமிரு உனக்கு?' என்று கர்ஜித்து, சாட்டை விளாறைச் சுண்டி அடித்தார். அவன் 'அம்மா...அப்பா' என்று அலறிஞன்.

தெருவிலே போன ஒன்றிருவர் நின்று விட்டார்கள். பக்கத்து வீடுகளிலிருந்து ஆண்களும் பெண்களும் வெளியே ஓடி வந்து வேடிக்கை பார்க்கக் குழுமினர். சிறு கூட்டம் கூடிவிட்டது அங்கே.

பார்க்கிறவர்களுக்கு 'ஐயோ' என்றிருந்தது. 'ஏன் இவர் இப்படி அடிக்கிருர். அவன் சொத்தான பந்தல் சாமானே அவனே தீயிட்டுக் கொளுத்துவாஞ? இவருக்கு இது என்ன கோட்டி!' என்று அங்கலாய்த்தார்கள் சிலர். 'என்ஞஞலும் இப்படி அடிக்க வேண்டாம் அவனே' என்ருர்கள் பலர்.

'சுளீர்...சுளீர்' என்று விளாசிஞர் அவர். இடது பக்கமும், வலது பக்கமும், கால் புறமும் உடல் மேலும் சாட்டை துவண்டு விளையாடியது. உடலேக் கவ்வியது. சொடுக்கி இழுத்தது. சுண்டிக் குதித்தது. கடித்து முத்தமிட்டது. அவன் அழுதான். கெஞ்சிஞன். அரற்றிஞன் 'எசமான்...மன்னிக்கணும், சாமி, சாமி...உங்களுக்குப் புண்ணியம் உண்டு என்னேக் கொல்லாதீங்க...' என்று கத்திஞன்.

கொஞ்ச நேரம் வேடிக்கைப் பார்த்து நின்ற சுந்தரம் 'அம்மா, அம்மா' என்று கூவி உள்ளே ஓடிஞன். அம்மையும் வெளியே வந்தாள். அவள் இளகிய மனம் வேதனேயுற்றது. 'ஐயோ பாவம், அவனே ஏன் அப்படி அடிக்கீக? விட்டுருங்க அவனே...தொலேஞ்சு போருன்?' என்று கெஞ்சிஞள். 'ஏய், நீ பேசாம உள்ளே போ' என்று ஒரு அதட்டல் போட்டார் அவர், அவள் ஒடுங்கிவிட்டாள்.

கந்தத் தேவன் உண்மையைச் சொல்லவேண்டிய பக்குவ நிலையை எய்தினன்! 'எசமான், சத்தியமாச் சொல்லுதேன். நான்தான் தீ வச்சேன். நானூறு ரூபா வாங்கிக்கொண்டு இருநூறு ரூபா மட்டுமே பொறுமானமுள்ள பந்தலைக் கொளுத்திட்டேன்' என்று கொஞ்சம் கொஞ்சமாகக் கக்கினன்.

'முதல்லேயே உள்ளதைச் சொல்லதுக்கென்ன? அடி உதவுத மாதிரி அப்பனும் சுப்பனும் உதவமாட்டான்கிறது சரியாத்தானிருக்கு...சரி, யாரு உனக்கு ரூபா கொடுத்தது? யாரு தீ வைக்கச் சொன்னது? ஏன்?' என்று அதிகாரம் செய்தார் அவர்.

அவன் சுற்றிலும் பார்த்தான். 'எசமான், உங்களிடம் தனியாச் சொல்லவேண்டிய விஷயம் அது' என்றான்.

'ஏன், இங்கேயே சொல்லேன்!'

'இல்லை எசமான்...எனக்கு அதனாலே ஒண்ணுமில்லே. ஆனால் சில பேருக்கு அதுசிரமம் உண்டாக்கும்' என்று கெஞ்சினன்.

'சரி...நீ ஏமாத்திடலாம்னு நினச்சியோ, தொலைஞ்சே... உன் வீடு கீடு எல்லாத்திலும் தீ வைக்கச் சொல்லிருவேன்... நான் எப்படிப்பட்டவன் என்பது எல்லாருக்கும் தெரியும்... நாயுடு, அவன் கட்டை அவிழ்த்திரும். இப்படி திண்ணைக்குக் கொண்டுவாரும் அவனை. முதல்லே அவன் சாப்பிடவேணும். பிறகு பேசிக்கிடலாம். பார்வதம், சோறு கொண்டுவா' என்று ஆக்கினைகள் செய்து வைத்தார் அந்த அதிகார தேவதை! தெருவில் நின்றவர்களைப் பார்த்து 'ஏன் இங்கே விருதாக் கூட்டம்? வீட்டுக்குப் போங்க!' என்று கத்தினர். கூட்டம் கலைந்தது.

'இவரே விசித்திரமான ஆசாமி தாண்டா. அடிக்கவும் செய்வாரு. அன்பா உபசரிக்கவும் செய்வாரு. பெரிய மனிதர் அவர்!' என்று ஒருவன் புலம்பிச் சென்றான்.

## 15. அடங்காத சிரிப்பு

தாண்டவராய பிள்ளையின் 'சந்நிதானத்திலே' யிருந்து வெளியேறிய செல்லம் பண்டிதருக்கு எழுந்த நினைப்பு முதலில் நேரிலே பண்ணையார் வீடு சென்று பொன்னம்மா ளிடம் இப்படி விஷயம் என்று தெளிவுபடுத்திவிட வேண்டும் என்பதுதான்.

'பாவம், அந்த அம்மா பெயரு ஊரிலே வீணுக அடி படுது. அந்த லெட்சணத்திலே இப்படி ஒரு புரளி வேறே கிளப்பிவிட்டால்! சே, என்ன உலகம்டா இது!' என்று எண்ணினுர் பண்டிதர்.

'காயங்குளத்தா இருக்காளே அவளை உசிரோடு குழி தோண்டிப் புதைக்கனும். ஆமா, சவத்து முண்டைக்கு சோருே துணியோ வேணுமின்னு இப்படியா ஏசிப் பேசி வாழச் சொல்லியிருக்கு? அவ செய்கிற குண்டுணி வேலேயும், கோளுமூட்டி விடுவதும்—இவளாலேயே ஊரிலே எத்த னையோ குடும்பக் கலகங்கள் வருது...எங்கிட்டே வசமா அகப்பட மாட்டேன்காளே. வாரியலாலே வெளும்பச் சாத்தி, சரியான மண்டகப்படி கொடுத்து அனுப்புவேன்...இல்லே, அவளுக்கு வேண்டியதுதான் அப்படி யொரு பூசை. சாகப் போற வயசாச்சு. சங்கரா, சங்கரான்னு நாலு வீட்டிலே கெஞ்சி, கிடைச்சதை வாங்கி உண்டுட்டு மூலேயிலே முடங்கிக் கிடக்காமே. இவளுக்கு எதுக்குங்கேன் இந்த நாரதி வேலே? யேங், இல்லே கேட்டேன்—எதுங்கு இந்தக் குசும்பு?'

எண்ணப் புகை நீண்டு நெளிந்து வளர வளர அவர் நடை வேகம் அதிகரித்தது. வழியிலே எதிர்ப்பட்டு கும்பிடு போட்டவர்களுக்குக் கும்பிடும், சிரிப்பு காட்டியவர்களுக்குப் புன்னகையும் பரிவர்த்தனை செய்தபடி அவர் நடந்து, தெருக்கள் சில கடந்து, பண்ணையார் வீட்டை அடைந்தார்.

அவர் தாவன்ஞு வீட்டிலிருந்து கிளம்பும்போதே இரவு மண்ணுலகிலே குடியிருக்க இறங்கி வந்துகொண்டிருந்தது. அதற்கு வரவேற்பு அளிப்பது போல வீடுகள் தோறும் விளக்குகள் மலர்ந்தன. சிவன் கோயிலில் சாயங்கால பூஜை மணி நண நணத்தது. மேலே வானிலே இறைந்து கிடந்த வர்ணக் கலவைகள் புகைப் புலமாகத் திகழ, பெரிய குளத்திலே பகலெல்லாம் நீராடி—நீந்தியும் மூழ்கியும் எழுந்தும்—வாழ்கிற கருநிற 'நீர்க் கோழிகள்' கூட்டம் கூட்டமாக தம் இருப்பிடம் தேடி விரைந்தன.

மனிதர்கள் இவற்றையெல்லாம் கவனிக்கவில்லை. மனிதரில் ஒரு மனிதனான செல்லம் பண்டிதருக்கும் இவற்றைக் கவனிக்க நேரமில்லை; கவனிக்கும் பண்பும் இல்லை. ஆனால் அவர் இந்த நேரத்திலே, அந்தி வானின் வண்ணக் குழம்புடன் போட்டியிடுகிற மனிதகுண விசித்திரங்களை, மனித உள்ளத்து வர்ணபேதங்களை, மனிதரது எண்ணம் சொல் செயல் ஜாலங்களைப் பற்றி எண்ணியபடி நடந்தார். அவர்களிடையே அவர்களுக்குத் தகுந்தபடி வேஷம் போட்டு வாழ்கிற தமது சாமர்த்தியத்தை வியந்துகொண்டு நடந்தார்.

மாலை மயங்கி இருள் வானை, வெளியை, மண்ணை எல்லாம் கவ்வுகிற சூழலிலே பொருள்கள் எல்லாம், மரங்கள் கட்டிடங்கள் கோபுரங்கள் எல்லாம்—வெறும் உருவெளித் தோற்றங்களாகி, நிழல்களாகி, இருள் மொந்தைகளாகி, இருளோடு இருளாகிவிடுகிற வேடிக்கையை அவர் கவனிக்கவில்லை. மானிட சமுத்திரத்திலே வாழ்க்கையை உருவகப்படுத்த முயல்கிற மக்கள் தனித்தனிச் செயல்கள், பண்புகள் வளர்க்க முயலும் வேளையிலேயே எல்லாம் தெளிவற்று, தனி

எல்லையற்று, குழம்பிப் போகிறதை—அப்படிக் குழம்பிப் போகவேண்டும் என்று எண்ணியே அவர்கள் செயல் புரிகிற ஒரு விநோதத்தை—எண்ணிப் பார்த்தார் பண்டிதர்.

நீலாவதி தனிப் பாதை வகுத்து, தன் மகளுக்குக் கல்யாணம் செய்து வைக்க முயன்றாள். செய்தாள்...அதைக் குலைக்கத் திட்டமிட்டது போல எவனோ தீ வைத்துவிட்டான்...தீ வைத்தது பண்ணையார் மனைவி என்று எவளோ புரளி கட்ட நீலாவதி அதை ஏற்றுக்கொள்ளவா, வேண்டாமா என்று தடுமாறுகிறாள்.. பண்ணையார் வீட்டம்மா—அவளைத்தான் பாரேன்! புருசனுக்கு தான் மருந்துகொடுத்து விட்டு, அந்தப் பழியை நீலாவதி மேலே போட்டுவிட்டாள்... உண்மை தெரியாமல் போகுமா?...'தெரியாமல் போகட்டும்; தெரியக்கூடாது' என்றுதான் பொன்னம்மாளும், பந்தலுக்குத் தீ வைக்கத் தூண்டியவனும் எண்ணுவார்கள். இருட்டு வருமா? இல்லை, இருள் மாதிரி இப்போது இருக்கிற நிலை மாறுமலா போகும்?...

செல்லம் பண்டிதர் நடந்துகொண்டிருந்தார். அவரைக் கண்டு மந்தையிலிருந்து திரும்பும் மாடுகள் விலகி நடந்தன. அவர் பார்வையிலே படவில்லை, தெருவில் விளையாடும் பையன்கள். வீடுதோரும் 'விளக்குச்சரம்' கொடுத்துவிட்டுச் செல்லும் பூக்காரி அவர் கவனத்தைக் கவரவில்லை. எதுவும் - யாரும்—அவர் எண்ணப் போக்கையோ நடையின் துரித கதியையோ தடை செய்யவில்லை.

பண்ணையார் வீட்டை அடைந்தார் பண்டிதர்.

நன்றாக இருண்டுவிட்டது. சிவகுருநாத பிள்ளை வீட்டிலே இல்லை. பொன்னம்மா, பளபளவென்று விளக்கிக் குளிப்பாட்டி எடுத்த திரு விளக்கை மாடத்தில் நிறுத்தி, திரியிட்டு, எண்ணெயூற்றி, விளக்கேற்றி, பொட்டிட்டு, பூவும் சார்த்தி, பக்தி சிரத்தையாகக் கும்பிட்டு நின்றாள்.

'இந்த அம்மா நல்லவள்தான். ஆனல் என்ன? இவள் செயலும் பண்பும் இவளைப் பற்றி பலர் பலவிதமாகப் பேசும்படி தூண்டுகின்றன. இந்த அம்மாளுக்கே அது தெரியாது. பாவம்!' என்று நினைத்தார் பண்டிதர்.

'அம்மா' என்று அழைத்தார்.

'விளக்கு நாச்சியாளை' வணங்கி நின்ற பொன்னம்மா விழித்து நோக்கி, 'யாரு?' என்று கேட்டாள்.

'செல்லமில்லா!'

அவள் அவசரம் அவசரமாக 'அரிக்கன் லைட்'டில் ஒளி ஏற்றி எடுத்து வந்து வாசலில் வெளிச்சம் பரப்பினள். 'வாரும்...ஏது இவ்வளவு அவசரம்?' என்று கேட்டாள்.

'ஐயா வீட்டிலே இல்லையா?' என்று விசாரித்தார் அவர்.

'இல்லையே. உட்காரும்' என்ருள் பொன்னம்மா.

'இல்லை யில்லை. அவசரமா ஒரு சேதி சொல்லிவிட்டு நான் போகவேண்டியதுதான். இங்கே இந்த வேளையிலே ஐயா இல்லாதபோது நான் வந்திருக்கப்படாது. ஆன இது அவசரமான காரியம். முக்கியமான சேதி கூட. அம்மா, உங்க காதிலே ஏதாவது பேச்சு விழுந்துதா?'

பொன்னம்மாள் 'என்னவோ ஏதோ என்று' கலவரமடைந்தாள். 'ஏன்? என்ன விஷயம்? நான் யாரு வீட்டுக்கும் போறேனு என்ன, எனக்கு ஊருச் சமாசாரம் தெரிய?' என்று சொன்னுள்.

யாரிடமும் எப்படி வேண்டுமானலும் பேசும் திறமையை வளர்த்திருந்த பண்டிதருக்கு 'உலக அனுபவம் போதாத இந்தப் பொண்ணு கிட்டே' எப்படி விஷயத்தை ஒளிவு மறைவு இன்றிச் சொல்வது என்றே தெரியவில்லை. திகைப்பும் தயக்கமும் சூழ்ந்திருந்தன. அதனல் மென்று மென்று பேசினர்.

'அம்மா, என்னத்தைச் சொல்ல! உங்க பேரிலே வீணப் பழி சுமத்தக் கிளம்பியிருக்காங்க.'

பொன்னம்மா சிரித்தாள். 'நான் நாலுபேரைப் போல உடுத்தாமே, அவளையும் போல இவளையும் போல வீடு வீடாய் போயி வம்பு பேசாம, என் இஷ்டம் போல காலம் தள்றதிலே பல பேரு பலமாதிரியாத்தான் பேசுதாங்க' என்றாள்.

'அது போகுது. ஆனா, இப்ப பெரிய பழி வரப்பாக்குது அம்மா. நீங்க ஜாக்கிரதையா இருந்துக்கிடணும். நீங்க எப்படிச் சமாளிக்கப்போறீங்கன்னு எனக்கு, கவலையாயிருக்கு!' அவர் தயங்கினார்.

அவர் தயக்கமும், புதிர்ப் பேச்சும் அவள் மனதில் பயம் விதைத்தது. 'என்னவே அழிப்பாங்கதை போடுத மாரிதிப் பேசுதேரு. விசயத்தை சொல்லுமேன்' என்றாள்.

'விசயமென்ன! அம்மா நீலாவதி வீட்டிலே பந்தல் பத்தியெரிஞ்சது வாணம் விழுந்தது இல்லேங்கிற சந்தேகம் பிறந்திருக்கு.'

'அட நியாயமே! கல்யாணப் பந்தலிலே கரி முடிஞ்சு போறவன் எவன் தீ வச்சிட்டான்?' என்று பதட்டப்பட்டாள் அவள்.

'அது இன்னும் தெரியலே.'

'அதுக்கும் நீர் சொல்ல வந்ததுக்கும்......'

'விசயமிருக்கு. கல்யாணப் பந்தலிலே எவன் தீ வைக்கப் போறான்? மந்திரத்தினாலே ஏவல் வச்சுதான் பந்தல் எரிஞ்சிரிக்கும்னு, நீலாவதி நினைக்காளாம். நீலாவதியை அப்படி நினைக்கும்படி யாரோ தூண்டியிருக்காங்கோ அதுக்கு நான் உடந்தைன்னு...'

'அட கடங்காரப் பாவிங்க!' என்று மூக்கிலே விரல் வைத்தாள் அம்மாள்.

'என்னைப்பற்றி மட்டுமே இருந்தால் உங்கக்கிட்டே நான் சொல்லவேண்டிய அவசியமே யில்லை, தெரிஞ்சுதா. நீலாவதி மேலே பொறாமைப்பட்டு பண்ணையாரய்யா போக்கு பிடிக்காத ஆற்றாமையினாலே நீங்கதான் ஏவல் வைக்கும்படி என்னைத் தூண்டி...'

பொன்னம்மாளுக்கு ஆத்திரம் வந்தது 'அந்தத் தேவடி யாளா அப்படிச் சொல்லுதா? அவளை ஏன்னு கேட்க ஆளு இல்லாத வாசில்லா அப்படிப் பேசுதா போலிருக்கு' என்று கத்தினாள்.

'அது என்னவோ! இதை விசாரிக்க தாண்டவராய பிள்ளைவாள் என்னைக் கூப்பிட்டாக. நான் அதெல்லாம் இல்லைன்னு சொல்லிவிட்டேன். உங்களுக்கும் இது தெரிய ணும்கிறத்துக்காக சொல்ல வந்தேன்' என்றார் அவர்.

'ஆமா. அந்தத் தேடியா அது எப்படி நாக்கிலே நரம் பில்லாமப் பேசலாம்? அவளுக்கு யாரு சொன்னாங்களாம்?'

'காயங்குளத்தா திருநூறு போட்டுப் பார்த்தாளாம்.'

'அந்த எச்சக்கலை நாயா! அவளை எரு வச்சிக் கொளுத்த! அவளுக்கு எவ்வளவு திண்ணக்கம். அவ கேட்டபோது பட்டுச் சேலையும் ரூபாயும் கொடுக்கலைன்னு அவளுக்குக் கோபம்...'

பொன்னம்மாள் கொதிப்புற்றாள். அவள் வார்த்தை களைக் கொட்டுவதில் அடிமுடி காணமுடியாது அங்கிருந்தால் என்று எண்ணிய பண்டிதர் 'சரி, நான் போயிட்டு வாறேன். வீணாக் கலகம் பண்ண வேண்டாம். இன்னும் எப்படி எப் படிப் போகுதுன்னு பார்க்கலாம்' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார்.

விளக்கின் வீச்சுதேய்ந்து தேய்ந்து இருளோடு குழம்புகிற வாசல் வெளியிலே அவர் கலந்ததும், 'யாரு, பண்டிதரா?' என்று கேட்டுக்கொண்டு ஒரு பெண் வந்தாள். பண்டிதர்

பார்த்தார். 'ஓ! லச்சுமியா? ஏது?' என்று கேட்டார். இவள் அப்பொழுதே வந்து நின்று தங்கள் பேச்சைக் கேட்டிருப்பாளோ என்ற ஐயம் எழுந்தது ஒரு கணம். 'சே, இராது. இப்ப தானே வாரு இவ' என்று தேற்றிக் கொண்டார் பிறகு.

'பண்ணையாரய்யா இருக்காகளா?' என்று கேட்டாள் லக்ஷ்மி. 'நீலாவதியம்மா அவசரமாக அழைச்சுகிட்டு வரச் சொல்லுச்சி......'

'ஐயா இல்லையே' என்று சொல்லி தன் வழி ஏகினார் பண்டிதர்.

லக்ஷ்மி தன் பார்வையை ஓடவிட்டு மீட்ட ஒரு கணத்திலே, பொன்னம்மா பட்டாசாலை நடையோரத்தில் கவலை வடிவினளாய் 'குரு குருன்னு' நிற்பதை கண்டாள். அவளிடம் எதுவும் கேளாமலே திரும்பி விட்டாள்.

செல்லம் பண்டிதரின் நடை வேகத்திலேயே எண்ணச் சுருளும் நீண்டது. மறுபடியும், இப்போது அவருக்கு சிரிப்பு தானாகப் பொங்கி வந்தது. 'இந்தப் பெண்கள்!... இந்த அம்மா தன் மீது வீண்பழி வருதுன்னு தெரிஞ்ச உடனேயே, அந்தத் தேவடியாளன்னு சீறுது! இது நீலாவதி மேலே மருந்துக் குத்தம் சாட்டினபோது, வீண் பழின்னு நினைக்கிலியே! பிறவிக் குணம் அது இதுங்கிறாளே அது சரிதான். என்ன தான் பணம், அந்தஸ்துன்னு இருந்தாலும், அந்தக் குணம் இருக்கு. ஆனா நீலாவதி பரவாயில்லை. எதையும் நல்லத் தெரிஞ்சுக்கிடாமே வீண்பழி போடத் தயாராயில்லேன்னு வது சொல்லியிருக்கா!'

மனித குண பேதங்களை எண்ணிப் பார்க்கும்போது அவருக்குச் சிரிப்பு வந்தது. 'எல்லாரையும் இளிச்சவாயன்களாக் கப் பார்க்கிற அந்தக் கொம்பன்—பந்தலுக்குத் தீ வச்சவன்-யாருன்னு தெரிஞ்சுக்கிடனுமே' என்ற ஆசை அவருக்கும் ஏற்பட்டது. அந்தப் பசி அவர் நடை வேகத்தை அதிகமாக்கியது.

செல்லம் பண்டிதர் வீடு சேர்ந்து, அவசரமாகக் குளித்து விபூதி பூசி, குங்குமப் பொட்டிட்டு, பக்திக் களையோடு பூஜை யறையிலே புகுந்தார். வழக்கம்போல் பூஜை செய்தார். நெய்யூற்றி, தாமரைத் தண்டு நூலின் திரி மிதந்து, அதிலே மலர்ந்திருந்த சுடரிலே தனது பார்வையைப் பதித்தார். அவர் கும்பிடும் விக்ரகத்தின் முன்னிருந்த சிமிழ் ஒன்றைத் திறந்து, கரிய மையை எடுத்து புருவங்களிலே தேய்த்துக் கொண்டு, சுடரைக் கவனித்தார்.

ஆடாது அசங்காது நின்று எரிந்த தீ நாக்கு அவர் பார் வையிலே ஒளிப்பண்பு குன்றி, வெள்ளித் திரைபோலத் தோன்றி, சுத்த சூன்யப் பெரு வெளியாய் துலங்கியது. அதிலே நிழல்கள் நெளிந்தன. உருவங்கள் ஓடியாடின. அவர் சிந்தனையின் வஜ்ர சக்தி உரமேறி உரமேறி, அவர் எண்ணத்தின் வலு ஆட்டிவைக்க, கால வெளியிலே நடந்த நாடகங்களில் அவர் காண விழைந்த நாடகம், தெளிவாகப் புலனுகியது. கண்முன் நடப்பது போலிருந்த அந்த விளை யாட்டில் ஈடுபட்ட உருவங்கள் பெரிதாகி—இனம் தெரியும் அளவுக்கு—வளர்ந்து தோன்றின.

'பந்தல்காரக் கந்தன் தானு!...தாவன்னு குறி தப்ப வில்லை!' என்று சொன்னது மனம்.

அந்த உருவத்தை முன் தள்ளிப் பின் பதுங்கி நிற்கும் உருவம்...அந்த முகம்...அந்த முகம்.. யாரது...யார்!...

உண்மையை நேரடியாகக் கண்ட கண்கள் கூசின. என் றாலும் அவர் நிதானம் குன்றி விடவில்லை. சிந்தனையின் ஒருமை சிதறி, பட்டென்று வெடித்துவிட அவர் வழி வைக்க வில்லை. தனது இஷ்ட தேவதையின் நாமங்களை உச்சரித்த படி, கண்களை மூடி வழிபாட்டிலே ஆழ்ந்து விட்டார்.

பண்டிதர் தியானம் கலைந்து எழுந்தபோது, அவர் முகத் திலே சிரிப்பு நாட்டியமாடியது. அவர் உதடுகள் சிரித்தன; கண்கள் சிரித்தன. அவர் உள்ளமும் சிரித்தது!

'என்ன வேடிக்கையான உலகம்!' என்று எண்ணிச் சிரித்தார் அவர். இந்த நாடகத்தின் காரண நாயகன் யார் என்று எண்ண எண்ண அவருக்கு சிரிப்பு அதிகமாயிற்று. சில மணி நேரங்களுக்கு முன்பு பொன்னம்மா சொன்னாளே—'கல்யாணப் பந்தலிலே கரிமுடிஞ்சு போறவன் எவன் தீ வச்சான்'னு—அது நினைவுக்கு வரவும் பொங்கி வந்த சிரிப்பு கலகலத்து வெடித்தது.

செல்லம் பண்டிதர் வாய்விட்டுச் சிரித்தார். பேய்களோடு உறவாடிப் பேய்ச் சிரிப்பு சிரிப்பதுபோல் கெக்கலித்தார்!

இரவு ஏழு, ஏழரை மணி இருக்கும்.

அன்று சனிக்கிழமையாதலால், சனீஸ்வர பகவானுக்கு எள்ளும் எண்ணெயும் சேர்த்து எரித்துவிட்டு, சிவபெருமானையும் கும்பிட்டு, தனது துயரமெல்லாம் தொலையப் பிரார்த்தித்து வரலாமென்று போன நீலாவதி இன்னும் வீடு திரும்பவில்லை. வேலைக்காரி லக்ஷ்மியும் வீட்டில் இல்லை.

ராஜம் மட்டுமே தனியாக இருந்தாள்.

வீட்டில் குத்துவிளக்கு எரிந்து கொண்டிருந்தது. சிறு விளக்கு ஒன்றை ஏற்றி, திண்ணைச் சுவற்றில் ஆணியில் மாட்டிவிட்டு, சிறிது நேரம் வீதியைப் பார்த்தபடி நின்ற ராஜம் உள்ளே வந்து கட்டிலில் சாய்ந்தாள்.

அவள் மனதில் தெளிவில்லை. உள்ளத்தில் மகிழ்வில்லை. சில தினங்களாகவே அவளுக்கு உள—உடல்—நிலை சரியாகவே இல்லை. சோர்வும் சோம்பற் குணமும் மிகுந்த அசதி. 'சதா தூங்க் வேண்டும்' போன்ற ஒரு உணர்ச்சி. படுத்தாலோ தூக்கம் வராத எரிச்சல். கண்களை மூடினால் சிறு கிரக்கம். கண்களை முத்தமிடும்போது நிழலாடும் எண்ணற்ற கனவு ரேகைகள்.

அவற்றிலே அர்த்தமில்லை—ஆனால் சிலவற்றில் அர்த்தம் இருப்பதாக அவள் நினைத்தாள்.

அவளது இளம் பருவ நினைவுகளின் பனியுரு மலர்ச்சியின் ஆட்டம். புரியாத—இனம் கண்டுபிடிக்க முடியாத—உருவங்களின் கூத்தடிப்பு...

வசந்தப் பூங்காவிலே ஊஞ்சலாடும் மோகினியாக மாறுகிற அவளை இன்பக்கரம் ஒன்று மேலே......மேலும் உயரே... இழுத்துச் சென்று, இன்ப வெளியிலே நீந்த வைக்கும் வேளையிலே கொடுங்கரம் ஒன்று ஊஞ்சலை அறுத்து விடுகிறது. அவள் விழுகிறாள். கீழே விழுகிறாள்...கீழே கீழே, பிடிப்பற்று, நிலையற்று......எல்லையற்ற படுபாதாளம் எதையோ நோக்கி......அவள் விழுகிறாள். அவளுடனிருந்த—அவளை இன்ப எல்லைக்கு இழுத்துச் சென்ற—அன்பின் உருவைக் காணவில்லை. சிரிப்பொலி கேட்கிறது. சிரிப்புதானா அது? பேயலறல் மாதிரி! ஒரு முகம் தெரிகிறது. அம்மாடி...... என்ன பயங்கரம்...எவ்வளவு கொடிய பார்வை...எத்தகைய கோரமான கண்கள்—சூடேறிக் காய்ந்து வெடிப்பேற்படப் போவது போல் தோன்றும் தடித்த உதடுகள்—

அவள் அலறி விடுகிறாள். தன் கழுத்தை நெருக்கும் பேய்ப்பிடியிலிருந்து தப்பப் போராடுவது போல் அவள் கத்துகிறாள்.

இப்படியொரு சொப்பனம்!

சில சமயம், அழகிய பூவின் மீது வண்ணாத்திப் பூச்சி போல் இருப்பதாக அவள் உணர்கிறாள். கூடவே வளர்ந்து சிறகடித்து இன்பமாக விளையாடிய துணையைக் காணவில்லை. அங்குமிங்கும் அலைகிறாள். எங்கிருந்தோ பெரிய அலகுகள். பறவை ஒன்றின் கூறிய அலகு அந்த அழகுப் பூச்சியைக் கொத்திக் கிழிக்க முன்னேறுகின்றன. அவளால் அசைய முடியவில்லை. ஓட இயலவில்லை. உடலையே பிய்த்தெடுத்துக் கோரத் தொனியாக வீசுவது போல புரண்டு வீறிட்டலறிக் கட்டிலில் இருந்து கீழே விழுகிறாள். இப்படி கனவு கண்டாள் அவள்.

அவளது உள்ளம்—சோகம் மூட்டிப் பேய் வேதனையால் குமுறிய இளம் மனசு—மோனத்துயர்ச் சுமையை தூக்கத் தின்போது கனவுச்சுருள்களாக நீள விட்டதோ என்னவோ! ஆசை, கனவு, பருவ ஏக்கம் இவைகளிலே மூழ்கித் திளைத்த பெண்ணுள்ளக் கற்பனை—எதிர்பாராத திடீர்த் தாக்குதலால் அதிர்ச்சியுற்று—விபரீத, விசித்திர நிழல்களை ஆடவிட்டு அமைதியைக் குலைத்தனவோ என்னவோ!

ராஜம் தன் அத்தானைப் பற்றி எண்ணி, மகிழ்ந்து, எழிலியாய் வளர்ந்து வந்தவள் தான். பருவத்தென்றல் சிலு சிலுத்து மணமலர்ச்சி வகை செய்தபோது அவள் அடைந்த மகிழ்வுக்கு அளவில்லைதான். ஆனால் சந்தர்ப்பம் சதி செய்து விட்டதே! பந்தல் எரிந்து, ஊர்வலச் சிறப்பு சிதைந்து வீடு வரவும், ரத்னம் காணாமல் போகவும் மேலும் நடந்த நிகழ்ச்சி களும் அவள் மென்மை உணர்ச்சிகளை மிகவும் பாதித்து விட்டன.

அவள் துவண்டு கிடந்தாள். கண்களைத் தூக்கம் கவ்வு வது போலிருந்தது. நேரம் மெது மெதுவாக ஊர்ந்து கொண் டிருந்தது.

அவள் தூக்கத்தில் அமைதியில்லை. அவள் ஆழ்ந்து துயிலில் சலனமற்று லயித்துப் போகவில்லை. அவள் தூங் கவேயில்லை!

அவள் புரண்டாள். கோடை வெயில் எரிக்கும் சுடுமண லில் துடிக்கும் புழுவென நெளிந்து, புரண்டாள். அவளுக்கு நினைவின் விழிப்பில்லை. எண்ணத்தெளிவில்லை. கவலைச்சாயை படியாத் தூக்கமுமில்லை. விழிப்பு நிலை தேய்ந்து தூக்கத்தின் எல்லைக் கோட்டிலே கலக்கிற ஒருவிதக் கலக்கத்தில்—மயக்க நிலையிலே—கிடந்தாள் கன்னி.

பெருமூச்சு புரளும் அடிக்கடி. அர்த்தமற்ற, விளக்க மற்ற, ஒலி முனகல்கள் சிதறும் சிலசமயம். கால்களை உதைத் தும், கைகளை நீட்டியும், உடலை வளைத்தும்—அடக்க முடி

யாத வலியால் அவதிப்படுகிற ஐந்து மாதிரி அவள் படுக்கையில் கிடந்தாள் நெளிந்து புரண்டாள்.

அவளது சித்தக் கடலிலே அடி முடியற்ற எண்ண அலைக் கொதிப்பு...சரசரென அங்குமிங்கும் அலையும் சிறு மீன் தொகுதிகளின் அலைச்சல் போன்ற உளைச்சல்......கொஞ்சம் கொஞ்சமாகத் தின்னும் கரையான் பூச்சிகள் அரிப்பதுபோல ஒரு அரிப்பு அவள் மூளையிலே...அவளுக்கு மனோ நிலையே சரியில்லை!

அவள் மனத்திரையிலே காரணமற்ற நிழல்கள்...மழை பெய்கிறது. எங்கும் மழைக் கம்பிகள்.

ஆனால் நீரல்ல. ஆலங்கட்டிகள்கூட இல்லை. தீ...தீப் பொறிகள்...தீயின் திவலைகள்...தீ நாக்குகள்! அவளும் அவளுக்கு மாலையிட்டவனும் கதிகலங்கி கலவரத்தோடு, நிற்கிறார்கள். நிற்க முடியாமல் ஓடுகிறார்கள். ஓட முடியாமல் திண்டாடுகிறார்கள்! திடீரென்று அவனைக் காணோம். அவள் பயந்து போய் மிரள மிரள முழிக்கின்ற வேளையிலே, ஒரு முகம் தெரிகிறது...அவளறிந்த முகம். ஆனால் அப்போது அந்த முகத்தை எங்கு பார்த்தோம் என்ற நிர்ணயிக்க முடியவில்லை அவளால். அச்சம் அவளை உலுக்குகிறது...அந்த முகம் பெரிதாகிறது. விகாரமாகிறது தீக்கண்களிலே வெறியொளி...அந்த முகம் நெருங்குகிறது...தீ மழை நின்றுவிட்டதா? தெரியவில்லை...அந்த முகத்தின் ''சாமீப்யம்'' அவளை எரிக்கிறது..அந்தக் கண்களின் பார்வை அவளைத் தீய்க்கிறது..அந்தத் தடித்த உதடுகளின் காங்கை அவளை வாட்டுகிறது...அந்த உருவத்தின் கானல் அவளை அனலாகச் சுடுகிறது! அந்த முகம் நெருங்குகிறது. கொட்டவரும் நட்டுவாக்காலியின் முன்வாய்க் 'கொடுக்குகள்'—'கைகள்'—போன்ற கரிய உதடுகள் அவளது மாம்பழக் கன்னத்திலே அழுந்த விரைகின்றன...கொம்பேரிமூக்கன் பாம்பின் கொள்ளிக்கண்கள் போன்ற அந்தக் கண்கள் தீக்கங்குகள் போல் ஜொலித்தன...அந்த முகம்—அவள் நன்கறிந்த முகம்—அவ

ளுக்குத் திங்கு விளைக்க கீழே குனிந்து...இதோ, வந்து விட்டது...

பேய்க்கனவால் கதிகலங்கிப் போனாள் கன்னி. அமைதி யற்றுப் புரண்ட அவளை யாரோ அமுக்குவது போலிருந்தது. ராஜம் பயந்தே போனாள். தன் பலமெல்லாம் கூட்டி ஓல மிட முயன்றாள்...கத்தினாள்... அது கோரமான ஒலியாக அரு கிருப்பவர்களின் இதயத்தை அறுக்கும் கூச்சலாக—எழுந் தது.

அவள் கண்கள் மலர்ந்தன.

தெளிவில்லாத ஊமை அலறல் போன்ற—சித்திரவதைக் குள்ளாகும் முரட்டு மிருகம் எழுப்பும் தீனக்குரல் போன்ற— கூச்சல் அவளைக்கூட பயமுறுத்திவிட்டது! அவள் கைகள் மேலே விழவரும் பூச்சியை விரட்டப் பாய்வது போல எகி றின. அவற்றின் உணர்விலே ஏதோ மொத்தையாகத் தட் டுப்பட்டது. மனித முகமாகத்தான் தோன்றியது.

பதறி நடுங்கிய அவள் உடல் இன்னும் அதிகமாகப் பத றியது. 'அம்மா' என்று அலறினாள். உயிர் போகும் நிலை யில் கத்துவதுபோல 'அம்மோவ்' என்று கூவினாள். வேக மாக எழ முயன்றாள். அவளால் முடியவில்லை.

வாசல் கதவு வேகமாகத் திறக்கப்பட்டதால் சுவரோடு மோதியது. 'என்னட்டீ...ஏம்மா?—ராசம் ராசம்'—பரபரப் பான குரல்கள்.

நீலாவதி அவசரம் அவசரமாக ஓடிவந்தாள். தெருவில் வரும்போதே அவளை நடுங்க வைத்தது அந்த கூச்சல். வேக மாக வரும்போது 'அம்மா' என்ற அபயக்குரல் எழவும் அவள் ஓடிவந்தாள். பின் வந்த லக்ஷ்மி திண்ணை விளக்கை எடுத்துக்கொண்டு வேகமாக வந்தாள்.

அவர்கள் பார்வையில்—

பதறும் தேகத்தினளாய் கிடந்த ராஜம் தென்பட்டாள். தீய கனாக்கண்டு அலறி விழித்த குழந்தை போல் தோன்றினாள் அவள்.

அதே வேளையில், கட்டிலின்பக்கத்தில் கல்லாய் சமைந்து நின்ற பண்ணையாரும் தென்பட்டார். அந்த இருட்டில் ராஜம் போட்ட கூப்பாடு அவரைக்கூட ஆட்டி உலுக்கிவிட்டது. அவர் தேகம் நடுங்கியது. அவர் முகம் பார்க்கப் பயங்கரமாக இருந்தது.

விளக்கொளியில் அந்த முகத்தைப் பார்த்தாள் ராஜம். அவள் முகம் வெளிறியது. பூச்சாண்டியைக் கண்டு பயந்து அழவும் முடியாமல் பார்வையைத் திருப்பிக்கொள்ளவும் இயலாமல், வேதனையுறும் குழந்தை போல் பார்த்தாள்.

'ராஜம், என்னம்மா செய்யுது? ராஜம் ராஜம்' என்று பதறியடித்து விசாரித்தாள் தாய். கட்டிலருகில் மண்டியிட்டு சேலைத் தலைப்பால் அவள் முகத்தைத் துடைத்தாள். 'அம்மா' என்று கூவி, அம்மையின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள் ராஜம். அவளுக்கு அழுகை பொங்கி வந்தது.

## 17. வெறி

பண்ணையார் சிவகுருநாதபிள்ளை அன்று காலையில் விழித்தெழும் பொழுதே ரொம்ப உற்சாகத்துடன் தான் எழுந்தார். நீலாவதி வீட்டுக்குப் போய், ராஜம் ஓடிவந்து திரும்பிப் போனதைப் பார்த்துவிட்டு அவர் திரும்பியபோது அவரது உற்சாக ஜுரம் சில டிகிரிகள் அதிகரித்திருந்தது! தாண்டவராய பிள்ளை அவரை வலிய அழைத்து வம்பளந்த போது கூட, பண்ணையார்வாளின் உள்ள அரங்கிலே ராஜம் சிரித்து விளையாடிக்கொண்டிருந்தாள்!

'தீ வைத்தவனைக் கண்டுபிடிப்பேன்' என்று தாவன்னா சூளுரை கூறியதும் 'சரி சரி' என்று தலையாட்டிய பண்ணையார் 'இவரு கிழிச்சாரு!' என்று உவகைக் களிப்போடு உள்ளத்துக்கு உபதேசம் செய்துவிட்டு வழி நடந்தார். அவர் கல்யாணப் பந்தல் பற்றி எரிந்ததையோ, மணமகன் காணாமல் போனதையோ பெரிது படுத்தத் தயாராக இல்லை இப்போது. அவர் மன வட்டத்திலே ஆடிக்கொண்டிருந்த நினைப்பெல்லாம் 'ராஜம் என் ராசாத்தி ஆகப் போகிறாள்!' என்பதே.

அதைப்பற்றி அவர் சந்தேகிக்கவே இல்லை. ஏன் சந்தேகப்படவேண்டும்? சரியான சாட்சியாக 'மருந்து' உருண்டை தான் இருக்கிறதே. இன்னும் அது பத்திரமாக வெற்றிலைச் செல்லத்தின் மூலை அறையில் தானே இருக்கிறது!...அதை எண்ணவும் அவருக்கு சிரிப்பு வந்தது 'நீலாவதி எனக்கு மருந்து கொடுக்கத் துணிஞ்சாளே! ஹஹ்! அவளுக்குப் பணத்

தேவை போலிருக்கு இப்போ...பணத்துக்கா பஞ்சம்!... பவுன் பவுனுக் கொட்டமாட்டேனு என் ராசாத்தி மேலே... ராசாத்தி...என் ராசாத்தி...'

பைத்தியம்போல் அவர் அந்தப் பெயரைத் திரும்பத் திரும்ப உச்சரித்தார். தானுகச் சிரித்துக்கொள்வார். 'நீலா வதியைப் பார்த்துவிட்டு அவர் வீடு திரும்பியதும் தனக்கு மண்டகப்படி நிச்சயம்' என்று எதிர்பார்த்திருந்த பொன் னம்மா ஏமாந்துதான் போனுள்! அவர் ஆவேசமுற்று வீடு திரும்பவில்லை அசட்டுத்தனமாகச் சிரித்துக்கொண்டு தான் வந்தார். 'சரிதான்; இன்னும் குட்டு வெளிப்படவில்லை' என்று நினைத்தாள் அவள்.

பண்ணையார் ராஜத்தைப் பற்றியே நினைத்துக்கொண் டிருந்தார். அவளை அவர் பார்த்திருக்கிற சந்தர்ப்பங்களில் எல்லாம் அவள் நின்ற கோணம், நெளித்த நெளிப்புகள், நடந்த குதிப்புகள், சிரிப்புகள் முதலியன அவர் மன ஏட்டிலே பதிவாகியிருந்தன. அவற்றைப் புரட்டிப் புரட்டி நினைத்து மகிழ்ந்தார். 'அவளுக்கு கிளிப் பச்சை வண்ணப் பட்டு ரொம்ப ஜோராக இருந்தது...அது மாதிரி ஒரு பட்டு வாங் கிக் கொடுக்கணும்...ஏன்! கறுப்புச் சேலை கூட அவ உடலுக்கு எடுப்பாகத் தான் இருந்தது...எதுதான் அவளுக்கு அழகா இல்லாமப் போச்சு...அவ ராசாத்தி! கிளி அவ!' இப்படி எண் ணிப் பூரித்துப் போனுர்.

'இருந்தாலுங் எழவு வெட்கம் இன்னும் தொலைய லையே...நீலாவதி கூட இதைப் பற்றிப் பேச்செடுக்கலியே' என்ற வருத்தம் எழுந்தது. 'அது எப்படி அதுக்குள்ளே துணிவா? இல்லையா. இந்த வியாழக்கிழமைதானே தீப் பிடிச்சு, மாப்பிள்ளை காணுமப் போனது, அதுக்குள்ளே மகளை...'

அர்த்தமில்லாமல் சிரித்துக்கொண்டார்.

நினைவுத் தென்றல் வலுத்து, சுழன்று, சூறையாகிக் கொண்டிருந்தது அவர் உள்ளத்திலே. ராசாத்தி...ராசம்... ராசம் என்று அவர் ஜெபித்துக்கொண்டிருப்பது இன்று நேற்று முதலா என்ன! சில மாதக் கணக்கிலா? அதுவுமில்லையே! ராஜம் அழகின் அரும்பு நிலையிலிருந்து வளர்ந்து முழு எழில் சிரிக்கும் மோகன மலராக மாறி வந்ததை உடனிருந்து கவனித்தவர் அல்லவா அவர். அவளது புனித அழகு அவர் உள்ளத்தில் அரிப்பு ஏற்படுத்தி, அதை அணைக்க முடியாத பெரு நெருப்பாக மாற்றிய வேளைகளும் உண்டு. அப்போதெல்லாம் அவர் தன்னை அடக்கிக்கொள்ள அதிகம் கஷ்டப்படவேண்டியிருந்தது. காலம் அவர் ஆசையை அடக்கவில்லை. அவளது வளரும் எழிலைக் காட்டி அவரை வெறியனாக மாறும்படி செய்து வந்தது.

நீலாவதி பண்ணையாரின் ஆசையைப் பூர்த்தி செய்யத் தயாராக இல்லை, தனது மகளை நல்ல நிலைமையில் வைத்துப் பெருமைப்படவே விரும்புகிறாள் என்பது திட்டமாகத் தெரிந்த பிறகும், அவர் மனம் மாறவில்லை. எப்படி அந்தப் புது மலரை மோந்து பார்க்கலாம் என்ற துடிப்புத்தான் மேலெழுந்து வெறியாட்டம் போட்டு வந்தது.

'என்ன ஆனாலும் சரி! பார்த்துவிடுகிறேன். பண்ணைப் பிள்ளைவாளை இந்த நீலாவதி லேசா நினைச்சுப்போட்டா! இவளுக்கு என்ன இத்தனை கெருவம். மகளுக்கு கண்ணாலம் முடிச்சி வச்சு கட்டரசியாக்கப் போறாளாம்! இந்த ஆசை இவளுக்கு எதுக்கு?' சீறி வந்தார் அடிக்கடி.

அந்தச் சீற்றம் இன்று இல்லை. 'நீலாவதி படி தெரியாமக் காலை வச்சிட்டா. நல்ல வேளை! முழுதும் விழுந்து மோறை மூஞ்சியெல்லாம் பாழாகிற முன்னரே சுதாரிச்சிக்கிட்டா. போட்டும்! பழைய விஷயங்களை நான் மறந்துவிடத் தயாரா இருக்கிறேன். ஆனால் அவ...அட! அவளுக்கு என்ன தெரியும்!'—இவ்விதம் நினைத்தார்.

நேரம் ஆக ஆக அவருக்கே தெளிவற்ற ஒரு நிலை அவரை ஆட்டிவைத்தது. உள்ளத்தில் அர்த்தமற்ற குழப்பம். ஏக்கமும் கவலையும் சுழன்று நெளிந்தன. எதையாவது, அல்லது யாரையாவது, பிடித்துக் கசக்கிக் குலுக்கவேண்டும் என்ற கொதிப்பு எழுந்தது. வளர்ந்தது. 'யாரையாவது' என்பது மாறி, ராஜத்தைத் தொட்டுப் பிடித்துக் கட்டி இன்புற வேண்டும் என்ற வெறியாக உரு வெடுத்தது. அவர் உள்ளம் கொதித்தது. உடல் கொதித்தது. தேக நரம்புகளிலே ஓடிய ரத்தம்கூடக் கொதித்துப் புரண்டு கும்மாளியிட்டுச் சீறிப் பாய்ந்ததுபோல் தோன்றியது அவருக்கு, எதிலும் அவர் கருத்து செல்லவில்லை. வேலை ஓடவில்லை. தூக்கமும் வரவில்லை.

நாற்காலியில் சாய்ந்து கிடந்தார். அமைதியில்லை. எழுந்து நடந்தார். குளத்தங்கரைப் பக்கம் போனார், குளிர் காற்றிலே குளிக்கலா மென்று. அந்தி நேரமோ அவர் வெறியைத் தூண்டிவிட்டது.

இருள் மெது மெதுவாக ஊர்ந்து வந்து, லபக்கென்று உலகையே விழுங்கிவிட்டபோது, அவர் உள்ளத்திலே வெறித்தனமான முடிவும் வேரோடிவிட்டது 'அதுதான் சரி. இன்றே, இந்த இரவிலேயே......ராசாத்தி தனியாகத் தானிருப்பா...இப்போ நீலாவதி இருக்கமாட்டாளே! சரி சரி...' - தொடர்பற்ற எண்ணப் பொறிகள் தெறித்தன அவர் மனதில்.

அவர் விரைந்தார், வேட்டை நாய் போல. எலி இருக்கும் இடமறிந்து லாகவமாகப் பதுங்கிப்போய் பாய்கிற பூனை மாதிரி, அவர் சும்மா சார்த்தியிருந்த வீட்டுக் கதவைத் திறந்துகொண்டு, மெதுவாக நடந்தார். கண்களுக்கு இருட்டு பழகிப்போகும் வரை நின்றார். அவர் விழிகள் இருளிலே துழாவின. முத்தொளிச் சிறு விளக்கு வீட்டில் யாரும் இல்லை என்று சொன்னது. ராஜம் தூங்கிய இடத்தையும் காட்டியது. அந்தக் குத்து விளக்கின் சுடர் சிறிது ஆடியது. படபடவெனப் பொறி தெறித்தது. திடுக்கிட்டுப் போனார் சிவகுருநாதப்பிள்ளை.

திரியைச் சரியாக நிமிண்டித் தூண்டிவிட்டதினால், கரடு ஏறிப்போன திரி சடசடத்தது என்று எண்ண முடிய வில்லை அவரால். 'குத்து விளக்கு குதிக்குதே. இது நல்ல துக்கா, கெட்டதுக்கா?' என்றுதான் கேட்டது அவர் மனம்.

'எதுக்கானால் என்ன! இப்போ சரியான சந்தர்ப்பம்' என்றது ஒரு நினைவு.

ராஜம் கிடந்த கட்டிலருகே சென்றார். தயங்கி நின்றார். அவள் புரண்டு, வேதனையால் நெளியும் புழுவென, உருண் டாள். அடிக்கடி வேதனைக் குரல் எழுந்தது. ஏதோ துர்க் கனவு காண்கிறாள் என்று அவருக்கும் பட்டது. கறைபடா அப்பணிமலர் அவருக்குக்கூட அனுதாபஉணர்ச்சி தந்தது ஒரு கணம். ஆனால் வெறியுணர்ச்சி மீறியது. முன்னே கிடந்த அழகு, சுவைக்கப்படாத இனிமை, அவர் உள்ளத் தீயைத் தூண்டியது. மனித அதரம் படாத அந்த மாம்பழக் கன்னத் திலே இன்னொருவனின் எச்சில் படியாத கண்ணாடி விளிம்பு கள் போன்ற அந்த உதடுகளிலே, அவர் முத்திட்டுக் களிக்க வேண்டுமென எண்ணினார்; குனிந்தார். சட்டென முத்தம் பறித்துவிடவில்லை. தான் செய்யப்போகிற தவறு அவர் உள் ளத்தைக் குத்தாமலில்லை...அவர் குனிந்தார்.

அப்போதுதான் கேட்போர் குலை நடுங்கும் கதறலை எழுப் பினாள் ராஜம். கனவிலே தீத்தனம் ருசித்து ஓலமிட்ட அவள் அலறல் எவர் இதயத்தையும் அறுக்கும் ஒலியாக எழுந்தது. பிள்ளைவாள் பதறியடித்து எழுந்து நின்றார். அவர் உடல் நடுங்கியது. அவருக்கு என்ன செய்வது என்றே பிடிபடவில்லை.

கதவு திறந்ததும், நீலாவதி ஓடி வந்ததும், விளக்கோடு லக்ஷ்மி பின்வந்ததும் அவர் எதிர்பாராத கணத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள். அவரைச் சுட்டெரிக்கும் விழியால் பார்த்து விட்டு நீலாவதி பதறியடித்து மகளை அணைத்து மார்புறத்

தழுவிக்கொண்டாள். லக்ஷ்மி அவர் மீது எறிந்த நோக்கு நீயும் ஒரு மனுஷனு!' என்று பழிப்பதுபோல் பட்டது.

'ராசம்...ராசம்' என்று உருகி மருகினுள் தாய். 'தண்ணி எடுத்துவா லச்சுமி. சீக்கிரம்' என்ருள்.

லக்ஷ்மி உள்ளே போனுள்.

ராஜத்தின் கண்கள் திறந்தன. கருவிழிகள் சுழன்று தள்ளாடின. மூடிக்கொண்டன. மீண்டும் அவள் கண் திறந்த போது, பார்வை பண்ணையார் மீது பாய்ந்தது. அவள் முகம் பயம் காட்டியது 'அம்மா' என்று அன்னையை 'ஆவிச் சேர்துக்' கட்டிக்கொண்டாள் ராஜம்.

'நான் இருக்கேனம்மா கண்ணு பயப்படாதே!' என்ருள் அவள். பண்ணையாரைப் பார்த்தாள். 'போயும் போயும் உங்களுக்கு இந்த நினைப்பா வரணும்! உங்க புத்தியும் கெட்டுப் போச்சே!' என்ருள்.

அவள் தாயுள்ளம் பற்றி எரிந்தது. மனமாற ஏசியிருக்கலாம். 'ஏ மிருகமே, நாயே, பேயே' என வைதிருப்பாள் வேறு எவளாகவேனும் இருந்தால்! ஆனுல் நீலாவதி பெருமூச்செறிந்து, கண்ணீர் வடித்தாள் 'யாரை...நொந்து என்ன செய்ய! என் தலையெழுத்து இப்படியெல்லாம் நடக்கு!' என்று முனங்கினுள்.

'உங்களை நம்பி யிருந்தேன்; நீங்க பெத்த மகன்னு நினைக்கப் படாதா ராசத்தை. அவ இந்தக் குலத்திலே பிறந்திட்டா. அதுக்காக, இப்படியா உங்க எண்ணம் போகணும்?' என்ருள் சோகம் கப்பிய குரலில்.

பண்ணையார் தலைகுனிந்து நின்ருர்.

உள்ளே வந்த லக்ஷ்மிக்கு ஆத்திரம் பொறுக்கவில்லை. 'நீங்களும் மனுஷன்னு நிக்கிறேளே இன்னும்! பாவம், சின்னப் புள்ளென்னுகூட நினைக்காம!...நீங்க இப்படி அலையப் போயித்தானே அவ—பொன்னம்மா—கண்டபடி திரியிதா.

செல்லம் பண்டிதன் வீட்டை தேடிப் போகட்டா. அவனே வீட்டுக்கு அழைச்சு உபசாரம் பண்ணட்டுமா அப்படின்னு... உங்களுக்கு மானம் வெட்கம் ரோசம் சூடு சொரணை யிருந்தா...'

'ஏ லச்சுமி, நீ ஏன் வீணுப்போட்டு இரையுதே!' என்று அடக்கினுள் நீலாவதி.

லக்ஷ்மியின் பேச்சு அவர் இதயத்தைச் சுட்டது. அவர் வெளியேற விரும்பினுர். அதற்கு முன்பு என்னவோ நினைத்து தயங்கி நின்முர் 'ஏன் பிறகு கேட்கணும்!' என்று தலையாட்டி ஞர். உதடுகளை கடித்து நின்முர். வாசல்படி வரை சென்றதும், 'ஆமா. நீ...மருந்து வச்சது ஏனும்?' என்றுமுனங்கினுர்.

நீலாவதி அவரையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவர் போக்கு அவளுக்குப் புரியவேயில்லே. அவருக்கு பைத்தியம் பிடித்துவிட்டதோ என்று நினைத்தாள். அவர் பேச்சைக் கேட்டதும் அவள் சொன்னுள்: 'என்ன உங்களுக்கு கோட்டி கீட்டி புடிச்சிருக்கா?'

தணியாத வெறியோடு நின்ற அவருக்கு ஆத்திரம் வந்தது 'நீ என்னை மயக்க லட்டிலே மருந்து வச்சு அனுப்பலே?' என்று கத்திஞர்.

'இது வேறே பழியா எனக்கு. அதுவும் இந்த வயசிலே' என்று தலையில் அடித்துக்கொண்டாள் நீலாவதி 'அப்படி வச்சிருந்தா, கடவுள் என்னைக் கேட்பாரு' என்று புலம்பினுள். அவள் மனம் நொந்து கண்ணீர் வடித்தாள். அவளது சுடு கண்ணீர் ராஜத்தின் முகத்தில் சொட்டவே, அவள் கண் விழித்து — 'அம்மா!' என்ருள், தீனக் குரலில். 'கண்ணு' என்று ஏங்கினுள் தாய்.

அவள் பொய் சொல்லவில்லை என்று தெளிவாகத் தோன்றியது பண்ணையாருக்கு. வெள்ளிக்கிழமை இரவில் பொன்னம்மா நடந்துகொண்டது சந்தேகத்தை எழுப்புவதாகத்

தானிருந்தது. 'நான் கூடக் கேட்டேனே கண்டிச்சு?' என்று அவர் நெஞ்சு உதைத்தது.

பிறகு அவர் அங்கு நிற்கவில்லை. வேகமாக வெளியேறினார். இப்போதுகூட அவரை வெறி ஆட்டி வைத்தது. ஏமாற்றம், அவமானம், கோபம் எல்லாம்கூடி 'பறை மேளம் கொட்ட', அவரைத் தகித்த வெறி தலைவிரித்து பேயாட்டம் போட்டுக்கொண்டிருந்தது. அவர் ஓடாத குறையாக நடந்தார், பொறுமிச் சுழன்று சீறி ஓடும் சூறைக்காற்று போல.

## 18. வெறியின் விளைவு

உணர்ச்சிச் சூறைகள் உந்தித் தள்ள வேகமாக முன் சென்ற பண்ணையார் சிவகுருநாத பிள்ளையின் மனிதத் தன்மை எப்பொழுதோ பறந்துபோய் விட்டது. மிருகத் தனமான வெறிதான் அவரை ஆட்கொண்டிருந்தது. ஏமாற் றப்பட்ட விலங்குபோல, 'பாய்ச்சல் காட்டிக் காட்டி' கோபத்தைத் தூண்டிவிடவே ஆக்ரோஷம் கொண்டு தாக்கக் கிளம்புகிற எருமை மாதிரி, அவர் வேக நடை நடந்தார். அவர் கோபத்தின் இலக்கு அப்பாவி பொன்னம்மா தான்.

அவள் 'மருந்து' வைக்கத் துணிந்த குற்றம் கிடக்கட் டும். அதை மறைக்க ஒரேயடியாகப் பொய் சொல்லி, நீலா வதி மேலே பழியைப் போட்டாளே சண்டாளி! அதனால் தானே தனது ஆசை பெரு நெருப்பாகக் கவிந்து கண்மூடித் தனமான செயலுக்குத் தள்ளியது. இந்தச் செயலும் போகட்டும்! தன் மானத்தை—ஊரில் தனக்கிருக்கும் செல் வாக்கை. பெரிய இடத்து கௌரவத்தை—குழிதோண்டிப் புதைக்கும் முறையிலே நடந்து வந்திருக்கிறாளே கள்ளி! மந் திரம் பார்க்கிறேன், பூஜை பண்ணுகிறேன் என்று தன் கண்ணிலே மண்ணைத் தூவிவிட்டு கண்டபடி திரிந்த கிறுக் கியை என்ன செய்தால் தான் தகாது? துண்டு துண்டாக வெட்டிச் சுண்ணும்புக் காளவாயில் வைத்து நீத்த வேண் டாமா அவளை?...

அவரது மனம் கோபத்தை தணியாமல் பார்த்துக் கொண்டது. ஆத்திரத்துக்கு பின்னணி வாத்திய ஒலிபோல்

கால் செருப்பு 'பட்...பட்' என்று அடிக்க அவர் வீடு நோக்கி விரைந்தார்.

பொன்னம்மா பட்டாசாலை வாசல்படியில் தலை வைத்து, சேலைத் தலைப்பை விரித்து, படுத்துக் கிடந்தவள், செருப்பின் ஓசை கேட்டதுமே பதறி எழுந்தாள். அவளுக்கு இரண்டு தினங்களாகவே மனம் திக் திக்கென்று அடித்துக் கொண்டு தானிருந்தது. அமைதி போயே போய்விட்டது. அவளுக்கு இயல்பான சிறுபிள்ளைத்தனமும், புதுமை மோகமும் ஒடுங்கி விட, பயமும் குறு குறுப்பும் மேலோங்கி அவளை வதை செய்தன.

உண்மை அவருக்குத் தெரிந்தால் தன் கதி என்ன என்று அடிக்கடி நினைத்துக் கலங்கினாள். தாய் வீட்டுக்குப் புறப்பட்டுப் போய் ஒன்றிரு மாதங்கள் அங்கு தங்கிவிடலாமா என்றுகூட எண்ணினாள். பிறகு 'அது வேண்டாம். வீண் சந்தேகத்துக்கு இடமுண்டாகும்' என்று நினைத்தாள். எந்தச் சமயத்திலும் புயல் எழலாம் என்று எதிர்நோக்கியிருந்தாளாயினும், அவள் சாடுகின்ற சண்டமாருதம் அப்படி வந்து பாயும் என்று கருதியவளே அல்ல.

ஆனால், தத்தளிக்கும் அச்சிறு ஓடம் நிலை தடுமாறி அல்லலுறும்படி தான் வந்து மோதியது சூறாவளி!

ஆடிக்காற்றுபோல் வந்த பண்ணையார், செருப்பை அவசரமாக உதறிவிட்டு உள்ளே நுழையும்போதே உறுமினார்: 'தட்டுவாணிச் சிறுக்கி! உனக்கு எவ்வளவு திமிரும் திண்ணக்கமும் இருக்கணும் நீ இப்படிச் செய்வதற்கு...அடிச்சிறியாக கழுதை! . .

அவள் திடுக்கிட்டாள். நடுங்கினாள். வேர்த்து விருவிருத்தாள். ஆனால் மௌனமாகத்தான் நின்றாள்.

'என்னடி குற முழி முழிக்கிறே? மருந்து வச்சு என்னைக் கொன்னு போட்டா, உன் கள்ளப் புருசன் செல்லத்து

கூடச் சந்தோசமா இருக்கலாம்னு நினைச்சியோ? தேவடியாக் கழுதை!' என்று கத்தியபடி, அவளது கருங்கூந்தலைப் பற்றி இழுத்து, கையிலே சுற்றிப் பிடித்துக்கொண்டு முதுகில் இரண்டு குத்துகள் விட்டார். 'என்னை யாருன்னு நினைச்சேடி, சவத்து முண்டை! தொலை...தொலை...நாசமாப் போ!' என்று அர்ச்சனை செய்து, கண் மூக்குத் தெரியாமல் அறைகளும் குத்துகளும் கொடுத்தார். அவருக்கே அலுத்துப் போனதும் 'தொலைஞ்சு போ, மூதேவி' என்று கீழே தள்ளிவிட்டு வெளியேறினார். அப்பொழுதுதான் அவர் உள்ளத்தின் உறுக்கம் தணிந்தது போல் பட்டது!

அவர் கொடுத்த உதைகளையெல்லாம் அலறியும், அழுதும், மௌனமாகவும் ஏற்று, நைந்துபோய், சாக்குமூட்டை போல தரையில் குவிந்து விழுந்த பொன்னம்மா கண்ணீர் வடித்தாள். தன்னை நினைத்து, தனது தாயை எண்ணி, தனக்கு எதிரியாக வந்து முளைத்த நீலாவதியையும் அவள் மகளையும் நினைத்து, செல்லம் பண்டிதனை எண்ணி, தடித்தனமாய் தன்னைத் தாக்கிப் புடைத்த கணவனை நினைத்து அவள் அழுதாள்.

அடிக்கும்போது 'செய்றதையும் செஞ்சு போட்டு பழியை ஒண்ணுமறியாத நீலாவதி பேரிலே போட்டியே, திருட்டு நாயே, நான் தூங்கும்போது குரவளையை நெரிச்சுக் கொன்னு போட்டு, வாயுக்குத்துனாலே செத்துப் போனான்னு நீ சொல்லமாட்டேன்னு என்ன நிச்சயம்?' என்று அவர் கேட்டதை எண்ண எண்ண அவளுக்கு அழுகை பொங்கிப் பாய்ந்தது.

அவள் முட்டாள்தனமாக தன் தாய் புத்திமதி என்று சொன்ன வார்த்தைகளுக்குச் செவி சாய்த்து 'மருந்து' வைத்தது தவறுதான். அதுக்காக வீண் பழி தன்னைச் சேர வேண்டுமா? நெஞ்சாலும் உடலாலும் களங்கமற்ற தன்னை விபசாரி என்று ஊராரும் கணவனும் எண்ணிப் பழிக்க நேர்ந்

ததும் தன் தலையெழுத்துதான் என நினைத்துப் புழுங்கினாள். குமைந்தாள். உளம் கொதித்துப் புரண்டாள்.

'அந்தத் தேவடியா ஒண்ணுமறியாதவளாம்! நான் தான் கல்யாணப் பந்தலுக்கு தீ வைக்க ஏவல் செய்தேன்னு ஏசினானே. அது வீண் பழி இல்லாமல் என்னவாம்? அது இவனுக்கு எங்கே தெரியப்போகுது! முண்டம்! கட்ட மண்ணுக்கு வயசாகிற மாதிரி ஆயிட்டுது. ஆசை விடலே!' அவளுக்குப் பற்றி வந்த எரிச்சலில் அவள் கணவன் என்கிற மரியாதையைகூட விலக்கிவிட்டு நிந்தித்தாள்.

'இன்னும் கிடக்கு! தினம் இவன் கிட்டே அடியும் உதையும் ஏச்சும் பேச்சும் வாங்கணும்! ஊரிலே வேறே சிரிச்சுத் துப்புவாங்க...மானம் மரியாதை எல்லாம் போயிட்டு... என்ன பிழைப்பு வேண்டிக் கிடக்கு'' என்று சலித்துக் கொண்டாள்.

'நல்ல ஊரு வந்தது ஊரு! பொறாமை பிடிச்சவங்க. ஒருத்தி நல்லா இருக்கதைக் கண்டால், ஒன்பது பேருக்கு உடம்பெரிச்சல்! நல்ல நகை நட்டு, போட்டு எல்லாம் அணிஞ்சு சந்தோசமாயிருந்திரப்படாது. அவ ஊரு மேலே போயிட்டா, ஊரு கேதே போயிட்டான்னு தூத்துகிறது! உண்ட சோறு செமிக்கணுமே. வேறே வேலை ஏதாவது இருந்தால்தானே!' இப்படி தன் மனம் போனவாறு ஏசியபடி கீழே கிடந்து கண்ணீர் வடித்தாள்.

சோகம் மூட்டிப்போன அவள் உள்ளம் நெளிந்து நீண்டு ஒரு முடிவை நோக்கி ஊர்ந்து கொண்டிருந்தது...

சிவகுருநாத பிள்ளையும் எண்ணம் எதுவும் ஓடாதவராய் அசைந்து நடந்தார். இருளும் குளிர்காற்றும் ஆள் நடமாட்டமற்ற தெருக்களும் கொதிநிலை குறைந்த உள்ளத்துக்கு சாந்தி தராதா என்று ஏங்கி நடந்தார். அவ்வேளையில் அவர் எதைப்பற்றியும் சிந்திக்கவில்லை. எங்கே போகிறோம்,

என்ன செய்கிறோம் என்ற உணர்வுகூட அவருக்கு இல்லை. கால்போன போக்கிலே நடந்தார்.

பெரிய தெரு, நடுத்தெரு எல்லாம் நடந்து சிவன் கோயில் தெரு மூலைக்கு அவரைக் கொண்டு சேர்த்தன. அந்தப்பாதை பழகிப்போன அவரது கால்கள்! அதுகூட அவருக்குத் தெரியாது...அவர் தன்னினைவில்லாப் பித்தனைப் போல் அடி எடுத்து வைத்தார். எதிரே யாரோ வந்து நிற்பதை உணர்ந்து, யார் என்று அறியும் ஆசையில்லாமலே விலகி நடந்தார்.

அவரை கவனித்து நின்ற ஆள் 'ஐயா' என்றதும்தான் அவருக்கு விழிப்பு ஏற்பட்டது. திடுக்குற்றார். கவனித்து 'யாரு?' என்றார்.

'ஐயா, உங்களைத்தேடி எங்கேல்லாம் அலைஞ்சிட்டு வாறேன்! குளத்தங்கரை, நீலாவதியம்மா வீடு, உங்க வீடு!—'

'ஓ நீயா!' என்றார் பண்ணையார், தாண்டவராயபிள்ளை வீட்டு வண்டிக்காரன் அவன் என்று புரிந்து கொண்டு 'ஏன்? என்ன விசயம்?' என்று முனங்கினார். சனியன், இப்ப இவன் ஏன் வந்தான் என்ற அரிப்பு எழுந்தது அவருக்கு.

'எசமான் உங்களைக் கையோடு அழைச்சிட்டு வரச் சொன்னாங்க, ஐயா. முக்கியமான காரியம்.'

'என்னடா முக்கியம் வந்துட்டுது இந்த நேரத்திலே?' என்று அலுத்துக் கொண்டார் அவர்.

'பந்தக்காரக் கந்தன் எல்லாத்தையும் கக்கிட்டான்... சரியான பூசைக்காப்பு சாமி, அவனுக்கு. அம்மாடியோ!'—

அடி தன் மீது விழுவது மாதிரியே உடலைக் குலுக்கினான் அவன்.

'என்னது? கந்தனை அவர் அடிச்சாரா? அவன் இப்போ எங்கே யிருக்கான்?' என்று துடித்தார் பிள்ளை.

'எசமான் வீட்டிலே தான். அவன் உங்களைக் கேட்டா என்னவோ தெரியும்னு......'

அவனது பேச்சைக்கேட்கும் பொறுமை அவருக்கு இல்லை என்பதை அவர் செயலில் காட்டினார்! தாவன்னாவின் வீடு நோக்கி வேகமாக நடந்தார் பண்ணையார்.

## 19. சிறு வெளிச்சம்

சிவகுருநாதபிள்ளை தாவன்னு வீட்டின் படியில் கால் வைத்தபோது அவர் கண்ணில் பட்டது இதுதான். தாண்ட வராய பிள்ளை ஈஸிச்சேரில் சாய்ந்திருந்தார். அவர் முகத்தில் என்ன உணர்ச்சி பரவிக்கிடந்தது என்று கண்டு பிடிக்க இயலவில்லை, திண்ணை விட்டத்திலிருந்து தொங்கிய கம்பி யில் தூங்கிய அரிக்கன் விளக்கின் ஒளி அவர் முகத்தில் விழுந் திருந்தது, பெரிய உதவி எதையும் செய்துவிடவில்லை

அவருக்கு எதிரே ஒருதூணருகில் கந்தத்தேவன் கைகட்டி தலை குனிந்து நின்றான். திண்ணையோரமாக தாவன்னுவின் சேவகர்கள் நின்றார்கள். அங்கு நிசப்தம் குடியிருந்தது.

சிவகுருநாத பிள்ளைக்கு பழைய தெம்பு இல்லவே இல்லை. அட்டகாசமாகச் சிரித்து 'என்ன தம்பியாபுள்ளே, உங்க காட்டிலே மழை தான்னு சொல்லுங்க! உங்க ராச்சிய மையா, உங்க ராச்சியம்; உங்க பாவட்டா பிரமாதமாப் பறக்குது?' என்று ரகளைப்படுத்த அவருக்குத் திராணியில்லை. அன்றைய முன்னிரவு நிகழ்ச்சிகள் அவரை உலுக்கி எடுத் திருந்தன, பூனையின் கால்விரல்கள் சிறு எலியைக் குதறிக் கிழிப்பது போல. 'அவை போதாதென்று இந்த எழவு தொல்லை வேறு வந்து வாய்க்கணும், அதுவும் இன்னைக்கே!' என்று தவித்தது அவர் மனம்.

அவர் பேசாமல் படியேறி திண்ணையில் போய் நின்றார். அவரை எடை போடுவது போல் கவனித்துக் கொண்டிருந்த

தாவன்னு வறண்ட குரலில் 'வாங்க' என்றார், பிறகு 'உட்காருங்களேன். ஏன் நிக்கிக?' என்றும் சொல்லி வைத்தார். ஏன், என்ன விஷயம் என்று கேட்கத் துணிவில்லை பண்ணை யாருக்கு. அதனால் பேசாமலே யிருந்தார்.

'நீங்கள்ளாம் வீட்டுக்குப் போகலாமே, நேரமாச்சு' என்று சேவகர்களுக்கு உத்தரவிட்டதும், அவர்கள் விடை பெற்றுச் சென்றார்கள். வண்டிக்காரனும் போய் விட்டான். தாவன்னு கேட்டார். 'என்ன அண்ணாச்சி, நீங்களே இப்படிச் செய்தால்? உங்க வயசு என்ன; அனுபவமென்ன; இந்த ஊரிலே உங்களுக்கிருக்கிற மதிப்பு என்ன! எல்லாத் துக்கும் உலை வைக்கிற மாதிரி அல்பத்தனமான ஆசைக்கு இடம் கொடுத்து கெடுத்திட்டீர்களே, உங்களுக்கே நல்லா யிருக்கா?'

சிவகுருநாதபிள்ளை குனிந்த தலை நிமிராமல் குன்றிப் போய் உட்கார்ந்திருந்தார். அவர் என்ன சொல்ல முடியும்?

'அண்ணாச்சி! எத்த நினைக்கிறவன் புளுகு எத்தனை நாள் நிற்கும்கிற மாதிரி ஆயிட்டுது. அடிச்சவுடனே கந்தன் உள்ளதை யெல்லாம் சொல்லிட்டான். அவனை நல்லவன்னே சொல்லணும். அத்தனை பேர் நடுவிலும், பண்ணையார் தான் என்னைத் தீ வைக்கத் தூண்டினாருன்னு குட்டை உடைக்காமல் என்னிடம் தனிமையாகச் சொல்ல நினைச்சானே. உங்க கிட்டே அவனுக்கு இன்னும் பக்தி இருக்கத்தான் செய்யுது!' என்றார்.

பண்ணையார் வாய் திறக்கவில்லை.

'உங்க யோசனைப்படி நீலாவதி நடக்கலேங்கிறதுக்காக, அவள் தன் மகளை பலியிடவில்லை, அதுக்கு மாறாக அவளுக்கு கல்யாணம் பண்ணி மகிழ விரும்பினாள் என்பதற்காக, நீங்க இப்படியா பழி வாங்கணும்? இது பழி வாங்குவது கூட இல்லையே. பிறகு காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்காக

திட்டமிட்டு வேலை செய்த சதிக்காரச் செயல் அல்லவா இது! பந்தலில் தீ வச்சு, கல்யாணம் நடைபெறுவது கடவுளுக்கே பொறுக்கலேன்னு சொல்லி......ஆமா, அந்தப் பையனையும் வேலை தீர்த்திட்டேளா? இல்லை எங்கேயாவது அடைச்சு வச்சிருக்கீகளா?' என்று கேட்டார் தாவன்னா.

பண்ணையார் அழமாட்டாத குறையாகப் புலம்பினார்; 'தம்பி, உங்க காலுலே விழுந்து கும்பிடத் தயாராக இருக்கிறேன். நீங்க இது அம்பலத்துக்கு வராமல் காப்பாத்தி விடனும், என்னமோ புத்தி கெட்ட தனமாகச் செய்திட்டேன். அவ என் சொல்படி கேட்கலே; அவள் மகளையும் குலத் தொழிலில் ஈடுபடுத்தாவிட்டால் போகட்டும், நானே கல்யாணம் செய்து கொள்கிறேன்னு கெஞ்சியும் கூட மறுத்திட்டாளே. அவளுக்கு பாடம் கற்பிக்கணும்கிற துடிப்பிலே செய்துட்டேன். அதுக்கு கடவுளே எனக்கு சரியான பாடம் கற்பித்து விட்டாரு.'

'அது சரி, ரத்தனத்தை எங்கே? அதைச் சொல்லலியே நீங்க' என்று கேட்டார் தாவன்னா.

'சத்தியமாகச் சொல்லுறேன். அது எனக்குத் தெரியாது. அவன் எங்கேயாவது ஓடியிருப்பான். அவன் ஒரு மாதிரி கிராக்கு!' என்றார் பிள்ளை.

'நீங்க சரியான வேலை செய்திர் அண்ணாச்சி, வேறே எவனையும் தீ வைக்கத் தூண்டாமல், பந்தல்காரனையே ஏவிவிட்டீகளே! பேஷ் யாராவது சந்தேகிச்சாலும், கேட்கிறவன் சிரிப்பான் பாருங்க! என்னடா உளறுதே பந்தக்காரன் தன் சொத்துக்குத்தானே தீ வைப்பானா அப்படீன்னு. ஏன், நான் கூட அப்படித் தானே சிரிச்சேன், நம்ம சுந்தரம் கெட்டிக்காரப் பயதான்!' அவர் தன் மகனைப் பற்றி பெருமையாய் பேசியது பண்ணையாருக்கு மகிழ்வையா தரும்! 'சவத்துப் பயலைக் கொன்னு புற மடையிலே பூத்திரணும்' என்ற தவிப்பு தான் அவ்வேளையில் அவருக்கு எழுந்தது.

இருந்தாலும், கெஞ்சினார். 'தம்பி, என்னை நீங்க மன்னிச்சிடணும், உங்க சொந்த அண்ணன் மாதிரி நினைச்சு, என் தவறை மறந்திரணும்னு கும்பிட்டுக் கேட்டுக்கிடுதேன். நான் செஞ்சது தப்பு தான். ஒரு வெறியிலே செஞ்சிட்டேன். இது வெளிக்குத் தெரிந்தா இந்த ஊரிலேயே நான் தலை காட்ட முடியாது, தம்பி!'

'இதை நீங்க அப்பவேல்லா நினைச்சிருக்கணும்?' என்று சிரித்தார் தாவன்னா. 'யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக் கொள்வது மாதிரி' என்கிற பழமொழியை மாரீசம் செய்து 'பன்னி தன்மேலே தானே சாக்கடை பாயும் படி பண்ணிக்கொள்வது போல' என்று சொல்லலாமா என எண்ணினார். அப்படிச்சொன்னால் பண்ணையாருக்கு ஆத்திரம் வந்து விடும் என்று நினைத்தார். 'பன்னி'யை மாற்றி எருமையைப் போட்டு, சாக்கடைக்கு பதில் 'சேறு' சேர்க்கலாமா என்ற சிந்தனை எழுந்தது. அவர் 'எருமை' யாவதையும் விரும்பமாட்டார் என்று கருதி, தாவன்னா பழமொழியே சொல்லாமல் இருந்து விட்டார்!

'அண்ணாச்சி, நீங்க செய்தது வீணாக உங்க வீட்டுக்காரி மேலே பழி விழ இடம் கொடுத்துட்டுது; பொன்னம்மா தான் செல்லம் பண்டிதரிடம் சொல்லி ஏவல் வைத்து மந்திரத்தாலே தீ பிடிக்கும்படி பண்ணிவிட்டாள்னு நீலாவதி சொல்றா லக்ஷ்மி சொன்னா. இவளுக்கு காயங்குளத்தா சொன்னாளாம், பாவம், ஒரு குத்தமும் அறியாத அந்தப் பொண்ணு மேலே வீண்பழி!'

பண்ணையாருக்கு இது புதிய சேதியாகப் பட்டது. 'யானைக்கும் பானைக்கும் சரியாப் போச்சு! பொன்னம்மா தீ வச்சான்னு நீலாவதி ஏச, நீலாவதி எனக்கு மருந்து வச்சிட்டாள்னு பொன்னம்மா அவ மேலே பழியைப் போட...' அவர் சொல் உதிரும்படியாகவே சிந்தித்து விட்டார்.

'என்னய்யா இது! மூடு மந்திரமா இருக்கு! இப்படி வேறே நடந்ததா' என்று ஆச்சரிய முற்ருர் தாவன்ஞு.

ஏனடா எழவு வாய்விட்டுச் சிந்தித்தோம் என்று வருந்திஞர் பண்ணையார். இனி என்ன செய்வது! 'எனக்கு வந்திருக்கிற விணைகளை என்ன சொல்ல! தம்பி, பொன்னம்மாளே எனக்கு வைக்கத் துணிஞ்சு, அது வெளியாகவும் தான் தப்புவிக்க நீலாவதி மேலே பழி சுமத்தி விட்டாள். நல்ல வேளையாக மருந்தை வாயிலே போடுறதுக்கு முன்னரே கண்டு பிடிச்சிட்டேன். இல்லேன்ஞு அது வேறே ஆபத்து. தம்பி, என மானம் கப்பலேறும்படியா பொன்னம்மா நடக்கிருன்னு பேச்சு பிறந்திருக்கு. இந்த நேரத்திலே இந்தத் தீ விசயமும் அம்பலமாஞல் நான் நாஞுக்கு நின்னு சாக வேண்டியது தான். இல்லே, எனக்கு பயித்தியம் பிடிச்சிடும். நீங்க தான் காப்பாத்தனும்' என்று கும்பிட்டார்.

'என்னே என்னய்யா செய்யச் சொல்லுதீக?' என்று விசாரித்தார் தாவன்ஞு பெரிய மனிதன் என்று கௌரவமாக வாழ்கிறவன் கூட எவ்வளவு சின்னத் தனமாக இழிநிலேயில் விழுந்து விடுகிருன் என்பதற்குப் பிரத்தியட்சப் பிரமாணமாக இருந்த பண்ணையாரின் நிலைமை அவருக்கு இரக்கம் உண்டாக்கியது. 'இன்னும் ஒன்றையும் யோசிக்கவேண்டும். இதஞலே ஊரிலே பிள்ளைமாருக்கு இருக்கிற மதிப்பு விழுந்துவிடக் கூடும். பூ, இவ்வளவுதாஞன்னு தேவமாரு நினைச்சுப்போடுவானுக. எல்லோரையுமே கேவலமாக் கருதுவான். அதுக்கும் ஏதாவது ஏற்பாடு செய்யனும்' என்று யோசித்தார் தாவன்ஞு.

'தம்பி! நீங்கதான் காப்பாத்தனும்' என்று மீண்டும் கும்பிட்டார் பண்ணையார்.

'எப்படி அண்ணுச்சி வெளிவராமல் போகும்? கந்தன்...'

'அவனைப்பற்றி நமக்கு பயமே வேண்டாம். அவன் ரொம்ப நல்லவன். அவனை என் தம்பிமாதிரி வளர்த்து வந்

திருக்கிறேன். அவனுக்கு இன்னும் நூறு, இருநூறைக் கொடுத்து கொளும்புக்கு அனுப்பிவச்சால், அங்கே போய் நிறையச் சம்பாதிச்சுக்கிட்டு எப்பவாவது திரும்பி வருவான்.'

'அதுக்கு அவன் சம்மதிக்கணுமே?'

'அவனுக்கு ரொம்ப நாளாகவே ஆசை கொளும்புக்குப் போகணும்னு. இங்கே அவனுக்கு என்ன பெண்டாட்டியா, பிள்ளையா? சொந்தக்காரனுக கூட, நெருங்கியவங்களாக யாருமில்லை.'

இந்த ரீதியிலே அவர்கள் ஆலோசனை வளர்ந்து ஒரு முடிவுக்கு வர இரவு ஒருமணியாகி விட்டது. 'சரி, உங்க இஷ்டம். அப்படியே செய்யுங்க. நான் இந்த ஊர்க்காரனு என்ன? போன வருஷம் நான் எங்கேயோ இருந்தேன். சர்க்காரு உத்திரவு வந்தால், நாளைக்கே நான் குடிசையைக் கிளப்பவேண்டியதுதான். அதுனாலே உங்களைப் பகைச்சுக்கிடுவதனாலே எனக்கு என்ன லாபம்? ஆனா, அண்ணாச்சி நான் உங்களை வேண்டிக் கொள்வது—இது மாதிரி இனிமேல் நீங்க நடந்து கொள்ளக்கூடாது. அப்புறம், பொன்னம்மாளை நீங்க துன்பப் படுத்தவேண்டாம். பாவம், சின்னப் பொண்ணு. அழகு பண்ணி நகை நட்டுப் போட்டு அலங்காரமாத் திரியனும்கிற ஆசை இருக்கிறது. வயசுதானே; பொம்பிளைகளுக்கு வேலை என்ன? அதையாவது வம்பளந்து...பொழுது போகணுமில்லையா! அண்ணாச்சி, ஊரிலே பலபேரு பலவிதமாப் பேசுவாங்க, அதை யெல்லாம் கேட்டுகிட்டு, நீங்க அந்தப் பொண்ணை சந்தேகிக்கப்படாது. அவ வெகுளி. ஆனால் பாபம் செய்யாதவ. அவளைப் பத்தி எங்க வீட்டு இவகூடச் சொன்னா; அவ்வளவுதான் நான் உங்களுக்குச் சொல்லமுடியும்...சரி, போயிட்டு வாங்க. கந்தனையும் கூட்டிக்கிட்டுப் போங்க' என்று சொல்லி எழுந்தார்.

பண்ணையாரும் எழுந்து கும்பிட்டு 'தம்பி, கோபம் இருக்ற இடத்திலே தான் குணமும் இருக்கும்கிறது சரிதான்.

உங்களைப்போலே தங்கமான மனுஷாள் ரொம்ப அபூர்வப் பிறப்பு. உங்களை நான் என்னைக்குமே மறக்கமுடியாது. வாறேன்' என்று புறப்பட்டார். 'வா, கந்தா' என்று அழைத்தபடி கீழிறங்கினர். கந்தத்தேவன் தாவன்னுவின் காலில் விழுந்து கும்பிட்டுவிட்டு, எழுந்து நடந்தான்.

தாவன்னு வெளியே எட்டிப் பார்த்தார்.

குளிர் எங்கும் நிறையும்படி பனி விழுந்துகொண்டிருந்தது. பனிப் புகையினுள் நிழல்களாகக் கலந்து மறைந்த இருவரையும் கவனித்து நின்றூர் கொஞ்ச நேரம். பெருமூச்செறிந்து, உள்ளேபோனர்.

அமைதி நிலைத்துக் கிடந்த அந்தத்தெருவின் நிசப்தத்தை ஒருகணம் குலைத்தது 'டகார்' என்று விழுந்த கதவுத் தாழ்ப்பாளின் ஓசை. மீண்டும் அமைதி...ஆழ்ந்த அமைதி. அமைதியோடு உறவாடிக் குதித்தது பனி.

செங்குளம் ஊர் உறக்கத்தில் ஆழ்ந்துகிடந்தது. அமைதி நிறைந்த அந்தக் கிராமத்தில் பனி நன்கு விழுந்து கொண்டிருந்தது. குளிர், நடுக்குகிற குளிர். கட்டிடங்களுக்குள் கால் கைகளை ஒடுக்கிக் கிடப்பவர்களைக் கூட ஆட்டி நடுக்கி, போர்வையை இழுத்துப் போர்த்தி முடங்கும்படி செய்கிற குளிர்.

வீதிகளில் வெளிச்சமில்லை. பொய்யான காலைத் தோற்றத்தின் வெளிறலோடும் பனியின் புகைப்பண்பும் கலந்திருந்ததனால் மங்கலொளி கூடப் பரவவில்லை. வானிலே, இரவு முழுவதும் கேளிக்கைகளில் ஈடுபட்டுக் களைத்துப் போனவர்களின் வெளிறிய கண்கள் போல, நட்சத்திரங்கள் பூத்துக் கிடந்தன.

வானத்தைப் பார்த்த சிவகுருநாதபிள்ளை 'அது என்னடே கந்தா, விடிவெள்ளியா?' என்று கேட்டார்.

கைகளால் உடலைப் போர்த்து, உடன் நடந்த பந்தல்காரன் சொன்னான்: 'அதுக்குள்ளாற விடிவெள்ளி வந்திரவா செய்யும்? சண்டாள வெள்ளியில்லா இது! மோசம் பண்ணுகிற செட்டி வெள்ளி.'

அவன் இயல்பாகச் சொன்னான். ஆனால் அவர் மனதில் அது தைத்தது ஆசைகாட்டி மோசம் செய்யும் தன் செயலை அவன் சொல் குத்துகிறதோ என்று அரிப்பெடுத்தது. சிறிது நேரம் அவர் பேசவேயில்லை.

இருவரும் மௌனமாக நடந்த பாதையில் பனியின் ஈரம் படிந்தது. 'இந்த வருசத்தைப் போல பனியை நான் பார்த்ததே யில்லே. சே!' என்று சொல்லி பண்ணையார் திரும்பிப் பார்த்தார். 'ஏன் டேய், துண்டை எடுத்துப் போர்த்திக் கிடப்படாது?.. சும்மா மேலே மூடிக்கோ. என்ன மரியாதை பார்க்க வேண்டியிருக்கு!' என்றார். அவன் தயங்கித் தயங்கியே துண்டை இடுப்பிலிருந்து அவிழ்த்து, முக்காடாக மூடி இழுத்துப் போர்த்திக்கொண்டான்.

'கந்தா, என் மேலே நீ வருத்தம் கொள்ளக் கூடாது நான் நினைக்கலே இப்படி நடக்குமென்று. இல்லே, ஏதோ ஒரு காரியத்தை நாம் செய்யிதோம், அது இப்படி முடியும் என்று தெரியுது நமக்கு? அது தான் சொல்லி வச்சான். நாமொண்ணு நினைக்க தெய்வம் ஒண்ணு நினைக்கும்னு. கேட்டியா? ஊம்...என்னவோ இப்படி முடிஞ்சிட்டுது. கந்தா, நீ ......' என்று புலம்பிக் கொண்டே வந்தார் பண்ணையார்.

'அதெல்லாம் ஒண்ணுமில்லே, எசமான். நான் உங்க சோத்தைத் திண்ணு வளந்தவன். உங்க கட்டளைப்படி நடக்க வேண்டியவன். என் ஐயாவையும், எங்க குடும்பத்தையும் நீங்க காப்பாத்தினதுக்கு என் உடலை செருப்பாகத் தைச்சுப் போடலாமே உங்களுக்கு. நீங்க இப்படி என்னைத் தெரியாதது மாதிரி...'

அவன் பேச்சு அவருக்கு அழுகையை உண்டாக்கும் போலிருந்தது. 'அதுக்கில்லே கந்தா...' என்று ஆரம்பித்தார். மனக் குழப்பத்தினலோ, அல்லது என்ன காரணத்தாலோ, பேச்சை அந்தரத்தில் விட்டுவிட்டார். 'கந்தா, பணத்தை பத்திரமா வச்சுக்கிட்டியா?' என்று கேட்டார்.

'ஊம்' என்றான் அவன்.

'சரி, இப்ப இந்த நூறு ரூபா போதும். கொளும்புக்குப் போனதும் எப்ப பணம் வேணும்னு இருந்தாலும் எனக்கு எழுது. என்ன தெரிஞ்சுதா?'

அவன் தலையசைத்தான்.

'அன்னைக்கு உனக்குக் கொடுத்த பணம் பூராவையும்...'

அவன் முடித்தான்: 'அதெல்லாம் கடனுக்கும் கிடனுக்கும் கொடுத்து, அது இதுன்னு தீர்ந்து போச்சு, எசமான்.'

'பரவால்லே, நீ திரும்பி வரும்போது பணக்காரனு யிடுவே, இல்லே. எத்தனை காலம் ஒண்டியா கொளும்பிலே கஷ்டப்படுறதுன்னு நினைப்பு வந்துதுன்னு சொன்னு, ரெண்டு வருசம் திரும்பி வந்திரேன்!' என்றார்.

அவன் 'அதுக்கென்ன எசமான்' என்று சொல்லி வைத் தான்.

'நீ திரும்பி வந்ததும் நம்ம நிலத்திலே ஒரு குண்டு கிடக் குதே—அதுதான் அந்தக் கிணத்தடி வயலு—அதை உனக்கே பட்டா மாத்திக் கொடுத்திருதேன். உனக்கு நான் எவ் வளவு வேணும்னாலும் செய்யலாம், கந்தா.'

குளிர் காற்று சுண்டியடித்து நடுக்கிக் கொண்டிருந்தது. அவர்கள் மெது நடை நடந்து குளத்தின் கரையோரம் வந்து சேர்ந்தார்கள். 'மணி என்ன நாலு இருக்காது?' என்றார் பண்ணையார்.

'காரு வாற நேரம்தான்' என்றான் கந்தன். எதிர்பாராத விதமாகக்காரியங்கள் வளர்ந்து விட்டதை அறிந்து, அவற்றை சுமுகமான ஒரு முடிவுக்குக் கொண்டுவர எண்ணிய பண்ணை யார் கந்தத்தேவனை காரில் ஏற்றி அனுப்பிவிட்டுத்தான் வீடு திரும்புவது என்று கூடவே காத்திருந்தார்.

பனி பலமாகப் பெய்தது. கட்டை வண்டி ஒன்றின் கீழே சக்கரத்தோடு ஒண்டி ஒடுங்கித் கிடந்த நாய் ஒன்று குளிர் தாங்க முடியாமல் ஊமைக் குரலை மெல்லிசாக இழைய விட்டு முனங்கியது. அரசமரத்தில் சடசடவென்று ஒன்றிரு பறவை கள் இறக்கைகளை அடித்துக் கொண்டன.

அமைதியைக் கிழித்து வந்து நின்றது கார் ஒன்று. இருளைக் கிழித்து—பார்ப்பவர்களின் கண் கூசும்படி—கதிரெறியும் கொள்ளிக் கண்கள் மரமண்டையிலே பட்டது. கோயில் சுவரிலே பட்டது அணைந்தது.

'அப்போ கந்தா, போயிட்டு வாறியா? சரி' என்றார் பண்ணையார். 'வாறேன் எசமான்' என்று கும்பிட்டுவிட்டு காரில் ஏறினான் கந்தத்தேவன்.

அதே காரிலிருந்து ஒரு ஆளும் கீழிறங்கியது. இது யாரு? என்று கவனித்தார் பண்ணையார். மோட்டார் அலறிநகர்ந்து ஓடி மறைந்தது.

முன்னால் நகர்ந்தவனை இனம் கண்டு கொண்ட பிள்ளை 'அடே நம்ம ரத்னமா! என்னடே தம்பி எங்கே போயிட்டே? ஊம்...சரி, வீட்டுக்குப் போ' என்று அனுப்பி வைத்தார். 'மாப்பிளைப் பிள்ளையாண்டானும் வந்திட்டான். போகட்டும்!' என்று ஆசீர்வதிப்பது போல் சொல்லிக் கொண்டார்.

அவர் மனதில் படிந்திருந்த பெருஞ்சுமை இறங்கி விட்டது போலிருந்தது. 'சரி, போயி சுகமாகப் படுத்துத் தூங்க வேண்டியதுதான். ரெண்டு மூணு நாளாகவே நல்ல தூக்கமில்லை' என்று நினைத்தபடி வேகமாக நடந்தார்......

இப்போது கீழ்வானிலே விடிவெள்ளி சிரித்து மினுக்கியது. பனி பெய்து கொண்டு தானிருந்தது. அங்கொரு காகமும் இங்கொரு கோழியும் விழிப்புக் குரல் கொடுத்தன.

தாண்டவராய பிள்ளை சுகமான தூக்கத்தில் புரண்டு கொடுத்ததால் நார்க்கட்டில் கிரீச்சிட்டது. வேறு அறையில் படுத்திருந்த பையன் சுந்தரம் 'அம்மா' என்றான். பக்கத்திலே கையால் துழாவிப் பார்த்தும் அன்னையைக் காணாததால் 'அம்மா' என்றான் மீண்டும்,

அதிகாலையிலேயே எழுந்து விடும் பழக்கமுள்ள பார்வதம் கைவிளக்கோடு 'என்னடா, என்ன? படுத்துத் தூங்கேன்' என்று சொல்லி வந்தாள்.

'தெருக்கதவை யாரோ தட்டுறாங்க' என்றான் பையன்.

'சொப்பனம் கண்டிருப்பே, இந்த நேரத்தில் யாரு தேடி வரப்போறா?' என்றாள் தாய்.

'தட், தட்' என்று ஓசை கேட்டது. 'அம்மா...அம்மா' என்ற குரலும் எழுந்தது.

'நான் என்ன பொய்யா சொல்லுதேன்!' என்று கேட்டான் சுந்தரம். தாய் கதவைத் திறக்க விரைந்தாள். கதவு திறந்ததும், காத்திருந்த உருவத்தைக் கண்டு வியப்புற்றாள். 'யாரு, நீலாவதியா? வாம்மா...ஏது இந்த நேரத்திலே?' என்று பரபரப்போடு விசாரித்தாள்.

'பயப்படுவதுக்கு ஒண்ணுமில்லை. அம்மா, நான்ராசத்தை கூட்டிக்கிட்டு வெளியூறு போய் வரலாம்னு நினைச்சிட்டேன். இன்னைக்கே கிளம்பியாச்சு, ஐயா கிட்டே சொல்லிட்டுப் போகணும்னு......என்ன தூங்குதாகளே?' என்று கேட்டாள் நீலாவதி.

'ஏது திடீர்னு!' என்ற பார்வதம், தாவன்னாவை எழுப்பச் சென்றாள். ஆனால் அதற்குள் அவரே எழுந்து உட்கார்ந்திருந்தார், 'யாரது? பேச்சு சத்தம் கேட்டதுமே நான் எழுந்திரிச்சிட்டேன்' என்றார். 'நீலாவதி வந்திருக்கா, அவ ஊருக்குப் போறாளாம்' என்றாள் பார்வதம்.

தாவன்னா எழுந்து பட்டாசாலைக்கு வந்து சேர்ந்தார், 'வா நீலாவதி உட்காரு' என்றார் தான் ஈஸிசேரில் உட்கார்ந்தபடி.

'உட்காரதுக்கு நேரமில்லை. வண்டி போட்டுத் தயாராக நிற்கும். நான் உங்களிடம் சொல்லிவிட்டுப் போகலாம்னு ......'

'ஆயா ஏனிப்படி திடீர்னு?'

'பின்னே என்ன செய்றது? யாரை நம்பியிருந்தேனோ, அந்த மனுசனே தலையிலே கல்லைத் தூக்கிப் போட்டால் ஒருத்தி என்ன செய்ய முடியும்? காப்பாத்துகிறவங்கன்னு சொல்லி வந்து, அவங்களே சோத்திலே விஷம் கலந்து கொடுக்கத் துணிஞ்சு விட்டால், பிறகு அவங்களை எப்படி நம்பமுடியும்? ஏதோ கடவுள் கிருபையாலே ஒரு முறை தப்பியாச்சு. இனிமேலே?' அவள் அழாத குறையாகச் சொன்னாள்.

அவள் எதை குறிப்பிடுகிறாள்; பண்ணையார் தீ வைக்கத் தூண்டியதையா? அது இவளுக்கு எப்படித் தெரிந்தது என்று சந்தேகக் குறிகள் தொடுத்தது உள்ளம். 'ஏன் திடீர்னு இந்த முடிவுக்கு?' என்று கேட்டார்.

'என்னத்தைச் சொல்ல? இந்தப் பண்ணையாரு...' முன் தினம் நடந்ததைச் சொன்னாள் நீலாவதி.

தாவன்ன'இந்த மனுசனுக்கு புத்தி ஏன் இப்படிப்பேச்சு' என்று அங்கலாய்த்தார். பார்வதம் மூக்கில் விரல் வைத்து நின்றாள்.

நீலாவதி கேட்டாள்: 'பந்தலுக்கு கந்தன்தான் தீ வச்சானாமே? இந்தக் கரிக்கொல்லனுக்கு நான் என்ன தீங்கு செஞ்சேனும், என் வயித்தெரிச்சலை அவன் கொட்டிக்கிடதுக்கு? அவனை எங்கே இப்போ?'

தாவன்னா மெதுவாகத்தான் சொன்னார், 'இதெயும் நீ தெரிஞ்சுக்கிட வேண்டியதுதான். பந்தலுக்கு தீ வைக்கும்படி தூண்டியது பண்ணையார்தான்'

தீப்பொறி தெறித்து மேலே பட்டதுபோலிருந்தது நீலாவதிக்கு 'என்னது பண்ணையாரா?' என்றாள் பதட்டமாக.

'ஆமா. அவர் இஷ்டப்படி காரியம் நடக்கலேன்னு. உடனே, பந்தலுக்குத் தீ வச்சு பயமுறுத்திஞல், மாப்பிள்ளே ஓடிப்போயிடுவான்னு...'

'ரத்னத்தைக் கொன்றிருந்தாலும் இருப்பாரு. இவரை எப்படி நம்புவது? இவ்வளவு துணிஞ்சவரு என்னதான்செய்ய மாட்டாரு? இனிமேல் நான் இந்த ஊரை எட்டிப் பார்க்கலாமா, நீங்களே சொல்லுங்க? சொத்துஇருக்கு, பணமிருக்கு.பட்டணத்திலேயே குடியிருந்திடலாம்னு தோணுது' என்ருள். பிறகு 'உங்களே ஒன்னு கேட்டுக்கிடுதேன்.பண்ணேயாருதான் இப்படி இப்படிச் செஞ்சாரு என்கிற விசயம் வெளியே வராமல் பார்த்துக்கிடனும். அவரு செய்த பாவம் அவரோடு! என்னுலே அவருக்கு கெட்ட பெயரு வரவேண்டாம்' என்று கும்பிட்டுக் கேட்டு, விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டாள்.

பனி புகைப்படலமாக எங்கும் பரவிக்கிடந்தது. இப்போது கண்ணுக்குப் புலனுயிற்று. வைகறையின் ஒளி அதற்கு உதவி செய்தது. தெருவில் தனியாக ஒருமாடு தலேயசைத்து நடைபோட்டது. நாய் ஒன்று ஓடியது. வாசல் தெளித்துப் பெருக்குகிறவள் வேகமாகப் போய்க்கொண்டிருந்தாள். நீலாவதி அவசரமாக வீடு வந்து சேர்ந்தபோது, ராஜம் 'அம்மா! அம்மா!' என்று கத்திஞள், இது ஆனந்தக் கூச்சல். 'அத்தான் வந்தாச்சு! அத்தான் வந்தாச்சு!' என்று கூத்தாடிஞள் கன்னி.

அவள் சந்தோஷம் தாயையும் பற்றியது. 'உனக்கு விடிவு காலம் வந்திட்டுதுல்லா. அது போதும்' என்று மகளே வாரி அணேத்துக்கட்டி, உள்ளே அழைத்துச் சென்ருள். ரத்தினத்தைக் கண்டதும் 'என்ன இப்படிச் செய்திட்டே! எல்லாருக்கும் இல்லாத சந்தேகமும் பயமும் கொடுத்து...' என்று தொடங்கிஞள்.

'என்ன செய்றது, அத்தை. நான் இங்கேயே இருந்திருந்தால் உயிரோடு இருப்பேனே என்னமோ! பந்தல் தீ புடிச்

சுதா? ராஜம் மயங்கி விழுந்ததும் நான் வெளியே வந்தேன். கூட்டத்திலே யாரோ என்னை கரகரன்னு பிடித்து இழுத்து, இருட்டோடு இருட்டாகத் தள்ளிக்கிட்டே போனுங்க. யாரு அப்படின்னு கேட்க வாய் திறந்ததும் தலையிலே பலமான குட்டு விழுந்தது. வாயிலே ஒரு அறையும் கிடைச்சுது. 'மூச்சுக் காட்டப்படாது. பத்திரம்! வாய் திறந்தையோ, நீ தொலைஞ்சே!' என்று எச்சரித்து குளக்கரைக்கு தள்ளிப் போனுர்கள். அங்கே போனதும், 'அடே நீ புத்தியாய் பிழைக்கணும்னு சொன்னு நாங்க சொல்றதைக் கேளு. விடியற் காலே காரிலே ஏறி டவுனுக்கு போய் எங்கயாவது தொலைஞ்சு போ. உனக்குத்தான் அந்தப் பழைய தேவடியா இருப்பாதே, போயி கட்டி யழு! போகலையோ, உன்னை இப்பவே இந்தக் குளத்திலே அமுக்கிக் கொன்னுருவோம்னு சொன்னுங்க. நான் என்ன பண்ண முடியும்? கெஞ்சிக் கும்பிட்டு, காருக்குக்கூட காத்திராமல் உடனேயே ஓடிப் போறேன், காரு கண்ட இடத்தில் ஏறிக்கிடுதேன்னு சொல்லி தப்பிச்சோம் பிழைச்சோம்னு ஓடினேன்' என்ருன்.

'இது கூட அந்தப் பாழாப்போற பண்ணையாரு வேலை தான் வேறே என்ன?' என்று சொன்னுள் நீலாவதி. 'நல்லதாப் போச்சு நீ இன்னைக்கு வந்தது. நாங்க கொஞ்ச காலம் இப்படிச் சுத்திட்டு வரலாம்னு நினைச்சோம். ஆனல் பந்தல் பிடிச்சதுக்கு காரணம் பண்ணையார்தான்னு தெரிஞ்சதும், எனக்கு 'சீ'ன்னு போயிட்டுது. இனி இந்த ஊரையே எட்டிப் பார்க்க வேண்டாம். இந்த வீட்டைக்கூட வித்திட ஏற்பாடு செய்திரலாம்' என்ருள்.

'பண்ணையாராம் பண்ணையாறு! அவன் பொட்டுன்னு போக! கரி முடிஞ்சு போறவன் மூளை போன போக்கைப் பாறேன்' என்று திட்டினுள் லக்ஷ்மி, 'நாம் ஏன் அவரைத் திட்டனும்? நம்ம தலையெழுத்து. இவ்வளவு கஷ்டம் நாம படனுன்னு இருக்குதே படாமல் தீருமா. நான் அன்னைக்கு கடவுளை நொந்துக்கிட்டேன். யனிசாளாகச் செய்றதுக்கு

கடவுளு என்ன செய்வாரு? எல்லாம் பூமியிலே இருக்கிறவங்களாகச் செய்துட்டு, பழிபாவத்தைப் போட கடவுளு பேரை சொல்லுதாங்க. ஒருத்தன் செய்ற வினையின் பலனை பல பேரு அனுபவிக்க வேண்டியிருக்கு! என்ன செய்றது?' என்று சொல்லி, 'நேரமாகுது. கிளம்புவோம். ஊம்...ஊம்' என்று துரிதப்படுத்தினாள் நீலாவதி.

ராஜம் 'சிரித்த முகமும் சீதேவியுமாக'க் கிளம்பினாள். லக்ஷ்மி பின்தொடர்ந்தாள். ரத்னமும் வண்டியில் ஏறிய பிறகு, நீலாவதி வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்பினாள்.

வண்டி புறப்பட்டது.

பனி திரையாகக் கவிந்து கிடந்தது. வண்டிக் காளைகளின் கழுத்து மணிக் கலகலப்பும், சக்கரங்களின் ஓசையும் தேய்ந்து ஒடுங்கியது. நீலாவதி வீட்டை, பழகிய தெருவை, அந்த ஊரைப் பார்த்து பெருமூச் செறிந்த வண்ணம் இருந்தாள். அவள் கண்களில் நீர் துளித்தது.

வண்டி செங்குளம் ஊர் எல்லையைக் கடந்தது. புகையெனப் படிந்திருந்த பனி அந்த வண்டியை மறைத்து விட்டது......

நன்றாக விடியவில்லை இன்னும். செங்குளம் ஊர் விழிக்க ஆரம்பித்திருந்தது. தெருவில் முண்டாசுக் கட்டுகளும், பச்சை ரோமப் போர்வை, ஆரஞ்சு நிறச் சால்வை போர்த்திய உருவங்களும் அவ்வப்போது நடந்தன. மரங்களில் பறவைகள் கீச்சிட்டன; கத்திக் கும்மாளியிட்டன. பனி இன்னும் பெய்து கொண்டிருந்தது.

எழுந்து வந்து திண்ணையில் நின்ற சுந்தரம் 'அப்பா, இது என்ன இன்னைக்கி...' என்று இழுத்தான்.

'இன்னைக்கு மட்டுமில்லே. இப்ப கொஞ்ச நாளாகவே இப்படித் தானிருக்கு, இன்னைக்கு நீ சீக்கிரம் எழுந்து விட்டது தான் விசேஷம்' என்றார் 'தாவன்னா' 'அம்மையை சீக்கிரம் காப்பி போடச் சொல்லு, போ' என்றும் சேர்த்தார்.

'இந்த வருஷம் பனி சாஸ்திதான் ஹி ஹி' என்று பற்களைத் தேய்த்து நின்ற செல்லம் பண்டிதரை தாவன்னு அவ்வேளையில் எதிர் பார்க்கவேயில்லை.

'என்ன வே பண்டிதரே, ஏது அதிகாலையிலே?' என்று 'தாவன்னு' கேட்கவும், 'கந்தன் சொன்னனு? பண்ணைப் பிள்ளைவாள் தானே...' என்று தொடங்கினர் பண்டிதர். தாவன்னு 'உஸ்' என்று விரலை உதட்டில் அழுத்திச் சாடை காட்டியதும் பண்டிதர் திடுக்கிட்டு திரும்பிப் பார்த்தார். 'இங்கே யாருமில்லை யில்லா! பின்னே என்ன!' என்று தெம்பாக உச்சரித்தார்.

'அது சரிதான் வே. நமக்கு என்னத்துக்கு பெரிய இடத்துப் பொல்லாப்பு! கந்தனை பண்ணையார்வாள் இடமே ஒப்பிச்சிட்டேன். அவராப் பார்த்து என்னமும் செய்துக்கிடட்டுமே. நமக்கென்ன' என்று சிரத்தையில்லாதவர் மாதிரிப் பேசினர்.

மிகுந்த சாமர்த்தியசாலியான செல்லம் பண்டிதர் பலமாகத் தலையசைத்தார் 'ஆமாமா. அது சரிதாங்கேன்! நமக்கென்னத்துக்கு! என்னமோ சொல்லுவாகளே, விருதுப்பெட்டிக்கு போற சனியனை விலை கொடுத்து வாங்குகிறது அப்படின்னு, அது மாதிரி...'

'ஊம் அது சரி. உமக்கு இது எப்படித் தெரிஞ்சுது?' என்று ஆவலாகக் கேட்டார் தாவன்னு. செல்லம் பண்டிதர் வெற்றிகரமாகச் சிரித்தார். 'என்ன இருந்தாலும் நீங்க அப்படி லேசாப் பேசிவிடப்படாது, நம்ம நாட்டு பழங்கால வித்தைகளைப்பற்றி. அட ஒரு விஷயம் நமக்கு புரியலே என்பதனுலே அந்த விஷயமே இல்லாமப்போயிருமோ. இல்லை கேட்கேன்......' என்று பிரசங்கம் பண்ணத் தொடங்கவே, தாவன்னு 'டக்கென்று' புள்ளி வைத்தார், 'சரிதானம்மா! பிரமாதமாக லெச்சர் அளக்க வந்திட்டீரே!' என்று.

'அது சரிதான். நம்ம பண்ணையாரய்யா.....'

'அவரைப்பற்றி நாம் வீணுக் கவலைப்படுவானேன்!' என்று முடித்தார் தாவன்ஞு.

இதுவரை சும்மாவே தூணருகில் நின்ற சுந்தரம் சொன்ஞன்: 'எனக்கும் அந்தப் பண்ணையாரைப் பிடிக்கவே இல்லே, அப்பா. பெரிய பணக்காரராம்! நம்ம வீட்டு அரிக்கன் லைட்டை இரவல் வாங்கிட்டுப் போஞரில்லா. அது புது லைட்டுதானே. பளபளன்னு என்னமா இருந்துது. அதை வச்சுக்கிட்டு அனுப்பவே இல்லே. திரும்பத் திரும்ப ஆளு அனுப்பின பிறகு ஒரு ஓட்டை லைட்டு—பழம் பாடாவதி லைட்டை—கொடுத்து அனுப்பிச்சிட்டாரு. அதுதான் நீங்க கொடுத்த லைட்டுன்னு வேறே சொல்லிட்டாரு. பெரிய பண்ணையாரராம்! ஹே!'

செல்லம் பண்டிதர் சிரித்தார். தாவன்ஞு 'ஏலே, நீ ரொம்பக் கெட்டுப்போனேடா. இனிமேலாவது சின்னப் பிள்ளையா லெட்சணமா யிரு, போ' என்று கண்டித்து உள்ளே அனுப்பி வைத்தார்.

'ஆமா, இதென்ன இப்படி மூடுபனியா யிருக்கு!' என்று, பேச்சைத் திருப்பிஞர் பண்டிதரிடம்.

'இதுவும் வேண்டியதாகத்தானே யிருக்கு. வெம்பாப் பெய்தால் சம்பா விளையும்னு சொல்லுவாகளோ!' என்ருர் செல்லம் பண்டிதர்.

தெருவைப் பார்த்த தாவன்ஞு வியந்தார்: 'எதிரேவாற. ஆள்கூடத் தெரியாதபடி புகையாக அல்லவா கவிஞ்சிருக்கு நல்ல வெம்பா வந்தது வெம்பா!'

விடிந்தது. சூரியஞெளி கொஞ்சம் கொஞ்சமாகப் பரவியது. எங்கும் வெண் பூந்திரை பரப்பியதுபோல் படிந்திருந்த மூடுபனி இன்னும் கலையவில்லே.

கந்தத்தேவனை காரிலேற்றி அனுப்பிவிட்டு வீடு திரும்பிய பண்ணையாருக்கு தூக்கம் வரவில்லே. தூங்க முயன்றும் முடிய

வில்லே. படுத்துப் புரண்டார் ஊஹும். தூக்கம் எட்டிப் பார்க்கவேயில்லே. அவர் மனம் பொன்னம்மாளேச் சுற்றித் திரிந்தது.

'பாவம்! நல்ல பெண்தான். அவளே அப்படி அடிச்சிருக்க வேண்டியதில்லே. ராத்திரி எங்கே தூங்கியிருக்கப் போரு அவ!' என்று எண்ணிஞர். 'விடிந்துவிட்டது. இன்னும் எழுந்திருக்கலே போலிருக்கே...தூங்கு தாளா? இல்லே கோபித்துக் கிட்டுக் கிடக்கிருளா? பார்க்கலாமே' என்று எழுந்து நடந்தார். இரண்டாங் கட்டு அறையிலே பொன்னம்மா கிடந்தாள்.

'தன்னே மறந்த தூக்கம்போலிருக்கு. நான் முதல்லே வந்தது, பெட்டியைத் திறந்தது, கதவைப் பூட்டிவிட்டு வெளியே போனது, திரும்ப வந்தது—எதுவுமே தெரியாது. அப்படித் தூங்கரு ஊம்!' என்று சிரித்தார். அருகில்போய் நின்று 'பொன்னம்மா' எனக் கூப்பிட வாய் திறந்தார்.

ஆனுல் கூப்பிடவில்லே...கூப்பிடத் தோன்றவில்லே. அவர் மனம் 'திக்திக்'கென்று உதைத்துக்கொள்ளத் தொடங்கியது. அவர் அவசரமாகக் குனிந்து பொன்னம்மாளின் நெற்றியிலே கை வைத்தார். கையைப் பிடித்துப்பார்த்தார். மார்பைத் தொட்டுப் பார்த்தார். 'அடகடவுளே, இது வேறேயா!' என்று தலேயில் கைவைத்து உட்கார்ந்துவிட்டார். அந்த உண்மையை விழுங்குவது சிரமமாகத் தானிருந்தது.

பொன்னம்மா கட்டையாகிக் கிடந்தாள்.

'ஆமாம். இவள் செத்துத்தான் போனுள். ஐயோ பாவமே!' என்று ஒலித்தது அவர் மனம். 'இவள் முடிவு இப்படியா இருக்கணும்!...இப்படிச் செய்வாள் என்று யார் கண்டது? பாவம், நல்ல பெண்ணு சுடு சொல்லேத் தாங்க முடியாதவ...'

நீலாவதியின் குற்றச்சாட்டைத் தாங்க முடியாமல் உடைந்த பொன்னம்மாளுக்கு கணவனின் சுடு சொல் சாட்டையடியாகத் தான் விழுந்தது. அவரது உதைகளைவிட அவர் பேசிய பேச்சுதான் உள்ளத்தை, உடலை அதிகம் தீய்த் தது. ஊரார் இனி பேசப்போகிற வகைமாரிகள் அவள் சித்த வெளியிலே பேய்க்கனவாக பயமுறுத்தியது. அவர் வெறித்தனம் குறையும்வரை தாக்கிவிட்டு வெளியேறியதும், அவள் அழுதுகொண்டே கிடந்தாள். தான் எவ்விதமான பாபமும் செய்யாதிருக்கும்போது வீண் பழி தன்னைச் சூழ்ந் ததே என்று புழுங்கினாள். தன் மீது விழுந்த கறை துடைக்க முடியாதது என்று பட்டது அவளுக்கு. ஊராரின் பழியி லிருந்து விடுபட ஒரே ஒருவழி தன்னை அழித்துக்கொள்வது தான் என்று அந்தப் பேதை எண்ணினாள். கழுத்திலே கயிறு இறுக்கத் தொங்கும் முடிவு அவளுக்கு கோரமாகப்பட்டது. தண்ணீரிலே விழுந்து செத்து மிதப்பது நாலுபேர் கண்டு சிரிக்க வகைசெய்வதாகும் என்று மானமுள்ள நெஞ்சு கூறி யது. தற்கொலை செய்து செத்தபிறகு கூட, உடலை அறுப் பார்களாமே என்று நினைக்கவும் அவள் இதயம் கூசத்தான் செய்தது. இருந்தாலும், வேறு வழியில்லை. மரணத்தின் பின் கூட மானம் வழுவாமல் கரைந்து விடவேண்டுமானால் தன் மீது மண்ணெண்ணெயைக் கொட்டிக் கொண்டு தீ வைத்துக் கொள்ளலாம். அம்மாடி, அதை எண்ணும்போதே காந்தல் எடுக்கிறதே என்று நினைத்தாள். அவள் ஆச்சி சொல்வது உண்டு, பழையச் சோற்றையும் நல்லெண்ணெயையும் அம்மி யில் வைத்து நன்றாக அரைத்தெடுத்துத் தின்றால்கூட அது வும் விஷம்தான். சாகதுக்கு வழியா இல்லை? என்று. ஆனால் இதில் அவளுக்கு நம்பிக்கையில்லை. ஆகவே, பாட்டி சொல் லித் தந்த வேறொரு மருந்தைக் கையாண்டாள்.

பொன்னம்மா, வீட்டின் பின் கிணற்றடியிலே வளர்ந் திருந்த அரளிச்செடிகளின் வேர்க் கிழங்கை அவசர அவசர மாகத் தோண்டி எடுத்து வந்து அரைத்துக் கலக்கிக் குடித்து விட்டாள். அவள் பட்ட வேதனை அவள் குடல் அனுபவித்த

வதை! மானம் தங்குவதற்காக அவள் அதை சகித்துக் கொள்ளவேண்டியிருந்தது! எவ்வளவோ வேதனைக்குப் பிறகு அவளுக்கு விடுதலை கிடைத்தது. அவள் செத்துப் போனாள்.

'பொன்னம்மா செத்துப்போனாள். பாவம்! இந்தப் பெண்ணு இப்படிச் செய்யும் என்று நான் என்ன கண்டேன்!' சிவகுருநாத பிள்ளையின் மனம் அரித்தது. அவர் பெருமூச் செறிந்தார் 'அவ நல்லவ தான். என் கெட்ட காலம் தான் என்னை ஆட்டி வைத்து எல்லோரையும் அலைக்கழிக் குது!'

பண்ணையார் சித்தப் பிரமை யற்றவர்போல் உட்கார்ந் திருந்தார். திடீரென்று அவர் மூளை வேலைசெய்தது. 'சே, இப்படி இருந்தால்? எப்படியாவது பிணத்தை சுடுகாட்டுக்குக் கொண்டுபோயிரணும், வெளிக்கு விஷயம் தெரிந்தா அறுக்க ணும், சோதிக்கணும்னு சொல்லப்போறானுக. சவத்துப் பயலுக. ரெண்டுடின்னு மண்ணெண்ணெயும், கூட ஒரு மூட்டை எருவும் போனாலும் சரி. அவ சடலம் சீக்கிரம் சாம்பலாயிரணும். அதுதான் முக்கியம் ..பிறகு அது வேறே மானக்கேடா?...அட கடவுளே!' என்று எண்ணி, எழுந்தார். அவர் நெஞ்சு உலர்ந்து, தொண்டை வறண்டதுபோல் தோன்றவே, ஒரு டம்ளர் தண்ணீரைக் குடித்துவிட்டு, துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு வெளியே வந்தார்.

அந்த வழியாக வந்த செல்வம் பண்டிதர் கும்பிடுபோட் டார். 'நீலாவதி வீட்டிலே எல்லோரும் ஊருக்குப் போயிட் டாக, மாப்பிள்ளைப் பையன் வந்து கூட்டிக்கிட்டுப் போயிட் டாளும்' என்றார் அவர்.

பண்ணையார் 'சுரத்'தில்லாத குரலில் சொன்னார், 'செல் லம், முதல்லே நீ போயி சுடலையை வரச்சொல்லு. ரெட் டைச் சங்கையும் எடுத்து வரும்படி சொல்லு, மூங்கிலு, எரு எல்லாத்துக்கும் ஏற்பாடு பண்ணணம்ணு சீக்கிரம்'

செல்லம் பண்டிதர் விழித்தபடி நின்முர், அவருக்கு ஒன்றுமே புரியவில்லை. 'ஏன் எசமான்?' என்று விசாரித்தார்.

'பொன்னம்மா போயிட்டா!' என்று புலம்பிஞர். அவர் கண்கள் நீர் சிந்தின. அவர் பார்வை எல்லையற்ற வெளியிலே திரிந்தது.

அப்பொழுது விடிந்து கொஞ்ச நேரமாகிவிட்டது. கீழ் வானிலே செங்கதிரோன் தொடங்கிய யாத்திரை மேலே தொடர்ந்துகொண்டிருந்தது.

செங்குளம் ஊரைக் கவிந்திருந்த மூடுபனி விலகிவிட்டது. சூழ்ந்திருந்த சுவடே இல்லை. தரையில் தான் புல் நுனிகளிலும் சிறு செடிகளிலும் நீர்த்துளிகள் முத்து முத்தாக நின்றன.

பண்ணையார் கண்களைத் துடைத்துக்கொண்டார். என்ருலும் கண்களில் நீர் இல்லாமல் போகவில்லை!

